உங்கள்
வேலையை
இலகுவா
க்குவதற்
கென்றே
தயாரிக்
கப்பட்டுள்ள
அற்புத
சோப்பவுடர்




## வெட்டவெளிச்சமான உண்மை...

# ரின்ஸோ வெளுப்பது அதிவெண்மை

ரின்ஸோ-வெண்மை யென்றால் உண்மையான வெண்மை! சக்தி வாய்ந்த ரின்ஸோவின் நுரை, நூலிழைகளில் மறைந்துள்ள அழுக்குகளையும் அறவே அகற்றிவிடுகிறது. அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டாம். வெள்ளைத் துணிகள் வெள்ளைவெளேரென்றும், வர்ணத் துணிகள் அதிகப் பிரகாசமாகவும் ஆகிவிடும். புடவைகள் முதல் கைக்குட்டை வரை, குடும்பத்தின் சகல துணிகளுக்கும் உகந்தது ரின்ஸோ!

R.26.50 TM

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் தயாரிப்பு

# கல்கி ராஜாஜி இதழ்

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.

குழந்தைகளுக்கு கவர்ச்சி அளிக்க

பின்னியின் **கிட்ஸ்வால்**



எங்களிடமிருந்து வாங்குங்கள்



# வெங்கடேஷ் வஸ்திராலயா

## ரீடெய்ல் ஷோ ரூம்கள்

ஹைகோர்ட் எதிரில் & 2, தம்புசெட்டி தெரு, மதராஸ்-1.

**ஷோரூம் நெ. 1** இங்கு நாங்கள் பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 2** இங்கு நாங்கள் பக்கிங்ஹாம் & கர்னாடிக் மில்லில் உற்பத்தியான துணிகளை மட்டும் விற்கிறோம்.

**ஷோரூம் நெ. 3** இங்கு நாங்கள் பின்னி மில்லில் உற்பத்தியான துணிகளையும் மற்றும் இதர உயர்ந்த ரக துணிகளையும் விற்கிறோம்.

VV 171



மலர் 18
இதழ் 19

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி ௵
கார்த்திகை 22

# பல்லாண்டு வாழ்க!

ராஜாஜிக்கு எழுபத்தொன்பது நிறைந்து எண்பதாவது வயது இந்த டிசம்பர் 8-ம் தேதியிலிருந்து ஆரம்பமாகிறது.

இந்த எண்பதாவது பிறந்த தின விழாவைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்று தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் ஆறு மாத காலமாகவே நமக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருந்தன.

ஒன்றிரண்டு கடிதங்கள் ஆங்கிலத் தினசரிகளில் வந்து, அதற்கு ராஜாஜி கடுமையான பதிலும் எழுதி, இந்தமாதிரி காரியங்களில் ஈடுபட வேண்டாம் என்று எச்சரிக்கை செய்து விட்டார். எனினும் நாம் நமது நேயர்களுக்கு ஆற்ற வேண்டிய கடமையிருப்பதால் மிக மிக அடக்கத்துடன் இந்த இதழை ராஜாஜி இதழாக வெளியிட்டிருக்கிறோம். இதில் அவருடைய பழைய கதை ஒன்றும், கட்டுரை ஒன்றும் மற்றும் சில மணி மொழிகளையும் காணலாம்.

*   *   *   *

பாரத நாட்டுக்கு எத்தனையோ தலைவர்கள் அருமையான சேவை செய்திருக்கிறார்கள். ஆனால் ராஜாஜியின் சேவையில் காணும் விசித்திரம் யாருடைய சேவையிலும் காண முடியாது.

நாட்டு மக்கள் நன்மையைக் கருதி ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டியது அந்த விஷயத்தை ஏற்காமல் மக்கள் மறுக்க வேண்டியது. இருந்தாலும் அதையே ஒரு தடவையல்ல; பலப் பல தடவைகள் சொல்லி எச்சரிக்கை செய்யவேண்டியது. தேசம் தான் போகிற போக்கில் போய் மூக்குடைபட்டு இன்னும் பல கஷ்ட நஷ்டங்கள் அடைந்து, கடைசியில் ராஜாஜி சொன்ன வழிக்குத் திரும்ப வேண்டியது "அன்றைக்கே ராஜாஜி சொன்னார். கேட்டோமில்லை" என்று எல்லா மக்களும் ஒத்துப் பாட வேண்டியது. இதுவே ராஜாஜியின் வாழ்க்கையாகவும், தேசத்தின் சரித்திரமாகவும் இருந்து வருகிறது!

இந்த நியதி சுதந்திரம் பெற்ற பின்னும் நிலவி வருவதுதான் வேடிக்கையாக இருக்கிறது. இதைப் பார்க்கும்போது நமது புராணங்களில் அமிர்தத்தை வாங்கிக் கொள்ளவும் விநியோகிக்கவும் ஒரு கடவுளும், விஷத்தைப் பானம் செய்து ரட்சிக்க ஒரு கடவுளும் ஏற்பட்டாற் போன்ற நிலைதான் தேசத்தில் நிலவுகிறது என்பதை உணர்வோம்.

சென்னை தியாகராஜ நகரில் அவருடைய சின்னஞ் சிறு இல்லத்தில் இருந்து கொண்டு, இன்று உலகம் எப்படிப் போகிறது, நாளை எப்படிப் போகும் என்று கூர்ந்து பார்த்து அவ்வப்போது அறிவுறுத்தி வருகிறார்.

அவர் மொழிகளில் பொதிந்துள்ள உண்மை இன்று சிலருக்குப் புரியாமற் போகலாம். ஆனால் நாளைக்கு நிச்சயம் மக்கள் உணர்வார்கள். அதனால் அவர் நம்மிடையே நீடூழி காலம் வாழ்ந்து நமக்கு வழிகாட்டவேண்டும் என்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் கவியைக் கூறி வாழ்த்துகிறோம்

எங்கும் மக்கள் இடரின்றி இன்பந் துய்க்கும் வழிகண்டு
கங்குல் பகலைக் கணமுந்தான் கடமை யாற்றும் அருளாளா!

**   **

சங்க பாணி திருவருளால் தழைத்து வாழ்க! வாழ்கவே!!

# விஞ்ஞானி ஜே. ஸி. போஸ்

சென்ற வாரம் விஞ்ஞானி ஜகதீச சந்திர போஸின் நூற்றாண்டு விழாவைச் சிறப்பாகத் தேசத்தின் பல பகுதிகளிலும் கொண்டாடினார்கள். ஜே. ஸி. போஸ் உயிரோடிருந்திருந்தால் சென்ற நவம்பர் 30ம் தேதியுடன் நூறாண்டுகள் நிரம்பியிருக்கும்.

தாவர இனத்துக்கும் உயிரும் உணர்ச்சியும் இருக்கின்றன என்பதை முதன் முதலில் நிரூபித்த விஞ்ஞானி ஜே. ஸி. போஸ். தூக்கம், காற்று, மருந்து, உணவு இவையெல்லாம் செடி கொடிகளை எப்படிப் பாதிக்கின்றன என்பதை நுட்பமான கருவிகள் மூலம் நிதர்சனமாகக் காண்பித்தார். அத்துடன், மிருகங்களைப் போலவே, தாவர இனங்கள் மேற்கூறிய விஷயங்களில் இயங்குகின்றன என்பதை நிரூபித்தார். முதலில் ஜே. ஸி. போஸின் புதிய ஆராய்ச்சியைக் கண்டு எள்ளி நகைத்தவர்கள் எல்லோரும் ஜே. ஸி. போஸின் ஆராய்ச்சிக் கூடத்துக்கு வந்து அவர் சோதனைகளை நேரில் பார்த்து விட்டு, அவரைக் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுப் போயிருக்கின்றனர்.



ஜே. ஸி. போஸ் வெறும் ஆராய்ச்சி நிபுணராக மட்டும் இருந்து விடவில்லை. தன்மானம் மிக்க வீரராகவும் இருந்திருக்கிறார். அவர் பேராசிரியராகப் பணியாற்றிய கல்லூரியில் மேனாட்டுப் பேராசிரியர்களுக்கு ஒருவிதமான சம்பளமும் இந்தியப் பேராசிரியர்களுக்கு வேறு விதமான சம்பளமும் கொடுப்பதை எதிர்த்து, மூன்று ஆண்டுகள் சம்பளம் வாங்கிக் கொள்ளாமல் பணியாற்றியிருக்கிறார்!

நமது ஜனாதிபதி ராஜன்பாபு அவர்கள், "ஜே. ஸி. போஸ் சிறந்த சமூகத் தொண்டராக விளங்கினார். சுரங்கத் தொழிலாளர்களிடையே குடிப் பழக்கத்தைத் தவிர்க்க, மதுவிலக்குப் பிரசாரம் செய்யக் கணிசமான நிதியை ஒதுக்கி வைத்தார்" என்று சொல்லுகிறார்.

பாரதப் பிரதமர் நேருவும், "உலக விஞ்ஞானிகளிடையே, ஜே. ஸி. போஸின் பரந்த நோக்கும் நிலவினால் உலகம் உய்ந்து விடும்; அணுகுண்டு யுத்த பீதியிலிருந்து விடுபடும்" என்று கூறுகிறார். பாரத சர்க்கார் ஜே. ஸி. போஸின் நூற்றாண்டு விழாவை, அவர் தலையிட்ட தபால் பில்லைகளை வெளியிட்டுச் சிறப்பாகக் கொண்டாடியிருப்பது பற்றி மகிழ்கிறோம். ஜே. ஸி. போஸின் நினைவு பாரத மக்கள் உள்ளத்தில் என்றும் நிலைப்பதாக!

---

## ராஜாஜியும் உலகமும்!

# ஹிந்தியாட்சி

மத்திய ஆட்சியிலிருந்து ஆங்கிலத்தை வாரி யெறிந்து விட்டு ஹிந்தியை அதன் ஸ்தானத்தில் அமர்த்தும் யோசனையை அரசியலார் விட்டு விடவில்லை. "இங்கிலீஷும் ஹிந்தியும் இரண்டும் இருக்கும்" என்பதெல்லாம் மோசம். நடக்காத காரியம். இரு கட்சியினரையும் சமாதானப்படுத்துவதற்குக் குயுக்தி.

ஒற்றுமை வேண்டுமாயின் பாரத நாட்டின் தற்கால அரசியல் பாஷை அப்படியே இருந்துகொண்டு போக வேண்டும். மத்திய காரியாலயங்களில் ஹிந்தியைப் புகுத்தினால் ஆங்கிலப் படிப்பு சாகும். ஆங்கிலம் மறைந்தால் அறிவு இருட்டடைப்பு நிச்சயம். வெளிச்சம் தரும் ஜன்னல் மூடப்பட்டுப் போகும்.

இதை நான் பல தடவை சொல்லி விட்டேன். இப்போது கமிட்டி ரிபோர்ட்டு தயார் என்றும் இரு மொழி சூத்திரத்தை வைத்து முடிவு செய்திருப்பதாக மர்மம் வெளியிடப்பட்டிருக்கிறது. இது, தெற்கேயும் மற்றப் பிரதேசங்களிலும் மக்கள் தீவிரமாக எதிர்க்கிறார்களா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள ஒரு யுக்தி. மக்கள் எந்த விஷயத்திலும் தற்போது கும்பகர்ண யோகத்தில் இருக்கிறார்கள். எல்லாம் பண்டித ஜவாஹர்லால் நேரு பார்த்துக் கொள்வார் என்று பிரமையில் இருப்பது வழக்கமாகி விட்டது. அபிப்பிராயங்களை வெளியிடவே யாருக்கும் இஷ்டமில்லை. இஷ்டமிருந்தாலும் பயம். ஆனால் மக்களின் அபிப்பிராயத்தை அடக்கி மூடுவதில் பயனில்லை. வினையின் பயன் தவறாது. ஆங்கிலம் போய் ஹிந்தி வந்ததாயின் பாரதத்தின் ஒற்றுமையும் படிப்பும் நாசம் என்பது நிச்சயம்.

இதை இந்தச் சமயத்தில் மறுபடியும் ஒருமுறை சொல்லித் தீர்ப்பது என்னுடைய கடமை. அந்தக் கடமையைச் செய்தேன்.

நம்முடைய சென்னையாட்சியின் இருமொழி மாரீச மான் நம்முடைய துரதிர்ஷ்டத்துக்காக வந்தது. ஹிந்தி பேசுவோரின் மடமை, அவர்களுடைய மொழியபிமானத்திலிருந்து தோன்றியது. அது பெருங் குற்றமல்ல. இந்தத் தவறான திட்டத்தை எதிர்க்க வேண்டிய கடமை நம்முடைய பிரதேச ஆட்சியினது. அதை அவர்கள் செய்யத் தவறியது பெருங் குற்றம்.

30.11.58.

**ராஜாஜியின் வாக்கு**

எல்லாக் காரியங்களுமே நன்மையோடு தீமையும் ஓரளவு கலந்திருக்கும், நெருப்போடு புகையிருப்பது போல். ஆனால் தனக்குரிய காரியத்தைப் பற்று இல்லாமல் கடமை என்று உணர்ந்து அந்த உணர்ச்சியோடு செய்தலே நல்லது. அதில் எந்தக் குற்றமும் உண்டாகாது என்கிறான் கீதாசாரியன்.

உள்ளத்தை எனக்கே அர்ப்பணம் செய்துவிடு. என்னைச் சரண் புகுந்து கவலைகளும் சந்தேகங்களும் நீக்கிக் கொள். இது தர்மமா அல்லது அதர்மமா என்று குழப்பிக் கொண்டு அலைய வேண்டாம். என்னை முழு உள்ளத்துடன் முழு நம்பிக்கையுடன் அடைந்தாயானால் உன்னுடைய குற்றம்குறைகள் எல்லாம் தீர்ந்துவிடும் உன் பாபங்கள் கழிந்து போகும். என்னை அடைவாய். நீ என் அன்புக்கு உரியவன். துயரம் வேண்டாம் என்கிறான். இது பகவான் அர்ஜுனனுக்குத் தந்த வாக்கு.

ப்ரியோஸிமே என்பதும் மா சுச: என்பதும் நம் அனைவருக்கும் பகவான் தந்த வாக்கு. நாம் அனைவரும் அவனுடைய அன்புக்குப் பாத்திரங்கள். அவனைச் சரண் புகுந்தால் மீள்வோம். வாக்குத் தந்திருக்கிறான்.

— கைவிளக்கு

# சென்னைக்குப் புது மேயர்



திரு கமலக்கண்ணன்

1958-59ம் ஆண்டுக்குப் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மேயர் திரு கே. கமலக்கண்ண முதலியாரும் உதவி மேயர் திரு வி. வி. திருவேங்கடம் பிள்ளையும் சென்னைக் கார்ப்பொரேஷன் நடவடிக்கைகளில் ஏற்கனவே ஈடுபட்டுள்ளவர்கள். 1952-லிருந்து திரு கமலக்கண்ணன் கார்ப்பொரேஷன் கட்டடக் கமிட்டியில் அங்கம் வகித்து வருவதுடன், பச்சையப்பன் கல்லூரி டிரஸ்டியாகவும் இதர பொதுக் காரியங்களிலும் ஈடுபாடுடையவர். உயர்ந்த பண்பும் பணி புரிவதில் ஆர்வமும் தளராத ஊக்கமும் கொண்ட நல்ல மனிதர். உதவி மேயர் திரு திருவேங்கடம் பிள்ளை கார்ப்பொரேஷனிலே சுகாதார இலாக்காவில் வேலை பார்த்து ஓய்வு பெற்றுள்ளவர். அத்துடன் கார்ப்பொரேஷன் சுகாதாரக் கமிட்டியில் 1952-லிருந்து செயல் புரிந்து வருகிறார். நல்ல அனுபவசாலி. மண்டல பிரதேசக் கமிட்டிகளில் இருவரும் அங்கத்தினர்கள். பழுத்த காங்கிரஸ்காரர்களாதலாலும் நிர்வாகத் துறையில் கட்சியின் ஆதரவு பூரணமாக இவர்களுக்குக் கிடைக்கும். புது மேயர் பதவி காலத்தில் சென்னை நகரத்தின் வளம் எல்லா விதங்களிலும் பெருகும் என்று நம்புகிறோம். மேயருக்கும் உதவி மேயருக்கும் எங்களது மனமார்ந்த வாழ்த்துக்கள்.



திரு திருவேங்கடம் பிள்ளை

## இனி நீங்கள் வெளியேறலாம்!

அயல் நாடுகளில் வாழும் இந்தியர்கள் அந்தந்த நாட்டுப் பிரஜைகளாக ஆகி விட வேண்டும். இல்லா விட்டால் இந்தியத் தாயகத்துக்குத் திரும்பி விட வேண்டும்; இரண்டுங் கெட்ட நிலையில் இருக்கக் கூடாது என்று நேருஜி ஆலோசனை கூறியிருக்கிறார்.

# அருள் வாக்கு

ஸ்ரீ சங்கராச்சாரியார் - காஞ்சிகாமகோடிபீடம்

எல்லாச் சக்திகளுக்கும் காரணமாக, ஆதார சக்தியாக இருப்பது பராசக்தி. அம்பிகை, அன்னை, அம்பாள், ஆதிசக்தி என்ற பதங்களெல்லாம் இந்த முதற் பொருளைத்தான் குறிக்கின்றன. எல்லோரும் தங்கள் க்ஷேமத்துக்காகவும் லோக க்ஷேமத்துக்காகவும் அம்பாளைத் தியானம் பண்ண வேண்டும். எனக்கு முக்கியம் அம்பாள். அம்பாளின் சரணாரவிந்தத்தைத்தான் நான் தியானம் செய்து கொண்டிருக்கிறேன், உலக க்ஷேமத்துக்காக.

அம்பாளும் ஸ்வாமியும் சேர்ந்து அர்த்தநாரீச்வரராக இருக்கிறார்கள். லோக க்ஷேமத்தின் பொருட்டு ஒரே பிரம்மம் பரமசிவனாகவும் மகாவிஷ்ணுவாகவும், பிரம்மாவாகவும் இருந்தாலும் இவையெல்லாம் ஒரே ஸ்வரூபம். ஒரே பரமாத்மா மூன்று ரூபத்தை எடுத்துக் கொண்டு இவ்வாறு லோகத்துக்கு அனுக்ரஹம் செய்வதற்காகவே செயல்படுகிறது. "பிரம்ம விஷ்ணுசிவாத்மிகாயை" என்று அம்பாளுக்கு ஒரு பெயர். இது ஸரஸ்வதி அஷ்டோத்தரத்தில் வருகிற ஒரு நாமா. இதே போலத்தான் லக்ஷ்மி அஷ்டோத்தரத்திலும் ஒரு நாமா இருக்கிறது. லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் அம்பாள் தான் பிரம்ம ரூபமாக சிருஷ்டித்தொழிலைச் செய்பவளாகவும் கோவிந்த ரூபிணியாகக் கோப்த்ரீயாகவும், ருத்ர ரூபமாக ஸம்ஹாரரூபிணியாகவும் விளங்குகிறாள் என்ற கருத்து காணப்படுகிறது. அவள் ஒருத்திதான் இப்படி விளையாடுகிறாள். இதைப் புரிந்து கொண்டு அவளுடைய சரணாரவிந்தத் தியானம் பண்ணி நம் மதத்தை ரட்சிப்பது நமது கடமை.

நாம் எல்லோரும் சகோதர சகோதரிகள் என்று வெறும் பேச்சளவில் சொல்லிக் கொண்டிருந்தால் போதாது. இந்த உணர்ச்சி உண்மையிலேயே வர வேண்டும். இது ஏற்பட வேண்டுமானால் நம் எல்லோருக்கும் ஒரே தாய் தகப்பன் தான் என்ற உண்மை தெரிய வேண்டும். இது எப்படி உண்டாகும்?

"ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேச்வரௌ" என்று காளிதாசன் சொன்னான் என்று நாம் காதால் கேட்கிறோம். இரண்டு பேருக்கு. நான்கு பேருக்கு அம்மா அப்பாவாகப் பலர் இருக்கிறார்கள். எல்லோருக்கும் அம்மா அப்பா யார்? பார்வதி பரமேச்வரர்கள் தாம் என்பதை உண்மையாகப் புரிந்து கொண்டு விட்டால் நாம் எல்லோரும் அவர்களுடைய குழந்தைகள், சகோதர சகோதரிகள் என்ற எண்ணம் வந்து விடும். சாட்சாத் ஜகன்மாதாவைத் தெரிந்து கொள்ளுகிறவரையில் துவேஷம், விரோதம், வெறுப்பு முதலியவை இருக்கும். அவளைத் தெரிந்து கொண்டு விட்டால் நமக்குள் துவேஷம் வராது.

நம்மிடையே குறை இருக்கும் வரையில் பிரசாரம் பண்ண முடியாது. குறை நீங்கி நிறைவு வந்து விட்டால் பிரசாரத்துக்குத் தேவை இல்லாமல் போய் விடும். நான் இப்படி உபந்தியாசம் செய்யும் போதெல்லாம் இம்மாதிரி நினைவுகள் வருகின்றன. பேசும்போது, பேசிக் கொண்டே என் நினைவுகளையும் சுத்தப் படுத்திக் கொள்ளுகிறேன். நினைக்கிற படியே நினைப்பதையெல்லாம் செயலாக்க வேண்டும் என்று அம்பாளைப் பிரார்த்திக்கிறேன். எப்போதெல்லாம் குறை தோன்றுகிறதோ, அப்போதெல்லாம் அம்பாளிடத்தில் முறையிட்டு அந்தக் குறை இல்லாமலிருக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொள்கிறேன். முதலில் நாம் தப்பு பண்ணாமலிருந்தால் போதும். அனுஷ்டானங்களை விடாமல் செய்து கொண்டு அவளுடைய சரணாரவிந்தங்களைத் தியானம் செய்து கொண்டிருந்தால் போதும். ஒருத்தருக்கும் கஷ்டம் வராது.

யாராவது ஒரு தலைமுறையில் ஒரு மகரன் தோன்ற மாட்டாரா என்று தான் பரம்பரையாக உபதேசம் செய்து வருகிறோம். உபந்தியாசங்கள் பண்ணி வருகிறோம். படிக்கத் தெரியா விட்டாலும் நம்முடைய குழந்தைகளுக்காவது பயன்படாதாவென்று புத்தகங்களையெல்லாம் பத்திரமாக லைப்ரரியில் பாதுகாத்து வைக்கிறோமல்லவா? அது போலவே பிரசாரங்களும் யாருக்காவது பயன்படும். எல்லோரும் காளிதாசனைப் போல் ஜகத்துக்கெல்லாம் மூலமாக இருக்கிற சக்தியைத் தாய் தந்தையாகக் கொண்டு விட்டால் ஆயிரம் மதங்கள் வேண்டாம்; ஆயிரம் சச்சரவுகள் வேண்டாம் அந்த அம்பாளுடைய சரணாரவிந்தத்தைத் தியானம் செய்தாலேபோதும்.

LIC 43 TAMIL

# அவன் எதிர்காலத்தைக் காப்பாற்ற இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்

அவன் வருங்கால க்ஷேமத்தின்
பொறுப்பை ஏற்க
ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் உதவட்டும்







**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

டிவிஷனல் ஆபீஸ் :

பிருஹின் பில்டிங், 864/366 நேதாஜி ரோடு, சென்னை - 1

கிளைகள் : சென்னை சிதம்பரம் நெல்லூர் - வேலூர்

[ஸ்ரீமான் நவரத்ன ராம ராவ் அவர்களுக்கும் ராஜாஜிக்கும் ஏற்பட்ட நட்பு இன்று நேற்று ஏற்பட்டதல்ல. அறுபத்தாறு ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்டது. அந்த நட்பு அன்றிலிருந்து நன்கு பூத்துக் காய்த்துக் கனிந்து இன்றும் வளர்ந்து வருகிறது. அவர்கள் தங்கள் நட்பை 'நட்பு' என்று கூடச் சொல்லிக் கொள்வதில்லை. "காதல்" என்றே சொல்லிக் கொள்கிறார்கள். அப்படிப்பட்ட உத்தம நண்பர், ராஜாஜியைப் பற்றி எழுதியுள்ள கட்டுரை நட்பின் சிறப்பையே விளக்குவதாக இருக்கிறது. — ஆசிரியர்]

# நாற்பத்தாறு ஆண்டுகளுக்கு முன் ராஜாஜியுடன் நான்கு நாள்

ஸ்ரீ நவரத்ன ராமராவ்

பல ஆண்டுகளுக்கு முன்பு (ஷிமோகா) சிவமுகா ஜில்லாவில் ஸப் டிவிஷன் அதிகாரியாக நான் வேலை பார்த்து வந்தபோது என் வாழ்க்கையில் பெருந்துயர சம்பவம் நிகழ்ந்துவிட்டது. அப்பொழுது என்னைத் துக்கம் விசாரிக்க வருபவர்களிடமிருந்தும், தெரிந்தவர் உற்றார் உறவினரிடமிருந்தும் தப்பியோடினால் தேவலை போலிருந்தது. துக்கம் விசாரிப்பது என்பது ஏற்கனவேயுள்ள பசும் புண்ணைக் குத்திக் கிளறுவதுபோல் அல்லவா? இவர்களிடமிருந்து தப்பித்து ஓடி, என் வேலையில் தஞ்சமடைந்தேன். வேலையைப் போன்ற இதமளிக்கும் மருந்து என்ன இருக்கிறது! அதுவும் ஜமாபந்தி சரியாக நடத்தினால், அது உள்ளத்தையும் உடலையும் பரிபூரணமாகக் கவர்ந்துவிடக்கூடிய வேலையாகும். ஏனெனில் ஜமாபந்தி என்பது கிராம மக்களின் ஒரு வருஷ வேலையைப் பரிசீலனை செய்வது மட்டுமல்ல; அவர்களுடைய பிரச்னைகளுக்கும் பரிகாரம் காண வேண்டிய வேலையுமாகும். ஆகவே, இந்த ஜமாபந்தி வேலையைச் செய்ய, எனது மேற்பார்வைக் குட்பட்ட சென்னகிரி தாலுக்காவில், பிரதான சாலையை விட்டு, பல மைல்கள் தள்ளியுள்ள ராஜுகௌட ஹள்ளி என்ற கிராமத்துக்கு வந்துசேர்ந்தேன். அங்கே ஒரு கூடாரத்தில் நான் தங்கியிருந்தேன்.

ஒருநாள் என்னுடைய முற்பகல் வேலையை முடிக்கும் சமயம் என் கூடாரத்துக்கு எதிரில் வயல் வரப்பின் மீது சைக்கிளைத் தள்ளிக்கொண்டு ஒருவர் நடந்துவந்து கொண்டிருந்தார். ஆள் அடையாளம் புரிந்து கொள்ளக்கூடிய தூரத்தில் வந்ததும் நான் அடைந்த ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் என்னென்பேன்! அப்படி வந்தவர் ராஜாஜி. அவர் உடம்பெல்லாம் புழுதி; வேர்வை. ஒரே அடியாய்க் களைத்துக் காணப்பட்டார். என்றாலும் தம் நெஞ்சுறுதியை உலகில் எதுவும் பணிய வைத்துவிட முடியாது என்ற பெருமிதப் புன்னகை எப்பொழுதும் போல் அன்றும் அவர் முகத்தில் காணப்பட்டது. எனது துயரத்தினிடையே அவரை அடிக்கடி நினைத்ததுண்டு. 'அவர் இங்கு வர மாட்டாரா, அவர் குரலைக் கேட்க மாட்டோமா?' என்று ஏங்கியதுண்டு. ஆனால் சேலத்திலிருந்து சிவமுகா எவ்வளவு தூரத்திலிருக்கிறது; இவ்வளவு தூரப் பிரயாணம் செய்ய அவருக்கு எங்கே நேரம் கிடைக்கப் போகிறது என்று நினைத்தேன். இருந்தாலும் அவர் வந்திருக்கிறாரே, அதுவும் யாருக்கும் தெரிய முடியாத ஒரு கிராமத்துக்கு! சிவமுகையிலிருந்து நாற்பது மைல் தள்ளியிருக்கிறது இக்கிராமம். இந்தக் கிராமத்துக்கு வரும் பாதை மிகமிக மோசமான பாதை. நடுவில் புலிகள் வாசம் செய்யும் காடு வேறு. இவற்றையெல்லாம் கடந்து வந்திருக்கிறார்! முதலில் அவர் சிவமுகைக்குச் சென்றிருக்கிறார். அங்கிருந்து நான் சென்னகிரிக்குப் போயிருக்கிறேன் என்று அறிந்ததும் சென்னகிரி தாசில்தாரிடம் சைக்கிளை இரவல் வாங்கிக் கொண்டு அந்தக் காட்டுப்பாதையைக் கடந்து வந்திருக்கிறார் என்பது பின்னர் எனக்குத் தெரிந்தது. சென்னகிரியில் என்னைக் காணவில்லை என்றதும் சற்றும் சோர்வடையாமல் என்னைக் கண்டு பிடித்தே தீருவது என்று வந்திருக்கிறார். இதைக் காதலியைத் தேடிவரும் காதலரைப்போல் வந்திருக்கிறார் என்று சொல்லலாம். ஆனால் அதைவிட, ஒரு ஆங்கிலக் கவிஞன், ஆத்மாவைத் தேடி ஆட்கொள்ள இறைவன் ஒரு வேட்டை நாயைப் போல் துரத்தி வருகிறான் என்று சொல்லுகிறான். அந்த வேட்டை நாயைப் போல் என்னைத் துரத்தி வந்தார் என்று சொல்வது தான் பொருந்தும்.

அவர் என்னுடன் நான்கு நாட்கள் தங்கியிருந்தார். அந்த நான்கு நாட்களும் மறக்க முடியாதவை. அப்பொழுது என்னிடத்தில் 'திடீரென்று தோன்றிய புதுப் பொறுமையையும் அன்பையும் அனுதாபத்தையும் கண்டு ஜமாபந்திக்கு வந்த அந்தக் கிராம மக்கள் வியந்திருப்பார்கள். ஆனால் இதற்குக் காரணம் யார் என்பது அவர்களுக்கு என்ன தெரியும்?

எனக்கு ஏற்பட்டிருந்த துயரத்தைப் பற்றி அவர் என்னிடம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அந்தத் துயரம் அவர் உள்ளத்தில் இடைவிடாது இருந்திருக்கும். அதை வெளியில் காண்பித்துக் கொள்ளாமல், அன்பினாலும் அனுதாபத்தாலும் என்னைப் போர்த்திவிட்டார். அது எவ்வளவு இதமாக இருந்தது என்பது சொற்களால் சொல்லக் கூடியதல்ல.

அந்தச் சமயத்தில் நிகழ்ந்த இரண்டு சம்பவங்கள் எனக்கு இன்னும் நினைவிருக்கின்றன. ஒரு நாள் ராஜாஜி, "சர்க்காரால் பகிஷ்கரிக்கப்பட்ட புஸ்தகம் ஒன்று உங்கள் பார்வைக்குள் வந்தால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டார்.

"இதில் என்ன சந்தேகம்! அதைப்படித்துக் கிழித்தெறிவதற்கோ அல்லது சுட்டு எரிப்பதற்கோ போலீஸார் வசம் ஒப்புவிப்பேன்."

மறுநாள் காலை என் மேஜைமீது, சாவர்க்காரின் '1857-ம் வருஷத்திய சுதந்திரப் போர்' என்ற புஸ்தகம் கேட்பாரற்றுக் கிடந்தது. சரித்திரம் என்ற வகையில் முற்றிலும் சரியாக இல்லாவிட்டாலும், உள்ளத்தை உருக்கக்கூடிய புஸ்தகமாகும். அதை நானும், இன்னும் ஆங்கிலம் தெரிந்தவர்கள் பலரும் படித்தோம்.

அடுத்த முகாம் தேவனூர் என்று நினைக்கிறேன். இல்லையேல் அதைப்போன்ற பெயருள்ள வேறு ஒரு கிராமமாக இருக்கவேண்டும். அங்கு என் முற்பகல் வேலையெல்லாம் முடித்துக் கொண்டு வந்தபோது, நான் தங்குவதற்கு வேண்டிய கூடாரம் போட்டு வைக்கவில்லை. எனக்குக் கோபம் வந்து விட்டது. அங்கிருந்த குடியானவர்களைக் கோபித்துக் கொண்டு விட்டேன். இந்தச் சம்பவம் ராஜாஜியை எனக்கு ஒரு பிரசங்கமே செய்ய வைத்து விட்டது.

எனக்குக் கூடாரம் போட்டு மற்ற வசதிகள் செய்து தரும் குடியானவர்கள் யாரும் கூலிக்கு வேலை செய்யவில்லை. நீண்ட கால பழக்கத்தின் காரணமாகவும், சம்பிரதாயத்தின் காரணமாகவும் செய்து வருகிறார்கள் என்பதை நினைவூட்டினார். ராஜாஜி சொல்வதிலுள்ள நியாயத்தை, சாப்பாடு எல்லாம் ஆகி ஓய்வு எடுத்துக் கொண்ட பின்னர்தான் உணர்ந்தேன்.

நாங்கள் கடைசியாகச் சாந்தபென்னூர் என்ற ஊரில் முகாமிட்டோம். இது சரித்திரப் புகழ் வாய்ந்த ஊர். சிவாஜி மகாராஜாவின் தந்தை ஷாஜி பான்ஸ்லேயின் ஜாகீரில் முக்கியமான ஊராக இருந்தது. அந்த ஊரில் ஒரு அழகான சத்திரத்தில் ஒரு விசாலமான அறையை எடுத்துக் கொண்டு தங்கினோம். ஒருவேளை, அந்தக் கட்டடம் முன் காலத்தில் ஜமீன்தார்களின் உல்லாச மாளிகையாக இருந்திருக்கலாம். அந்த மாளிகையின் எதிரில் தெளிந்த நீர் நிரம்பிய தடாகமும், தடாகத்தின் நடுவில் ஒரு நீராழி மண்டபமும் இருந்தன. நாங்கள் அங்கே இரண்டு நாட்கள் கழித்தோம். அந்த இரண்டு நாட்களும் எவ்வளவு இன்பமாக இருந்தன! காலை வேளைகளில் நான் என் உத்தியோக வேலை நிமித்தம் வெளியே போய் விடுவேன். ராஜாஜி உலாவப் போய் விடுவார். மத்தியானம் தான் மீண்டும் சந்திப்போம். மிகுந்த நேரம் இன்பமாகப் பேசிக் கொண்டிருப்பதில் கழிந்து விடும்!

நாங்கள் இங்கு இருந்த போது, அவ்வூர் தாசில்தார் ஸ்ரீ நரசிம்ம சாஸ்திரிக்கு போலீஸ் தலைமை அதிகாரி என்ற ஹோதாவில் ஒரு கொலைச் செய்தி வந்தது. சென்னகிரியிலிருந்து பஸவப் பட்டணம் போகிற பாதையில் காட்டில் குளகஞ்சிகளவாய் என்று ஒரு பள்ளத் தாக்கு. பஸவப்பட்டணம் தபாலாபீஸிலிருந்து, நூறு ரூபாய் பணம், தபால்கள், பார்சல்கள் முதலியவை எடுத்துக் கொண்டு சென்னகிரிக்குப் போய்க் கொண்டிருந்த தபால் ரன்னர் அந்தப் பள்ளத்தாக்கில் கழுத்தை வெட்டிக் கொலை செய்யப்பட்டிருந்தான். முகத்திலும் கைகளிலும் பயங்கர வெட்டுக் காயங்கள். அவன் பக்கத்தில் தபால் பை திறந்து கிடந்தது. தபால்களும் பார்சல்களும் மற்றவையும் அதில் இருந்தன. ஆனால் பணத்தைத் தான் காணவில்லை. சென்னகிரி போஸ்ட் மாஸ்டர் பஸவ பட்டணத்திலிருந்து தபால் பை வரவில்லை என்று அறிந்ததும் போலீஸாருக்குத் தகவல் கொடுத்தார். போலீஸார், ரன்னர் வரும் வழியைத் தேடிக்கொண்டு சென்று அவன் உடலை மறுநாள் கண்டு பிடித்தார்கள்.

தாசில்தார் இந்தச் செய்தியைச் சொல்லிவிட்டு, இந்த வழக்கு சம்பந்தமான விசாரணை நடத்த வேண்டிய பொறுப்பு இருப்பதால் ஜமாபந்தி வேலையிலிருந்து தன்னை விடுவிக்குமாறு என்னைக் கேட்டுக் கொண்டார். இந்த வழக்கு விவரத்தை முழுதும் கேட்ட ராஜாஜி, இந்த வழக்கு கஷ்டமான வழக்காக இருக்கும்போல் தோன்றுகிறது; குற்றவாளியைக் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருக்கும் என்றார்.

சாஸ்திரி மிகுந்த தன்னம்பிக்கை கொண்டவர். மேலும் இத்தகைய போலீஸ் வேலையில் திறமையாகப் பணியாற்றியிருந்தார். அவர் சிரித்துக் கொண்டே, "குற்றவாளியை நிச்சயம் கண்டுபிடித்து நீதிமன்றத்தின் முன்னால் நிறுத்தி விடுவேன். வேண்டுமானால் பந்தயம் கட்டிக் கொள்ளுங்கள்" என்றார்.

"நீங்கள் கண்டு பிடித்து விட்டால், அதைப் பாராட்டி விசேஷ உத்தியோக உயர்வு கொடுக்க வேண்டியதுதான். என் சொந்தப் பாராட்டுதலாக ஒரு பௌண்டன் பேனா அளிக்கிறேன்" என்றார் ராஜாஜி சிரித்துக் கொண்டே.

அதற்குப் பிறகு சாஸ்திரி எங்களிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார். நாங்களும் அன்றிரவு சாந்தபென்னூரிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள ஹொளலு என்ற ஸ்டேஷனில் ரயில் ஏறினோம். நான் சிமோகாவுக்குச் சென்றேன், ராஜாஜி சேலத்துக்குச் சென்றார். உண்மையில் சாஸ்திரி தாம் சொன்னது போலவே குற்றவாளியைக் கண்டு பிடித்தார். அவர் குறுக்குக் கேள்விகள் கேட்டுப் பூரண விசாரணை நடத்திக் குற்றவாளியைக் கண்டு பிடித்த முறையைப் பார்த்து ஷெர்லக் ஹோம்ஸே வியந்திருப்பார். குற்றவாளி நீதிமன்றத்தின் முன்னர் நிறுத்தி வைக்கப்பட்டு, தூக்கு தண்டனை அடைந்தான்.

இது நடந்து நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு ராஜாஜி கவர்னர் ஜெனரலாகப் பதவி வகித்த போது அவருக்கு இந்தச் சம்பவமும் தாம் பரிசு கொடுப்பதாக வாக்களித்ததும் நினைவுக்கு வந்தன. அவருக்கே உரிய பண்போடு எண்பது வயது கடந்து விட்ட சாஸ்திரிக்கு அழகான ஒரு பேனாவைப் பரிசாக அனுப்பி வைத்தார். அது ஒரு பரம்பரைச் சொத்தாகக் காப்பாற்றப்படும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை.

# முன்னறிவிப்பு...

புதிய மர்பி ரேடியோ மாடல் 0724 மற்ற இதர ரேடியோக்களைவிட மிக வும் போற்றப்படும். ஏனெனில்

- மிக அழகிய பெட்டியில் அமைக்கப்பட்டுள்ளது
- பல்லாண்டுகளுக்கு மிகச் சிறந்த முறையில் சேவை அளிக்கும்






மாடல் 0724

- 6 - வால்வ்
- ஆல் - வேவ்
- 8 பாண்ட், முழுதும் பாண்ட்ஸ்பிரெட்
- ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
- நிகர விலை ரூ. 495/-: உள்ளூர் வரிகள் தனி

**murphy radio**

பல ஆண்டுகளுக்கு உங்களை மகிழ்விக்கும்!

தென் இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

முகமது இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிமிடெட்., சென்னை-பெங்களூர்-ஹைதராபாத்



# இலக்கியத் தலைவர்

அரசியல் துறையில் புகுந்தவர்கள் பெரும்பாலோர் "இலக்கியமா! அது என்ன?" என்று கேட்பார்கள். இலக்கியத் துறையில் புகுந்தவர்கள், "அரசியலா! சே! சே! அது வேண்டாம்!" என்பார்கள்.

ராஜாஜியோ அரசியல் துறையில் புகுந்து ஐம்பது வருஷங்களாகப் பாரத நாட்டுக்குச் செய்துள்ள சேவை மகத்தானது. இன்றையத் தலைமுறையினர் யாரும் மறக்கமுடியாதது. அவர்கள் உள்ளத்தில் பசுமையாகவே இருக்கும்.

எனினும் ராஜாஜியைக் கூர்ந்து நோக்கினால் இலக்கிய புருஷர் என்றே சொல்லத் தோன்றும். அவர் ஒரு விழாவுக்கு வாழ்த்து அனுப்பினாலும் சரி, பத்திரிகைக்கு அறிக்கை வெளியிட்டாலும், அனுதாபச் செய்தி வெளியிட்டாலும் சரி, எதிலும் அவருக்கே உரிய தனிப் பண்பும் இலக்கிய நயமும் இருக்கக் காண்கிறோம். ஒரு தடவைக்குப் பலப்பல தடவைகள் படித்துப் பார்க்க வேண்டும் என்ற அவா எழுகிறது. இப்படி இதைப் பார்க்கும்போது, அவர் ஏன் அரசியலில் புகுந்தார் என்ற எண்ணம் எழலாம்.

ஒரு நாடு அடிமையுற்ற காலத்தில் இலக்கியத்தில் ஊறித் திளைத்துப் பொழுதைப் போக்குவது பாவம் என்றே கருதி அரசியலில் புகுந்தார்.

இருப்பினும் பாரத மக்களின் பண்பை உயர்த்துவது, என்றென்றும் பாதுகாப்பது இலக்கியமே என்பதை உணர்ந்து அரசியலிலிருந்து ஓய்வு கிடைத்த வேளைகளில் எல்லாம் இலக்கியத் தொண்டாற்றிவந்திருக்கிறார். 1920ம் வருஷத்தில் சிறைபுகுந்த நாளிலேயே ஸோக்ரதரைத் தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கினார். அன்றிலிருந்து இன்று வரை பலப்பல நூல்களைத் தமிழர்களுக்கும் உலகத்துக்கும் வழங்கியிருக்கிறார். அவைகளில் எல்லாம் முக்கியமானது சக்கரவர்த்தித் திருமகனும், வியாசர் விருந்தும் தான். அவை தவிர ராமகிருஷ்ண உபநிஷதம், சங்கரரின் 'பஜகோவிந்தம்,' மார்க்க அரேலியரின் 'ஆத்ம சிந்தனை,' துறவி லாரென்ஸின் உபதேசங்கள், வள்ளுவர் வாசகம் இப்படிப் பலப்பல. அவற்றையெல்லாம் நினைவூட்டும் காட்சிகளை ஓவியர் மணியம் இப்பக்கங்களில் அளித்திருக்கிறார்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 59

துறவு நிலையின் பெருமைக்கு ஆசைப்பட்டுத் தகுதியடையாமல் அவசரப்பட்டுத் துறவியாசிரமத்தில் இறங்கிப் பிறகு காமத்தால் தூண்டப்பட்டுச் சந்நியாசிகளின் தருமத்துக்கு முற்றிலும் விரோதமான துர் நடத்தையில் சிக்கிவிட்டால் அதனால் உண்டாகும் தீமையை எடுத்துக் காட்டுகிறார் முனிவர்.

மனிதனை ஊக்கும் வேகங்களுக்குள் ஓயாமல் தூண்டும் வேகம் காமம். இது எத்தகைய மனிதனுடைய அறிவையும் மயக்கிக் குழியில் தள்ளும். பல காலம் சுத்தமாக வாழ்ந்த துறவிகளையும் திடீரென்று கூடாத காரியத்தைச் செய்யத் தூண்டிவிடும். முதலில் முனிவர் மெதுவாகச் சொல்லுகிறார் :

**வஞ்ச மனத்தான்**
**படிற்றொழுக்கம் பூதங்கள்**
**ஐந்தும் அகத்தே**
**நகும்**

"உன் குற்றம் யாருக்கும் தெரியாது என்று எண்ணுகிறாய். உன் உடலில் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருக்கிற பஞ்ச பூதங்கள் நீ செய்வதைக் கண்டு நகைக்கின்றனவே" என்கிறார். "மற்றவர்களை ஏமாற்றலாம். உன் உடலில் இருந்துகொண்டு எல்லாவற்றையும் நன்றாகப் பார்த்துக் கொண்டிருக்கிற இந்தச் சாட்சிகளை ஏமாற்ற முடியுமா?" என்கிறார்.

"உள்ளத்தில் பொய்யை வைத்துக் கொண்டு மறைக்க முடியாது. ஐந்து பூதங்கள் அகத்தே உன் பயனற்ற முயற்சியைக் கண்டு நகும். இது உனக்குத் தெரியவில்லையா?" என்கிறார்.

[படிறு - பொய்.]

உன்னுடைய பொய்யைக் கண்டு பரிகசிக்கும் இவர் எப்போதும் உனக்குள்ளே இருக்கிறார்கள் என்பதை நினைவில் வை. அவர்களை வஞ்சிக்க முடியாது. எங்கும் பரவி நிற்கும் ஈசனை ஏமாற்ற முடியாது. அது நிற்க, பஞ்ச பூதங்களைக்கூட ஏமாற்ற முடியாது, மகனே என்கிறார் முனிவர்.

உன் துறவித் தோற்றமும் பொய்க் கம்பீரமும் என்ன பயன் தரும்? நெற்றியில் பூசும் நீறும் உடுத்தும் காவியும் மற்றத் துறவி வேஷமும் எல்லாம் காப்பு ஆகாது. உன் உள்ளத்தில் உன் குற்றத்தைக் கண்ட மனசாட்சி இருக்க இவையெல்லாம் ஒன்றும் செய்ய முடியாது.

**வான்உயர் தோற்றம்**
**எவன்செய்யும் தன்நெஞ்சம்**
**தான் அறி குற்றப்**
**படின்.**

எவ்வளவு நீச காரியம் ஆகும், துறவியானவன் துர்நடத்தையில் இறங்குவது! இவன் சந்நியாசி, மகா யோக்கியன் என்று மக்கள் தன்னைப் பற்றி எண்ணச்செய்து, அந்த நம்பிக்கையைப் பயன்படுத்திக்கொண்டு காம இன்பம் நுகர்வது எவ்வளவு இழிவான செயலாகும்.

* * *

மாடு புலித்தோல் போர்த்திக் கொண்டு வயலில் திருட்டுத்தனமாக மேய்வது போலாகும், நீசன் துறவி வேஷம் போட்டுக்கொண்டு, சிற்றின்பத்தைத் தேடுவது. புலன்களை அடக்க முடியாதவன் புலன்களை அடக்கி நிற்கும் புலி வேஷத்தைப் போட்டுக் கொள்கிறான். போட்டுக் கொண்டு மக்களை ஏமாற்றித் திருட்டு வேலை செய்கிறான் என்கிறார் முனிவர்.

**வலிஇல் நிலைமையான்
வல்உருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந்
தற்று.**

புலன்களை அடக்காதவன் புலன்களை அடக்கிய வேஷம் போடுவது எதைப் போல் இருக்கிறது என்றால் பசு புலித் தோல் போர்த்துக்கொண்டு வயலில் புகுந்து மேய்வது போல்.

*[பெற்றம்—மாடு]*

*   *   *

போட்டிருக்கும் வேஷத்தைக் கண்டு இவன் இந்தக் குற்றத்துக்கு இடம் கொடுக்க மாட்டான் என்று மக்களை ஏமாற்றித் துர்கடத்தைக்கு வேண்டிய சவுகரியத்தை அடைகிறான். அடைந்து பாவம் செய்கிறான். மோசமறியாத ஏழைப் பறவைகளை வேடன் மறைந்து நின்று தன் வலையில் பிடித்துக் கொல்வது போன்ற இழி செயலாகும்.

**தவம்மறைந்து அல்லவை
செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த்
தற்று.**

புதரில் மறைந்து தன் ஈனத் தொழிலை வேடன் செய்வதுபோல் துறவு வேஷத்தில் மறைந்து கொண்டு ஏமாற்றி ஈனத் தொழிலைச் செய்கிறான். வேடன் பறவைகளைப் பிடிப்பதுபோல் வஞ்சத் துறவி மகளிரைப் பிடிக்கிறான்.

*[புதல்—தூறு. புதர். சிமிழ்த்தல்—வலையில் சிக்க வைத்துப் பிடித்தல்.]*

வேடனுடைய தொழிலைக் காட்டி இந்த இகழத்தக்க காரியத்தைச் செய்யாதீர் என்கிறார், சந்நியாசி வேஷம் போட்ட வஞ்சகர்களைப் பார்த்து.

வள்ளுவர் காலத்தில் சந்நியாசிக் கூட்டம் அதிகமாக இருந்தது. துறவிகளுக்கு மக்கள் அதிகக் கவுரவம் செலுத்தி வந்தார்கள். அதைக் கண்டு இளைஞர்களும் துறவு பூண்டு வந்தார்கள். சமய நூல்களில் சொல்லப்பட்ட மேன்மைகளைப் பார்த்து மயங்கித் தங்களுடைய தகுதிக் குறையை ஆராயாமல் துறவு பூண்டவர்களின் கஷ்டங்களையும் அபாயங்களையும் கண்டு முனிவர் இரங்கிப் பாடிய குறள்களை இல்லறத்தாரும் கவனிக்க வேண்டும்.

# தேவானை

இராமநாதய்யரும் அவர் மனைவி சீதாலக்ஷ்மியும் தங்கள்மோட்டார் வண்டியில் சைனா பஜாருக்குப் போய்ச் சில சாமான்கள் வாங்கிக் கொண்டு, பக்கத்திலிருந்த சிற்றுண்டிச்சாலையில் பலகாரம் சாப்பிட்டுவிட்டு, மறுபடியும் வண்டியில் ஏறிக்கொண்டார்கள்.

"கடலோரம் போகலாமா ?" என்றார் இராமநாதய்யர்.

பீச்சுக்கா ? ஜனக்கூட்டமில்லாத இடத்தில் போய் வண்டியை நிறுத்தச் சொல்லுங்கள். கூட்டத்தைக் கண்டால் எனக்குப் பிடிக்கவேயில்லை. அதோ, 'டாய்ஸ்' விற்கிறான். ஏதாவது இரண்டு வாங்குங்கள். குழந்தைக்குக் கொண்டு போகலாம்."

சீதாலக்ஷ்மி இதைச் சொல்லி முடிப்பதற்குள் அவள் எண்ணத்தைப் பொம்மை வியாபாரி எப்படியோ அறிந்து கொண்டு, வண்டியண்டை வந்தான். வண்டியிலிருந்து கொண்டே விலை கேட்டுச் சாமான்களை நெருக்கிப் பார்த்துக் கொண்டார்கள். அப்போது மற்றொரு கதவண்டை ஒரு வாலிபப் பெண், பிச்சைக்காரி, ஒரு சிறு குழந்தையைக் கையில் எடுத்துக் காட்டிக் கொண்டு, "ஐயா, தருமம் கொடுங்கள் பச்சைக் குழந்தையைப் பார், அம்மா !" என்றாள்.

"எல்லாம் ஜப்பான் 'டாய்ஸ்'தானே ?" என்று கேட்டார் இராமநாதய்யர்.

"ஜப்பான்தான், வேறு ஏது ? நம்ம ஊரில் இதெல்லாம் செய்வார்களா ?" என்றான் வியாபாரி.

பிச்சைக்காரி மறுபடியும் கெஞ்சினாள்.

"வியாபாரம் செய்து கொண்டிருக்கும் போது இதென்ன சனியன் ! இந்தப் பட்டணத்தில் பிச்சைக்காரர்கள் தொல்லை ஜாஸ்தியாய்ப் போய்விட்டது" என்றாள் சீதாலக்ஷ்மி.

"பசிக்கிறதம்மா, கண்ணெடுத்துப் பாரம்மா, நீ மகராசியா யிருக்கணும் !" என்றாள் பிச்சைக்காரி.

"போகிறாயா, போலீஸ் காரனைக் கூப்பிடச் சொல்லட்டுமா ?" என்று அதட்டினாள் சீதாலக்ஷ்மி.

"பாலில்லாமல் தவிக்கிறது, அம்மா ! ஒரு அணா பிச்சை போடுங்கள், அம்மா ! எவ்வளவோ செலவழிக்கிறீர்கள் ராஜா !"

விலை தீர்த்து வாங்கிய சாமான்களை வண்டியில் எடுத்து வைத்துக் கொண்டு, "ஓட்டு வண்டியை, பீச்சுக்குப் போ !" என்றார் இராமநாதய்யர்.

மோட்டாரோட்டி, பிச்சைக்காரியை விலகச் சொல்லி விட்டு, வண்டியை ஓட்டினான்.



"ஐயா, ஐயா !" என்று பிச்சைக்காரி கொஞ்சதூரம் வண்டியைப் பிடித்துக் கொண்டு ஓடினாள்.

"ஓடாதே, செத்துப் போவாய் !" என்றார் இராமநாதய்யர். அப்போது பிச்சைக்காரியின் முகத்தைப் பார்த்தார். எங்கேயோ முன்னே பார்த்தமாதிரி தோன்றியது.

வண்டி வேகமாய்ச் சென்றதும், "ஐயோ, பாவம் ! சிறு பெண், முகத்தைப் பார்த்தால் நம் ஊர்க்காரி போல் தோன்றுகிறது" என்றார்.

சீதாலக்ஷ்மி, "எந்த ஊரோ, சனியனோ, அவளைப் பற்றி நமக்கென்ன ? கொடுங்கள் பார்ப்போம், அதென்ன; புதிதாக இருக்கிறது, ஏரோப்ளேனா ? சாவி கொடுப்பதா, அல்லது வெறும் பொம்மையா ?" என்று விளையாட்டுச் சாமான்களையெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே கடலோரம் போனார்கள்.

## 2

சேலத்தில் பொன்னம்மாப்பேட்டை பெரியண்ண முதலித் தெருவில் ஓர் ஏழைத் தறிக்காரர் குடும்பம். வையாபுரிக்கு முப்பது வயது. அவன் தங்கை தேவானைக்கு இருபது வயது. விவாகமாகவில்லை; தாயார் பழனியம்மாள். மூவரும் தங்கள் பரம்பரைத் தொழிலான கைத்தறியைக் கொண்டு கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தார்கள். நாள் முழுவதும் மூவரும் உழைத்து உழைத்து வாரம் ஒன்றுக்கு நான்கு ரூபாய் சம்பாதித்து வந்தார்கள்.

வரவரக் கைத்தறி நெசவு வியாபாரம் குன்றிப் போய்க் கூலி குறைந்து கொண்டே வந்தது. பிறகு குறைந்த கூலியுங்கூட இல்லாமல் பலர் தவித்தார்கள். சேலத்தில் பல தறிகளுடன் வையாபுரியின் தறியும் சும்மா கிடந்தது. தேவானை இரண்டு பிராமண உத்தியோகஸ்தர்கள் வீட்டில் வாசல் பெருக்கி, சாணி தெளித்துச் சில்லறைக் காரியம் செய்ய அமர்ந்தாள். அதில் மாதம் மூன்று ரூபாய் வந்தது. தாயார் பழனியம்மாளும் இன்னொரு வீட்டில் காலையில் கூட்டிச் சாணி தெளித்து ஒரு ரூபாய் சம்பாதித்தாள். வையாபுரி, நெசவு முதலாளிகளிடம் வேலைக்காக அலைந்து அலைந்து திரிந்தான். ஓரிடத்திலும் வேலை கிடைக்காமல் சில நாட்கள் சென்றபின், வையாபுரி தன் தாயாரிடம் சொல்லிவிட்டுப் பெங்களூருக்குப் போய்விட்டான். அவ்விடம் ஏதாவது ஆலையில் வேலை பார்ப்போம் என்று சேலத்திலிருந்து அவனும் இன்னும் சில முதலிமார்களும் போனார்கள்.

போய்ச் சில நாட்கள் அலைந்து, வையாபுரி ஒரு மில்லில் சேர்ந்ததாகக் கடிதம் எழுதினான். வையாபுரிக்குக் கொஞ்சம் எழுதப் படிக்கத் தெரியும். சிறுவயதில் அவன் தகப்பனார் அவனைப் பொன்னம்மாப்பேட்டை முனிசிபல் பள்ளிக்கூடத்தில் போட்டிருந்தார். அந்தக் காலத்தில் நெசவுக்காரர்கள் வாழ்வு அவ்வளவு கஷ்டமாக இருக்கவில்லை.

"மிகவும் கஷ்டப்பட்டு யார் யாருக்கோ லஞ்சம் கொடுத்து ஒரு மில்லில் சேர்ந்தேன். தினம் எட்டணாக் கூலி; மாதத்தில் இருபத்தாறு நாள் வேலை. ஆகையால் பதின்மூன்று ரூபாய் வரும். இந்த மாதச் சம்பளம், சாப்பாட்டுச் செலவுக்கும் கடன் பட்டதற்கும் செலவாகிவிடும். பிறகு உங்களுக்கு மாதம் இரண்டு ரூபாய் அனுப்ப முடியும். ஆண்டவன் இருக்கிறான்" என்று வையாபுரி எழுதியதைப் பக்கத்து வீட்டு மாரியப்ப முதலி மகன் படித்துச் சொன்னான். கிழவிக்கும் தேவானைக்கும் உண்டான மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

பத்து நாட்களுக்குப் பிறகு இன்னொரு கடிதம் வந்தது.

"அம்மாவுக்குத் திக்கு நோக்கிச் சாஷ்டாங்க நமஸ்காரம். நான் இங்கே ஆண்டவன் அருளால் க்ஷேமம். நீயும் தேவானையும் சுகம் என்று நம்புகிறேன். எனக்கு இந்த ஆலையில் வேலை செய்வது பிடிக்கவேயில்லை. வீட்டில் தறியண்டை உட்கார்ந்து வேலை செய்த நாட்களை நினைத்து, கண்ணில் தண்ணீர் வருகிறது. இங்கே எனக்குப் பைத்தியம் பிடித்தாற் போலிருக்கு.



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



தலை கிறுகிறு என்கிறது. என் மன வருத்தமும் பல தொல்லைகளும் சொல்லி முடியாது. ஊரைவிட்டு ஏன் வந்தேனோ என்று தோன்றுகிறது. பக்கத்து வீட்டுப் பையனைக் கொண்டு கடிதம் எழுத முடியுமானால் எழுதவும். மல்லேசுவரம் கூலி லைனில், சேலம் பொன்னம்மாப்பேட்டை வையாபுரி என்று எழுதவும்.''

## 3

தேவானை சாணி தெளித்துப் பெருக்கி வந்த வீடுகளில், ஒன்று பென்ஷன் உத்தியோகஸ்தர் வீடு. அவர் மனைவி நல்லவள். வேலை வாங்குவதில் கொஞ்சம் கொடுமையானபோதிலும், மற்ற விஷயங்களில் அன்பாகத்தான் நடத்தி வந்தாள். பழைய புடவை ஒன்று கொடுத்தாள். சமையல் செய்ததில் மிச்சமானால் அவ்வப்போது கொஞ்சம் சாதமும் குழம்பும் கிடைக்கும். இப்படிச் சில நாட்கள் கழிந்தன.

இதைத் தெய்வம் பொறுக்கவில்லை போலும்! அந்த வீட்டில் வேலை செய்துவந்த சமையல்காரன், தேவானைக்கு மிச்சமான உணவு பதார்த்தங்கள் கொடுத்துவந்தவன், அவளிடம் விளையாட்டாகப் பேசுவான். பிறகு ஒரு நாள் அவன் அக்கிரமமாக நடந்துகொண்டான்.

தேவானைக்கு அடங்காத கோபம் வந்தது. ஆனால் யாரிடத்திலும் சொல்ல வெட்கப்பட்டாள். 'எங்கேயும் சொல்லாதே. உனக்கு மாதம் இரண்டு ரூபாய் தருவேன்'' என்று அந்த அயோக்கியன் வற்புறுத்தினான்.

வருத்தத்தை அடக்கிக்கொண்டு தேவானை வீட்டுக்குப் போய்த் தாயாரிடம், ''நான் அந்த வேப்ப மரத்து வீட்டில் வேலை செய்ய முடியாதம்மா'' என்றாள்.

ஏன் என்று விசாரிக்க, தேவானை வெட்கப்பட்டு மிகவும் வருத்தத்துடன் நடந்ததைச் சொன்னாள். பழனி. ''நான் அந்த வீட்டு எஜமானியிடம் சொல்லுகிறேன்'' என்று கிளம்பினாள்.

''வேண்டாம் அம்மா! அவர்களிடம் சொல்லி என்ன பயன்? நான் மறுபடியும் அங்கே வேலை செய்ய முடியாது'' என்றாள்.

வேறு இடத்தில் வேலைக்காகப் பார்த்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் யாராவது ஒருத்தி வேலைக்கு இருந்தே வந்தாள். இரண்டு மாதங்கள் அலைந்த பிறகு ஒரு வீட்டில் வேலை கிடைத்தது.

* * *

ஆறு மாதங்கள் கழிந்தன. பெங்களூரில் வையாபுரி இருந்த ஆலையில் ஒரு வேலை நிறுத்தம் ஏற்பட்டது. ஒரு மேஸ்திரியைத் துரை அடித்துவிட்டார். அதன்மேல் அவனையும் வேறு சில கூலிகளையும் வேலையிலிருந்து நீக்கிவிட்டார்கள். இதன் காரணமாகத் தொழிலாளர்கள் யூனியன் கூட்டம் கூட்டி, அந்த மாதக் கூலி வாங்கினதும் வேலை நிறுத்தம் செய்துவிட்டார்கள். வையாபுரியும் இதில் சேர வேண்டியதாயிற்று.

ஒரு மாதகாலம் இது நடந்தது. தொழிலாளர் பல கூட்டங்கள் கூடிக்கூடிக் கிளர்ச்சி செய்தார்கள். முதலில் உற்சாகம் அதிகமாயிருந்தது. பிறகு கையிலிருந்த காசு செலவாய்ப்போனதும் உற்சாகம் குறைந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சிலர் சமாதானம் செய்தார்கள். எல்லோரும் மறுபடியும் ஆலைக்குப் போனார்கள். ஒரு வாரத்துக்குப்பின் இருபத்தைந்து பேரை வேலையிலிருந்து நீக்கிவிட்டதாகவும், ஆலைக்குள் வரக்கூடாதென்றும் 'கேட்'டில் விளம்பரம் போட்டுத் தடுத்து விட்டார்கள். அந்த இருபத்தைந்து பேரில் வையாபுரி ஒருவன்.

'நான் ஒரு பாதகமும் அறியேன்; நான் புதிதாக வந்தவன்; நான் எதிலும் சேரவில்லையே'' என்று வையாபுரி தன்னுடைய மேஸ்திரியிடம் சொல்லிக் கொண்டான்.

'' பெரிய துரை உத்தரவு. அந்தப் படுபாவி 'டயம் கீப்பர்' ரங்கசாமி நாயக்கன் செய்த வேலை; உன் பெயரையும் சேர்த்துத் துரைக்குக் கொடுத்து விட்டான். நான் ஒன்றும் செய்ய முடியாது'' என்று மேஸ்திரி சொல்லிவிட்டான்.

ரங்கசாமி நாயக்கனிடம் போய்க் கெஞ்சினான். அவன் ''எனக்கு ஒன்றும் தெரியாது. சம்பளப் பட்டுவாடா குமாஸ்தா அய்யர் செய்தது'' என்றான். யாரிடம் அலைந்து கெஞ்சினாலும் பயனில்லாமல் போய்விட்டது. ''நீ எழுதப் படிக்கத் தெரிந்தவன். மற்றவர்களுக்குத் தூண்டுதல் செய்தவன். உன்னை எடுத்துக் கொள்ள முடியாது'' என்று மானேஜர் சொல்லி விட்டார்.

பல நாட்கள் அலைந்து, கையில் இருந்த காசு முழுவதும் செலவாகி, மிகவும் கஷ்டப்பட்டு வையாபுரி சென்னை போய்ச் சேர்ந்தான். அவனைப் போலவே நீக்கப்பட்டவர்கள், இன்னும் பத்து ஆலைத் தொழிலாளர்கள், அவன் கூடவே சென்னையில் வேலை தேடப் போனார்கள். சோற்றுக்குத் தங்களில் சிலரிடமிருந்த பணத்தை எல்லோரும் கடனாகப் பங்கு போட்டுக் கொண்டு, எட்டு நாள் ஆலை ஆலையாகச் சுற்றித்திரிந்தார்கள். வையாபுரிக்கு ஒரு மில்லில் வேலை கிடைத்தது.

'கேட்'டில் நிற்கும் ஆளுக்கும் சில்லறை உத்தியோகஸ்தர்களுக்கும் கொடுக்க வேண்டிய மாமூல்களுக்கு ஐந்து ரூபாய் வேண்டியிருந்தது. இதற்காகவும் சாப்பாட்டுச் செலவு முதலிய கடன் தீர்க்கவும், தன் காதில் அணிந்திருந்த பொன் கடுக்கனை ஒருவனிடம் அடகு வைத்துப் பணம் வாங்கினான் வையாபுரி. சென்னை மில்லில் அமர்ந்த சில நாட்களுக்கெல்லாம் கஷ்டத்தை மறக்கக் கள் குடிக்க ஆரம்பித்து விட்டான். சேலத்தில் அவனுக்கு இந்தப் பழக்கமில்லை. பிறகு சூதாட்டத்தில் சம்பாதிக்கலாம் என்று சில தோழர்கள் அவனுக்கு வழி காட்டி அந்த வழக்கம் ஏற்பட்டது. சம்பாதிக்கும் கூலியில் சாப்பாட்டுச் செலவு, குடிசை வாடகை முதலியவை போக மிச்சமானதை ஊருக்கு அனுப்ப வேண்டியதற்குப் பதில், இம்மாதிரி பல விதத்தில் செலவாயிற்று. பட்டாணியனிடம் கடனும் ஏறிற்று. இந்தக் கஷ்டங்களையெல்லாம் பொறுக்க முடியாமல், இன்னும் அதிகமாய்க் குடிக்கலானான்.

முதலில் ஏதோ சாக்குப் போக்குகள் சொல்லி, பிறகு தன்னால் ஏதும் அனுப்ப முடியாது. வேண்டுமானால் தேவானையும் சென்னைக்கு வந்து ஒரு ஆலையில் வேலையில் சேரலாம் என்று எழுதிவிட்டான். அந்தக் கடிதத்தைப் பார்த்துத் தேவானைக்கும் பழனியம்மாளுக்கும் உள்ளம் துடித்தது.

பல நாட்கள் பொறுத்துப்பிறகு ஒருநாள், ''ஏனம்மா நானும் பட்டணம் போகலாகாது?

# தரத்திற்கும் உறுதிக்கும் நிகரற்றது

# ஹத்திபாயின்



தராசு மார்க்

## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

உத்திரவாதமுள்ளவை

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை

* * *

## ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கன்ஸரா சால், பம்பாய் 2.



அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

DCG/24 RZ

---



# மிக அழகிய...

## அடர்ந்த நீண்ட ஒளியுள்ள கூந்தல்!

பிரதி தினமும் கால்கேட் பெர்ப்யூம்டு காஸ்டர் ஹேர் ஆயில் தடவி வந்தால், கூந்தலானது அடர்த்தியாகவும், நீளமாகவும் வளருவதுடன் இளமையின் ஒளியுடனும், அற்புத ஜ்வலிப்புடன் விளங்குவதைக் கண்டு நீங்கள் பரவசமடைவீர்கள். அது உங்கள் கூந்தலின் இயற்கை அழகை எடுத்துக்காட்டி எல்லோரையும் பிரமிக்கச்செய்யும்.

மகிழ்ச்சியூட்டும் நறுமணம்—
உங்கள் குடும்பம்
முழுவதும் விரும்புவது!




# கால்கேட்
# பெர்ப்யூம்டு காஸ்டர்
# ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப்படுத்துங்கள்!

CCHO/GJ 3

வையாபுரியுடன் நானும் உழைத்து ஏதாவது சம்பாதித்து உனக்கு அனுப்புகிறேன். பட்டணத்தில் அனேகம் பேர் பெண்பிள்ளைகள் ஆலையில் வேலை செய்கிறார்களாமே?'' என்றாள் தேவானை.

தாயார் முதலில் சம்மதிக்கவில்லை. ''அது எங்கேயாவது உண்டா? அறியாப்பிள்ளை அங்கெல்லாம் போகவா?'' என்றாள். சில நாட்கள் இப்படியே வாதாடி, பிறகு கிழவியும் சம்மதித்தாள். பக்கத்து வீட்டு மாரப்பனிடம் தன் காதிலிருந்த பொன்தோடுகளை அடகுவைத்து, ரூபாய் பன்னிரண்டு கடன் வாங்கி, தேவானை சென்னைக்குப் புறப்பட்டாள்.

## 4

சென்னையில் வையாபுரி தேவானையை ஒரு மில்லில் நூல் நூற்கும் 'டிபார்ட்மெண்ட்'டில் சேர்த்து வைத்தான். வையாபுரி இருந்த ஆலை வேறு, இது வேறு. இவளைப் போல் இன்னும் சுமார் நூற்றைம்பது பெண்கள், சிறியவர்களும் பெரியவர்களும் அந்த ஆலையில் வேலை செய்து வந்தார்கள். தேவானைக்கும் அவளுடன் பத்துப் பேர்களுக்கும்மேல் ஒரு 'ஜாபர்'. இவன் தேவானையை முதலில் மிகப் பிரியமாக நடத்தினான். பிறகு வேலையில் அதட்ட ஆரம்பித்தான். திட்டுவதும் உண்டு. தனியாகக் கண்ட காலத்தில் காரணமில்லாமல் மிகுந்த சல்லாபமாய்ப் பேசுவான்.

''இதென்ன, இவர் இம்மாதிரி செய்கிறார்?'' என்று தன்னுடன் வேலை செய்து வந்த ஒருத்தியைக் கேட்டாள் தேவானை. அவள் சிரித்து, ''உனக்கு இது தெரியாதா? நீ பாவம், நாட்டுப்புறம்! அவரிடம் சரியாக நடந்து கொள்ளாமல் போனால் சம்பளத்தில் பாதிக்குமேல் அபராதமாகவே பிடித்தம் ஏற்படும். அவர் சந்தோஷமாயிருந்தால், பல சௌகரியங்கள் உண்டு'' என்றாள்.

ஏழைகளுடைய கஷ்டத்தை யார் அறிவார்கள்! அதிலும் ஏழைப் பெண்பிள்ளையாகப் பிறந்து ஆலையில் கூலி வேலையில் அமர்வது: முன் ஜன்மத்தில் பாவம் செய்தவர்கள்தான் என்று சொல்லலாம்.

தேவானை சில நாட்கள் எல்லாவற்றையும் பொறுத்து வந்தாள். பிறகு, தெய்வமேது, ஒன்றேது என்று மேஸ்திரியின் செயல்களை எதிர்ப்பதைவிட்டாள். மனத்தைச் சரிப்படுத்திக் கொண்டு அவனுடன் சிரித்துப் பேச ஆரம்பித்தாள். வரவர அதில் சந்தோஷமும் அடையலானாள். கூலியும் உயர்ந்தது.

சில மாதங்கள் கழிந்தன. தேவானைக்குத் தேகத்தில் தொந்தரவுகள் கண்டன. வயிற்றில் குழந்தை உண்டாயிருப்பதாக அறிந்து கொண்டாள். தனக்குத் தெரிந்த தெய்வங்களையெல்லாம் வேண்டினாள். ''யாரிடம் சொல்லுவேன்?'' என்று காட்டில் வேட்டைக்குத் தப்பியோடும் மானைப்போல் மிரண்டு திகைத்தாள். தமையன் வையாபுரியிடம் சொல்ல அஞ்சினாள். அவளுடன் வேலை செய்து வந்த சிலர் அவள் நிலையை அறிந்து சிரித்து வேடிக்கை செய்தார்கள். ஊருக்குப் போய்விடலாமா என்று யோசித்தாள். பிறகு சாதியிலிருந்து தள்ளிவிடுவார்களே யென்று பயந்தாள். தாயார் இதை யறிந்தால் எப்படிப் பொறுப்பாள் என்று ஊருக்குப் போகும் எண்ணத்தை விட்டுவிட்டாள். தெய்வமே கதியென்று தைரியம் செய்து கொண்டு, அந்த நிலையிலேயே ஆலையில் வேலை செய்து வந்தாள்.

ஒரு நாள் மறுபடியும் மனம் திடுக்கிட்டது. ''ஐயோ நான் என்ன செய்வேன்? என் குலத்தைக் கெடுத்தேனே?'' என்று ஒருத்தியிடம் அழுதாள்.

''பயப்படாதே, தேவானை. இதென்ன, எல்லாருக்கும் உண்டாவதுதானே! இதற்கு மருந்து உண்டு. உடனே கழிந்துவிடும்'' என்றாள்.

''ஆமாம், நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பயமாயிருக்கிறது. உயிர் போய்விடுமோ, என்னமோ! கடவுளே, நான் எங்கே போய் ஒளிந்து கொள்ளுவேன்!'' என்று அலறினாள்.

''இரண்டு ரூபாய் கொடுத்தால், முத்துசாமி ஆசாரி தெருவில் ஒரு அம்மாள் இருக்கிறாள்; அவள் எல்லாம் செய்துவிடுவாள்'' என்றாள் தோழி.

''போலீஸாருக்குத் தெரிந்துவிட்டால் பிடித்துப் போவார்களாமே?'' என்றாள் தேவானை.

''அதெல்லாம் பயப்படாதே. அந்த அம்மாளுக்கும் போலீஸாருக்கும் ரொம்பச் சிநேகம். ரூபாய்தான் எல்லாம் செய்யுமே, உனக்குத் தெரியாதா?'' என்றாள் அவள்.

''ஐயோ, நான் ரூபாய்க்கு எங்கே போவேன்? தெய்வமே! என்னை இப்படி மறந்தாயே! நான் இந்தப் பாழாய்ப்போன ஊருக்கு ஏன் வந்தேன்? சேலத்தில் சோறில்லாமல் செத்திருந்தாலும் நன்றாயிருந்திருக்குமே!'' என்று கதறினாள்.

சில நாட்களுக்குப் பின் மற்றொருத்தி வேறு யோசனை சொன்னாள்: குழந்தையைக் கொல்லக் கூடாது அம்மா! அது மூன்று ஜன்மத்துக்கும் தீராத பாவமாகும் என்று சொல்லுகிறார்கள். பிள்ளையார் கோயில் தெருவில் ஒரு பாட்டியம்மா இருக்கிறாள். அவள் ரொம்ப நல்லவள். அவளிடம் போனால் எல்லாம் பார்த்துக்கொள்வாள். உன்னைப்போல் அனேகம் பேர் அவள் வீட்டில் இருந்து குழந்தை பெற்றிருக்கிறார்கள். நீ பயப்படாதே'' என்றாள்.

''நீ மகராஜியாய் இருப்பாய், அக்கா!'' என்று தேவானை அவளை வாழ்த்தினாள். பிறகு, தேவானை பிள்ளையார் கோயில் தெருவில் குடியிருந்த அந்தப் பரோபகாரியம்மை வீடு போய்ச் சேர்ந்தாள். கிரமமாய்ப் பிரசவம் நடந்தது. குழந்தையைத் தொட்டு எடுத்தவுடன் தேவானைக்கு உலகமே வேறு உருக் கொண்டது. எல்லாக் கஷ்டத்தையும் மறந்துவிட்டாள். குழந்தை ஒன்றே உலகம் என்று எண்ணினாள்.

''தெய்வம் கொடுத்த குருத்து. இது என்ன செய்தது பாவம்'' ''நான்தான் குலபாதகி'' என்று குழந்தையை எடுத்துப் பாராட்டுவாள். இவ்வாறு சில நாட்கள் கவலைகளை மறந்திருந்தாள்.

''நீ வேலைக்கு இப்போது போக முடியாது. தேவானை! இங்கேயே இன்னும் சிலநாள் இரு'' என்று, பிள்ளையார் கோயில் தெருப் பரோபகாரியம்மை வெகு பரிதாபமாகச் சொன்னாள்.

''இவ்வளவு நல்லவர்கள் உலகத்திலிருக்க, நான் தெய்வத்தை நொந்தேனே'' என்று ஆண்டவனைத் தேவானை வாழ்த்தினாள்.

ஒருமாதம் கழிந்ததும் உண்மை தெரிந்தது. அந்தக் கிழவி, மாந்தர்களால் ஏமாற்றப்பட்ட

அனாதைப் பெண்களை வைத்து அக்கிரமத் தொழில் நடத்தி வருபவன். தேவானையும் இந்த வலையில் சிக்கிவிட்டாள். பிறகு அவள் ஆலைக்குப் போகவேயில்லை.

## 5

"சேலத்தில் நம் வீட்டில் வேலை செய்து கொண்டிருந்த தேவானை உனக்கு ஞாபகமில்லையா? அவளைப் போலவே யிருந்தாள் இந்தப் பிச்சைக்காரி" என்றார் இராமநாதய்யர்.

தேவானை சேலத்தில் முதலில் வேலைசெய்து வந்த வீட்டு எஜமானரான பென்ஷன் உத்தியோகஸ்தருடைய மூத்த குமாரர் இராமநாத அய்யர். இவருக்குச் சென்னையில் ஒரு பெரிய பாங்கியில் காஷியர் வேலை.

"சேலத்துப் பெண் இங்கே என்னத்துக்கு இருப்பாள்? உங்களுக்குப் பிரமை" என்றாள் சீதாலக்ஷ்மி.

"என்னமோ, எப்படியோ, யாராக இருந்தாலும் குழந்தையை வைத்துக்கொண்டு இம்மாதிரி பெண்கள் பிச்சை யெடுக்கலாயிற்றே; நம் தேசம் என்ன நிலைக்கு வந்தது!" என்றார் இராமநாதய்யர்.

"உங்களுக்கு எப்போதும் தேசந்தான் யோசனை. நம்முடைய குடும்பத்தை நாம் கவனித்தால் போதாதா?" என்றாள் மனைவி.

மறு நாள் மாலையும் இராமநாதய்யருக்கு அந்தப் பிச்சைக்காரி ஞாபகம் விடவில்லை. ஆபீசிலிருந்து சைனாபஜாருக்கு நேராய்ப் போனார். அவளை மறுபடியும் அவ்விடம் காணலாம், கண்டு விசாரிக்கலாம் என்று எண்ணி அந்த வழியாகச் சென்று அந்தச் சிற்றுண்டிச் சாலையண்டை வண்டியை நிறுத்திக் கொஞ்ச நேரம் இருந்தார். பல பிச்சைக்காரர்கள் வந்து, "ஐயா, ஐயா" என்று சுற்றிக் கொண்டார்கள். ஆனால் அவளை மட்டும் காணவில்லை.

அடுத்த சனிக்கிழமை சாயந்திரம் இராமநாதய்யரும் மனைவியும் மறுபடியும் சைனா பஜார் பக்கம் போனார்கள். "அதோ உங்கள் பிச்சைக்காரி" என்றாள் சீதாலக்ஷ்மி.

குழந்தையைக் கையில் ஏந்தி, "அம்மா, ஒரு அணா கொடு. இந்தக் குழந்தையைப் பார், அம்மா!" என்று கெஞ்சிக் கொண்டு அங்கே கொஞ்ச தூரத்தில் வந்து நின்ற மோட்டார் வண்டியண்டை ஓட்டம் ஓட்டமாக அந்தப் பிச்சைக்காரி ஓடினாள்.

இராமநாதய்யருடைய வண்டிச் சாயலைப் பார்த்ததும் அதிலிருப்பவர்கள் ஒன்றும் கொடுக்க மாட்டார்கள் என்று பிச்சைக்காரி எண்ணி வேறு வண்டியண்டை போனாள். பிச்சைக்காரர்களுக்கு இது அனுபவத்தால் வரும் அறிவு. எதிலும் புத்தி கூர்மையும் வேலைத்திறமையும் உண்டல்லவா? தூர நிற்கும் பிச்சைக்காரியைக் கூப்பிட இராமநாத அய்யர்வெட்கப்பட்டார். ஆகையால் கொஞ்ச நேரம் சும்மா இருந்தார். அந்த வண்டியண்டை வேலை முடிந்ததும் தம்மிடம் வருவாள் என்று நினைத்தார். ஆனால் அவள் கூட்டத்தில் மறைந்துபோய்ப் பிறகு காணப்பட வில்லை.

"சரி, போகலாம்!" என்றாள் சீதாலக்ஷ்மி.

எட்டு நாட்கள் கழித்து இராமநாதய்யரும் சீதாலக்ஷ்மியும் சினிமாவுக்குப் போனார்கள். கதை: நளோபாக்கியானம். 'கேட்'டில் பெருங்கூட்டம்: புதிய 'ஸ்டார்' டி. கே. தனபாக்கியம், 'தமயந்தி பார்ட்.'

"அடுத்த காட்சிக்குத்தான் போக முடியும்; இந்தக் காட்சிக்கு டிக்கட்டுகள் முடிந்து விட்டன" என்றார்கள்.

"வீட்டுக்குப் போய்வரலாமா?" என்றார் இராமநாதய்யர்.

சீதாலக்ஷ்மி பதில் சொல்லுவதற்குள்ளாக, "அம்மா! பிச்சை கொடு அம்மா" என்றாள் ஒருத்தி மோட்டார் கதவண்டை.

சேலத்துப் பெண்ணோ என்று பார்க்க இராமநாதய்யர் திரும்பிப் பார்த்தார். அவருக்கு அதே பைத்தியம். அவளல்ல, வேறொருத்தி.

"இங்கே வண்டியை நிறுத்தினால் பிச்சைக்காரர்கள் தொல்லை. வீட்டுக்குச் சீக்கிரமாக ஓட்டு, இராமன் நாயர்!" என்றாள் சீதாலக்ஷ்மி மோட்டாரோட்டிக்கு.

அதே சமயம் ஒரு போலீஸ்காரன் தடியை வீசி அந்தப் பிச்சைக்காரியைத் துரத்தினான்.

அன்றிரவு இராமநாதய்யர் கனவில் பிச்சைக்காரியைக் காண்கிறார்.

"நீ தேவானையல்லவா? எந்த ஊர் நீ?" என்றார்.

மகிழ்ச்சியால் கண்கள் அகன்று, தன் குழந்தையைத் தழுவிக் கொண்டு, "சாமி! சாமி! நீங்கள் சேலமல்லவா? வேப்பமரத்து வீட்டு மகனல்லவா?" என்றாள் பிச்சைக்காரி.

"நாயர்! இவளை முன்னால் ஏற்றிக் கொள்" என்று மோட்டார் ஓட்டிக்குச் சொன்னார்.

வீடு போனதும், "இவள் யார்? இந்தச் சனியனை ஏன் வீட்டுக்கு அழைத்து வந்தீர்கள்?" என்றாள் மனைவி.

"நம் வீட்டில் இவளை நாம் ஏன் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கூடாது? சாப்பாடு போட்டு நாலு ரூபாய் சம்பளம் தரலாம்" என்றார்.

"நல்ல யோசனை செய்தீர்கள்! கெட்டுப் போனதுகளை யெல்லாம் வீட்டில் சேர்த்துக் கொள்ளவா? நல்ல புத்திசாலித்தனந்தான்! போ வெளியே!" என்றாள் சீதாலக்ஷ்மி.

"நான் திருடமாட்டேன், அம்மா! இட்ட வேலையெல்லாம் செய்வேன், அம்மா!" என்றாள் பிச்சைக்காரி.

"முடியாது, போ வெளியே!" என்றாள் சீதாலக்ஷ்மி.

ஒரு ரூபாய் கொடுத்தனுப்பலாம் என்று இராமநாதய்யர் பையை எடுக்கப்போனார். பையை ஜேபியில் காண வில்லை. தேடித் தேடி அலைந்தார். பிச்சைக்காரியின் குழந்தை பலக்க அழ ஆரம்பித்தது...... விழித்துக் கொண்டார்... கனவு! அவர் குழந்தை ராதா படுக்கையில் உட்கார்ந்து அழுது கொண்டிருந்தது.

* * *

"நல்ல வேளை, சீதாலக்ஷ்மி உண்மையில் இவ்வளவு குரூரமாயிருக்க மாட்டாள்; கனவுதானே" என்று இராமநாதய்யர் சந்தோஷப்பட்டார்.

பிறகு பல நாட்கள் வரையில் இராமநாதய்யர், கடை, ரயில்வே ஸ்டேஷன், சினிமா எங்கேயும் பார்த்துக் கொண்டேயிருப்பார். ஆனால், அந்தப் பிச்சைக்காரியை மட்டும் அவர் காணவேயில்லை. அவள் என்ன ஆனாளோ, யாருக்குத் தெரியும்?

Lakmé



டால்கம் பௌடர்



யூ டி கோலான்



லிப்ஸ்டிக்



டஸ்டிங் பௌடர்

பேஸ் பௌடர்



# Lakmé

## லக்மே

அழகின் அலங்காரத்திற்கென
ப்ரஞ்சு முறையிலிருந்து
தயாரிக்கப்பட்ட சாதனங்கள்

Lakmé லக்மே ஒரு டாடா தயாரிப்பு

பாகவதமாகிய

# பக்தி வயல்

## 14. புரஞ்ஜனன் கதையின் கருத்து

புரஞ்ஜனனுடைய கதையைக் கேட்ட பிராசீன பர்ஹிஸ், நாரதரிடம் "முனிவரே! நீங்கள் சொன்ன கதை எங்களுக்கு என்னவென்று விளங்கவில்லை: அதன் கருத்தைக் கவிகள் அறிவாரேயன்றிக் கர்மத்தினால் மயக்கமுண்டிருக்கும் எங்களுக்கு எவ்வாறு தெரியும்?" என்றார்.

அதற்கு நாரதர் பின்வருமாறு பதில் உரைத்தார். "புரஞ்ஜனனை (அதாவது புரத்தைப் படைப்பவன்) ஜீவன் என்று அறிய வேண்டும். ஏனென்றால் ஜீவன் தான் கர்மாவின் பயனாக உடலைத் தன் இருப்பிடமாகச் செய்து கொள்கிறான். அவிக்ஞாதன் (அறியாச் செயலைச் செய்பவன்) என்பது கடவுள். பேரும், குணமும் செயலும் கொண்டு நம்மால் அறிய முடியாதவன். இன்பத்தில் ஈடுபட்ட ஜீவனுக்கு, இரண்டு கைகளும், இரண்டு கால்களும், ஒன்பது துவாரங்களும் படைத்த இந்த மானிட உடலே நற்கருவியாகத் தோன்றியது. புரஞ்ஜனி என்பவள் 'நான்' என்றும் 'எனது' என்றும் தோற்றுவிக்கும் புத்தி. மதியைத் தன்வசம் செய்து கொண்டு உடல் படைத்த ஜீவன், புலன்கள் வாயிலாக உலக இன்பங்களை அனுபவிக்கிறான். அறிவுக்கும் அனுபவத்துக்கும் கருவியான பத்துப் புலன்களே புரஞ்ஜனியின் ஆண் சேவகர்கள். அவைகளின் செயல்களே பணிவிடைப் பெண்கள். ஐந்து பிராணன்கள்தான் ஐந்து தலை நாகம். பிரகத்பலன் என்ற பதினொராவது படையாள் புலன்களை ஆளும் மனம். பஞ்சாலம் என்ற நாடு புலன்கள் தேடும் வெளிப் பொருள்கள். கண்கள் இரண்டு, மூக்குத்துவாரம் இரண்டு, காது இரண்டு, ஆண்குறி, பின்துவாரம், வாய், இவை ஒன்பது வாயில்கள். இவைகள் வழியாகத்தான் ஜீவன் வெளி விஷயங்களை அனுபவிக்கிறான்.

இருதயம் இருக்கும் இடமே அந்தப்புரம். புலன்கள் அடையும் சுகத்தையே யாகத்தில் பசுக்களைக் கொல்வது என்று கூறப்பட்டது.

தேரில் ஏறிப் புரஞ்ஜனன் வேட்டையாடச் சென்றான் என்று கூறினோம். இது மனித உடலையும் ஜீவனையும் வேறொரு விதமாகப் பார்ப்பதேயாகும். தேர் என்பது உடல்; புலன்களே புரவிகள். போவதென்பது கால வேகம். நற்செயலும் தீச்செயலும் சக்கரங்கள். முக்குணங்கள் கொடி மரங்கள். ஐந்து பிராணன்கள் ஐந்து முடிச்சுகள். மனம் கடிவாளம். புத்தி தேரோட்டி. இருதயம் அமரும் இடம். சுகம் துக்கம் முதலிய இரட்டைகள் நுகத்தடி. ஆயுதம் வைக்கும் இடங்களே புலன்களுக்கான வெளி விஷயங்கள். உடலில் இருக்கும் ஏழு தாதுக்கள் ஏழு தேர் மூடிகளாக அறிய வேண்டும். குதிரைகளின் ஐந்துவித வெளி நடை ஐந்து கர்மேந்திரியங்கள். சிற்றின்பமே விலங்கைக் கொல்லும் வேட்டை.

கந்தர்வராஜனை சண்டவேகனை ஓர் ஆண்டு என்று அறிய வேண்டும். அவனுடைய முந்நூற்றறுபது ஆட்களைப் பகலாகவும், முந்நூற்றறுபது பெண்களை இரவாகவும் அறிய வேண்டும். காலத்தின் பெண்ணான துர்பகா ஒருவரும் வேண்டாத வயோதிகம். பயம் என்ற யவனராஜனே கூற்றம். அவன் வயோதிகத்தைத் தன் தங்கையாக ஏற்றுக் கொண்டான். மன வருத்தமும் உடல் வியாதிகளும் அவனுடைய யவனர்கள். ப்ரஜ்வாரன் என்பவன் ஆளை வருத்திக் கொல்லும் பெரும் ஜுரம்.

தேவராலும், பிற மாந்தராலும் தன்னாலும் வரும் துன்பங்களால் வருந்தி அறியாமையால் மூடுண்டு, புலனுக்கும், பிராணனுக்கும் மனத்துக்கும் பொருளான குணங்களைத் தனதெனக் கருதி, சிற்றின்பத்தில் சுழலுகிறான் ஜீவன். மாயையின் வேறுபாடுகளான குணங்களில் பற்றுதல் வைத்து நற்செயலால் நற்பிறவியையும், தீச் செயலால் ஈனப் பிறவியையும் அடைகிறான். தெருவிலே திரியும் நாய்க்குச் சோறும் கிடைக்கும்; சில சமயம் தண்டனையும் கிடைக்கும்; அதுபோலவே ஜீவனுக்கு நல்வினையும் தீவினையும் மேலுலகிலும் கீழுலகிலும் பயன் தருகின்றன.

ஜீவனுக்கு முற்றிலும் துயரின்மை என்பது இல்லை. தலையிலிருக்கும் பாரத்தைத் தோளுக்கு மாற்றுவது போல் ஒரு வலிக்கு வேறொரு வலியே மருந்து. சொப்பனத்துக்குள் மற்றொரு சொப்பனம் காண்பது சொப்பனத்துக்கு மாறான அனுபவம் அல்ல. அதுபோலவே செயலால் செயற்பயனை மாற்ற இய

லாது. அறிவின்மையால் வளரும் அனர்த்தப் பரம்பரைக்கு வாசுதேவ னிடம் பக்திதான் மருந்து.

"அரசே! சடங்குகளில்கழிக்கும் சமயம் பயனற்றது. அவைகளால் ஆண்டவனை அடைய முடியாது. ஊரெல்லாம் தர்ப் பங்களைப் பரப்பி வேள்விகளில் பசுக் களைக் கொன்று செருக்கு மேலிட்டிருக் கிறீர். ஹரிக்குப் பிரியமானது எதுவோ, அதுதான் சடங்கென்ற பெயருக்கு உரியது; அவனிடம் லயிக்கும் தன் மையே அறிவு. அவன் தாள்களே தஞ்ச மென்பதற்குத் தகுதியானவை.

"பெண்ணுடன் கூடி நின்று,பூங்காவில் புல்லைத்தின்று, முன்னிருக்கும் ஓநாயை யும் பின் தொடரும் அம்பையும் அறியாத மதிகெட்ட மானைப் பார். மானைப் பார்த்து மனத்தை உள்ளடக்கு வீர்; நீயவர் கதை மிகுந்தஇல்லறத்தைத் தள்ளி விட்டு மெல்ல மெல்ல வாழ்க்கை யில் நின்று விலகிக் கடவுளை மகிழச் செய்யுங்கள்."

இந்தப் பொருள் ததும்பும் உபதேசத் தைக் கேட்ட பிராசீன பர்ஹிஸ் "முனிவரே, எனக்குப் பாடம் சொன்ன உபாத்தியாயர்கள் இவ்வுண்மைகளை அறியாதவர். என் மனத்தில் தோன்றிய ஐயமும் அழிந்தது. ஆயினும், மறையில் கூறிய சடங்கைச் செய்தால், காரியம் முடிந்தாலும், பயன்மட்டும் காத்திருந்து மறு பிறவியில் கிடைப்பது என்பது எவ்விதம்?" என்று வினவினார்.

அதற்கு நாரதர் பதில் அளித்தார்: "மனத்தில் ஒன்றை எண்ணி அதற் கேற்ற செயலைச் செய்கிறோம். மனத்தின் உருவான 'லிங்கசரீரம்' உடல் நீங்கியும் அழியாது நின்று, வேறு உடலுக்குள் புகுந்து, முன்செய்த செயல்களின் பய னைப் பெறுகிறது. இப்பிறவியில் காணாத காட்சியைச் சொப்பனத்தில் எவ்வாறு காண்கிறோம்? முன் பிறவியில் கண்ட அனுபவம்தான் அது. எப்பிறவியிலும் பாராத தோற்றமும் இல்லாத அனுபவ மும் மனத்தினில் தோன்றாது. (இவ்விடத் தில் லிங்க சரீரம் என்பது என்னவென்று தெரிந்து கொள்ளவேண்டும். சிருஷ்டிக் குக் காரணமான பிரகிருதி முக்குண வடிவமானது. இம் முக்குணங்களின் மாறுபாடுகள்தான் ஐந்து கர்மேந்திரி யங்களாகவும், ஐந்து ஞானேந்திரியங்க ளாகவும், ஐந்து பிராணன்களாகவும், மனமாகவும் விரிந்துள்ளன. இதுதான் லிங்க சரீரம். இது சைதன்யத்துடன் சேருங்கால் ஜீவன் என்ற பெயர் ஏற் படுகிறது. இதனால் ஜீவன் சுத்த சைதன்யன் அல்ல; முக்குணங்களுடைய மாறுபாட்டுடன் கலப்புற்றுக் கட்டுண் டவன் என்பதை அறிய வேண்டும். சிருஷ்டியின் விவரம் 5வது கட்டுரையில் சொல்லப் பட்டிருக்கிறது.) பிறப்புக் கும் சாவுக்கும், காரியத்தை ஏவும் மனமே காரணம். ஆகையால், ஆக்க லும், நிறுத்தலும், நீக்கலும் எந்த ஹரியினுடைய செயல்களோ, அந்த ஹரியுடன் ஒன்றாக அனைத்தையும் எண்ணி, அவனையே துதித்து, இன்பத் தைக் கோரித் தான் என்ற எண்ணத் துடன் செய்யும் செயல்களால் வந்த கைவிலங்கை விலக்கி, முக்தியை அடை வீர்" என்றார்.

ஜீவன் என்றும் கடவுள் என்றும் இரண்டு அன்னங்களைக் குறித்து இவ் வாறு உபதேசம் செய்துவிட்டு நாரதர் மறைந்தார். பிராசீன பர்ஹிஸ் மன்ன னும் மைந்தரிடம் நாட்டைக் கொடுத்து விட்டுக் கபிலாசிரமம் சென்று தவம் செய்து கடவுளுடைய "ஸாம்ய"த்தை (அதாவது அதே தன்மையையும் ரூபத் தையும்) அடைந்தார்.

மைத்ரேயர் விதுரருக்குச் சொன்னார்: "தூய்மை வாய்ந்த விதுரரே! இக் கதை யைக் கேட்பவரும் சொல்பவரும் 'லிங்க சரீரம்' அழிந்து சம்சாரத்தை விட்டு விலகுவார்கள். இந்தக் கதையால் ஜீவன், புத்தியுடன் ஒன்றென எண்ணுவது தவ றென்று தெரியும். இறந்த பின் உயிர் உண்டா என்ற சந்தேகம் தீர்ந்துவிடும்."



விதுரர் மறுபடியும் மைத்திரேயரை, "பிரசேதர்கள் சிவன் சொன்ன துதியைச் செய்து தவம் புரிந்தனரே. அவர்களுக்குக் கிடைத்த பயன் என்ன?" என்று கேட்டார். மைத்திரேயர் அவர்களுடைய வரலாற்றை உரைக்கலானார்.

வெகுநாட்கள் தவம் செய்த பிரசேதர்கள்முன் நாராயணன் தம் தனி "ஸத்வ" ரூபத்துடன் தோன்றினார். கருடன் மீது அமர்ந்து கொண்டு அவர் அளித்த காட்சி மேரு மலை மீதிருக்கும் மேகத்தை ஒத்திருந்தது. தம்மைச் சரண் புகுந்த பிரசேதர்களிடம் கருணையுடன் பேசலானார்.

"உங்களுடைய ஒற்றுமையைக் கண்டு மகிழ்ந்தேன். வேண்டிய வரத்தைக் கேளுங்கள். தினந்தோறும் அந்திப் பொழுதில் உங்களை எண்ணும் உடன் பிறந்தோர் அன்புடன் வாழ்வார்கள். சிவன் செய்த துதியைச் செய்பவருக்குக் கூரிய புத்தியையும் கேட்ட வரத்தையும் நான் கொடுப்பேன். பிரம்மதேவனை ஒத்த மகன் உங்களுக்குப் பிறப்பான். அவனுடைய பரம்பரை மூவுலகிலும் பரவும்."

"கண்டு என்ற முனிவருக்கு ப்ரம்லோசா என்ற தேவமாதிடம் ஒரு பெண் பிறந்தாள். தாயால் கை விடப்பட்ட அப்பெண்ணை மரங்கள் (மரங்களுக்கான தேவதைகள்) எடுத்து வளர்த்தன. பசியால் வருந்தி அழுத அக்குழந்தைக்கு அமுது கசியும் தம் விரலைச் சந்திரன் உண்ணக் கொடுத்தார். மருங்கழகியான அம்மங்கையை நீங்கள் மணம் செய்து கொண்டு மக்களைப் பெற்றிடுவீர்" என்று அருளினார்.

பிரசேதர்கள் ஹரியைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். "ஒரு வரம் தர வேண்டும். பாரிஜாத மலரைப் பெற்ற வண்டு வேறு பூவை அண்டாது. நின் தாளை அடைந்தவன் வேறு ஒன்றையும் விரும்பமாட்டான். ஆனால் உன்மாயையினால் பிறப்பிலும் இறப்பிலும் மாறி வரும் எங்களுக்கு என்னாளும் உன் அடியார் நட்பு நிலைக்க வேண்டும். இதற்கு முக்தியும் விண்ணுலக வாழ்வும் ஈடில்லை" என்று தோத்திரம் செய்தனர்.

(பக்தியில் பரவசம் அடைந்தவருக்கு, பக்தி செய்யும் ஆனந்தமே முக்திக்கும் மேலானது என்பதை நாம் அறிய வேண்டும். இதற்காக அவர்கள் பிறப்பையும் பிணியையும் பொறுக்கத் துணிவார்.)

தவத்தை முடித்துக் கொண்டு பிரசேதர்கள் நீரை விட்டு வெளி வந்தனர். பிரமனின் கட்டளையை மேலிட்டு, மாரிசா என்ற மரங்களின் புதல்வியை மணந்து கொண்டனர். முன்பு சிவனை நிந்தித்து உயிர் இழந்த தக்ஷன் இவர்களுக்கு மகனாய்ப் பிறந்தார்.

பிரசேதர்கள் பத்து லக்ஷம் ஆண்டுகள் இன்பங்களை அனுபவித்தார்கள். பிறகு நாராயணனுடைய வார்த்தையை நினைத்து, வீட்டை விட்டு வெளியேறி மேற்குக் கடலை நோக்கிச் சென்றார்கள். அங்கு ஐம்புலனை அடக்கித் திரும்பவும் தவத்தில் ஆழ்ந்தனர். அவ்விடத்தில் நாரதர் அவர்முன் தோன்றி பக்தியின் உண்மையை உபதேசித்தார். "அஷ்டாங்க யோகத்தாலும், ஸாங்க்யத்தாலும், துறவறம் பூண்டதாலும், மறை ஓதுவதாலும் சிறிதும் பயன் இல்லை. விண்ணவர் அளவு வாழலாம், புத்தியும் பலமும் இருக்கலாம், தவம் புரியலாம், பல்வேறு செயல்களை ஒரு பொழுதே செய்யலாம். ஆனால் தன்னையே தந்தருளும் ஹரியின் சேவையில் இவை அனைத்தையும் அர்ப்பணம் செய்தால் அன்றி, அவை இருந்தும் வீண். வேரில் விட்ட தண்ணீர் கிளைகளைத் தழைக்கச் செய்வது போல், வயிற்றிலிட்ட அன்னம் உடம்பெலாம் பரவுவது போல், ஹரிக்குச் செய்த சேவை எல்லோருக்கும் செய்ததாகும்.

"தீனரிடம் காட்டும் தயவினாலும், போதுமென்றிருக்கும் மனப்பான்மையினாலும், அமைதி அடைந்த ஐம்புலன்களினாலும் ஜனார்த்தனனைத் தாமதமின்றித் திருப்தி செய்யலாகும். பக்தர் மனத்தில் சிறையுண்ட கடவுள் அவ்விடம் விட்டு அகலுவதில்லை. செல்வத்தால் செருக்குண்டு ஏழையான அன்பரைப் புறக்கணிக்கும் பிரபுக்கள் செய்யும் பூஜையை அனந்தன் அங்கீகரிப்பதில்லை."

நாளடைவில் பிரசேதர்கள் பரலோகம் அடைந்தார்கள்.

இந்த வரலாற்றை, ஐந்தாம் கட்டுரையில் விதுரர் மைத்திரேயரைச் சந்தித்ததிலிருந்து, இது வரையில் மைத்திரேயர் விதுரருக்கு எடுத்துரைத்ததாக அறிந்து கொள்ள வேண்டும். வரலாறு முழுவதும் கேட்ட விதுரர் ஹரியின் உருவை மனத்தில் வைத்துக் கொண்டு, மைத்திரேயரை வணங்கி விட்டுத் தம் சுற்றத்தாரைப் பார்க்கத் திரும்பவும் ஹஸ்தினாபுரம் சென்றார்.

இவ்விடத்தில் சுகர் பரீக்ஷித்தினிடம், "அரசே! மனுவின் மகன் உத்தானபாதருடைய பரம்பரையைப் பற்றி இது வரை உரைத்தேன். மனுவின் மூத்த மைந்தன் பிரியவிரதனுடைய வம்ச வரலாற்றை இனிமேல் கூறுகிறேன்" என்றார்.

**(தொடரும்)**

## தீப்புண்?



## வெட்டுக்காயம்?



## விஷக்கடி?






# பர்னால்

உபயோகியுங்கள்

வெட்டுக்காயம்
சுட்டபுண்
பெரியபுண்கள்
பூச்சிக்கடிகள்
உஷ்ணத்தினால்
ஏற்படும் புண்கள்
சரும நோய்கள்
முதலியவைகளுக்குச் சிறந்தது.

தயாராயிருங்கள்! எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் விபத்துகள் ஏற்படலாம்! ஆகையால் பர்னாலை கையோடு வைத்திருங்கள்! குறைந்த விலையில் கையடக்கமான மஞ்சள் ட்யூப்களில் கிடைக்கிறது. இன்றே ஒரு ட்யூப் வாங்குங்கள்!

பர்னால் உன்னதமான
ஆண்டிஸெப்டிக் ஆயின்ட்மெண்ட்

ஒவ்வொரு பர்னால் ட்யூபுடனும் ஒரு 1959-ம் வருட கலர் காலண்டர் இலவசமாக அளிக்கப்படும்

MB. 1




### ஆறும் அத்தியாயம்

## தமையனும் தங்கையும்

தென்பாண்டி நாட்டின் வீரத்தளபதி வல்லாளதேவன் இந்தக் கதையின் தொடக்கத்திலிருந்து இதுவரையில் ஓய்வில்லாமல் அலைந்து கொண்டுதான் இருந்தான். அவனுக்கும், அவன் சிந்தனைக்கும் சில நாழிகைப் பொழுதாவது அமைதி கிடைத்திருக்குமா என்பது சந்தேகம் தான். தன்னையும் தன்னுடையவற்றையும் விடத் தன் கடமைகளைப் பெரிதாகக் கருதும் அந்த உண்மை வீரனுக்கு உடன்பிறந்த தங்கையைச் சந்தித்து மனம் விட்டுச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருப்பதற்குக் கூட இதுவரை ஒழியவில்லை.

இப்போது கூட அவனுக்கு ஒழியாதுதான். கோட்டாற்றுப் படைத்தளத்துக்குப் போய் உடனே படை ஏற்பாடுகளைக் கவனிக்குமாறு அவனுக்கு அவசரக் கட்டளை இட்டிருந்தார் மகா மண்டலேசுவரர். அவருடைய கட்டளையின் அவசரத்தை விட, அவசரமாகத் தன் தங்கை பகவதியையும், ஆபத்துதவிகள் தலைவன் குழைக்காதனையும் சந்திக்க வேண்டியிருந்தது அவனுக்கு.

வெளிப்படையாகச் சந்திக்க முடியாத சந்திப்பு அது. மறைமுகமாகப் பயந்து, பயந்து செய்கிற காரியங்களே மகா மண்டலேசுவரருடைய கவனத்துக்கு எட்டி விடுகின்றன. வெளிப்படையாகச் செய்தால் தப்ப முடியுமா? அன்றைய நிகழ்ச்சிகளிலிருந்து இடையாற்றுமங்கலம் நம்பியைப்

நா. பார்த்தசாரதி

பற்றி அதிக முன்னெச்சரிக்கையும், கவனமும் வேண்டுமென்று அவன் தீர்மானத்துக்கு வந்திருந்தான்.

முதலில் ஆபத்துதவிகள் தலைவன் மகர நெடுங்குழைக்காதனைக் கண்டு அரண்மனைத் தோட்டத்தின் அடர்த்தியான பகுதி ஒன்றுக்குச் சென்று பேசிக்கொண்டிருந்தான். குழைக்காதன், தளபதி அரண்மனைக்கு வருவதற்குமுன் அங்கு நடந்த சில நிகழ்ச்சிகளில் தான் கண்ட சிலவற்றை விவரமாகக் குறிப்பிட்டுச் சொன்னான்.

"நீங்கள் முன்பு கோட்டாற்றிலிருந்து என்னை அனுப்பியபோது கூறியபடி கூடியவரை மகாமண்டலேசுவரருடைய கண்ணுக்கு அகப்படாமல்தான் இருக்க முயன்றேன். ஆனால் கடைசியில் அவர் கண்டுபிடித்து விட்டார்."

"குழைக்காதரே! நீங்கள் நினைப்பது போல் அந்த மனிதரை அவ்வளவு எளிதாக ஏமாற்றிவிட முடியாது. எனக்கே தெரியும். இருந்தாலும் உங்களால் முடிகிறதா; இல்லையா என்று சோதிப்பதற்காகவே அப்படிச் சொல்லி அனுப்பினேன். உங்களுக்கும், எனக்கும் இரண்டு கண்கள் இருந்தால் இரண்டின் பார்வை ஆற்றல்தான் இருக்கும். ஆனால் அவருடைய இரண்டு கண்களுக்கு இருபது கண்களின் ஆற்றல் உண்டு. அப்படி இருந்தும் சில சமயங்கள் அவரைப் பலவீனப்படுத்தி விடுகின்றன!"

"உண்மை! கூற்றத் தலைவர்கள் கூட்டத்தின் போது அவருடைய ஆற்றலையும், பலவீனத்தையும் சேர்த்தே என்னால் காண முடிந்தது."

"அது இருக்கட்டும்! இப்போது நீங்கள் எப்படியாவது அந்தப்புரப் பகுதிக்குச் சென்று என்னுடைய தங்கை பகவதியை இங்கே அழைத்து வர வேண்டும்" என்றான் தளபதி.

"இப்போதிருக்கிற சூழ்நிலையில் நான் அந்தப்புரத்துக்குள் நுழைந்தால் ஒரு பெரிய கலவரம் உண்டாகி விடும். அங்கே புவனமோகினி என்று ஒருவண்ணமகள் என்னை நினைத்து நடுங்கிக் கொண்டிருக்கிறாள். என் தலையை அந்தப்புரத்துக்குள் பார்த்து விட்டால் வேறு வினையே வேண்டியதில்லை" என்று தொடங்கிப் புவனமோகினியின் மூலம் மகாமண்டலேசுவரர் தன்னைப் பற்றி உளவறிந்த விவரத்தைத் தளபதிக்கு விளக்கிக் கூறினான் அவன்.

"அப்படியானால் பகவதியை இப்போது இங்கு வரவழைத்துச் சந்திப்பதற்கு வேறு வழி?"

தளபதியின் கேள்விக்கு வழி சொல்ல வகையறியாமல் விழித்தான் குழைக்காதன். அவர்கள் இருவரும் தோட்டத்தில் எந்த இடத்தில் நின்று பேசிக்கொண்டிருந்தார்களோ, அந்த இடமே அந்தப்புரத்துச் சுவரோரமாகத்தான் இருந்தது. மேல்மாடத்தில்தான் பகவதி, விலாசினி முதலிய பெண்கள் தங்கியிருந்தார்கள். மேன்மாடத்திலிருந்த அந்த அறை அவர்கள் நின்றிருந்த இடத்திலிருந்து நான்காள் உயரத்தில் இருந்தது. மேலே இருந்த அந்தப்புரத்து அறைகள் ஒவ்வொன்றின் நிலைக்கு மேலேயும் ஒரு சிறிய வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

இருவரும் அந்த அறைகளை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டே, என்ன விதமாகப் பகவதியைச் சந்திப்பதென்று தெரியாமல் திகைத்து நின்றனர்.

"எனக்கு ஒரு வழி தோன்றுகிறது! செய்து பார்க்கிறேன். நாம் நினைக்கிற



படி நடந்தாலும் நடக்கலாம். வேறு மாதிரி ஆகிவிட்டால் ஏமாற்றம்தான்" என்று முகம் மலர்ந்து கூறினான் மகர நெடுங்குழைக்காதன்.

"என்ன வழி அது?" தளபதியின் வினாவில் ஆவல் துள்ளி நின்றது.

"இருங்கள்; இதோ செய்து பார்க்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே தலைக்கு மேலிருந்த மாமரத்தில் கைக்கெட்டுகிறாற் போலச் சரம் சரமாகத் தொங்கிக் கொண்டிருந்த மாவடுக்களில் நாலைந்தைப் பறித்தான்.

மேலே பார்த்துக் குறி வைத்து ஒவ்வொரு மாவடுவாக எறிந்தான். அவன் எறிந்த மூன்றாவது மாவடு அறையின் வாசலில் தொங்கிய மணியின் நாக்கில் பட்டு அசைந்தது. அடுத்த கணம் கணீரென்று மணியின் ஓசை ஒலித்தது.

எதை எதிர்பார்த்து அவன் அப்படிச் செய்தானோ, அது உடனே நடந்தது. அந்த மணியோசை எழுந்ததுமே, "யாரது?" என்று அதட்டிக் கேட்டுக் கொண்டே பகவதி அறைவாசலுக்கு வந்தாள். இன்னொரு மாவடுவும் மேலே வந்து அவள் அருகே விழுந்தது. அவள் கோபத்தோடு கீழே குனிந்து மாவடு எறியப்பட்ட திசையைப் பார்த்தாள். மறுகணமே அவள் கோபம் மலர்ந்த சிரிப்பாக மாறியது. கீழே அவள் தமையன் வல்லாளதேவன் மாமரத்து அடர்த்தியிலிருந்து தலை நீட்டிச் சைகை செய்து அவளைக் கூப்பிட்டான். அவள் 'வருகிறேன்' என்பதற்கு அடையாளமாகப் பதில் குறிப்பு காட்டி விட்டுக் கீழே இறங்கினாள்.

"நல்ல வேளை! அறைக்குள் உங்கள் தங்கையே இருந்ததனால் என் தந்திரம் பலித்தது! இல்லாவிட்டால் வம்பாகியிருக்கும்" என்றான் மகரநெடுங் குழைக்காதன்.



"குழைக்காதரே! இப்போதுதான் 'ஆபத்துதவி' என்ற உம்முடைய பெயரைச் சரியானபடி செய்து விளக்கினீர். பிரமாதமான தந்திரம். அபூர்வமான யோசனை. அபாரமான குறி!" எனப் பாராட்டினான் தளபதி வல்லாளதேவன்.

"என்ன அண்ணா இது? என்னைச் சந்திக்க வேண்டுமென்றால் அந்தப்புரத்துக்குள் வந்து உரிமையோடு சந்திக்கலாமே! தோட்டத்தில் நின்று இப்படியெல்லாம் தந்திரம் செய்வானேன்?" என்று கேட்டுக் கொண்டே பகவதி அங்கு வந்து சேர்ந்தாள்.

"தந்திரம் என்னுடையதல்ல, பகவதி! நம் குழைக்காதருடையது!" என்று சொல்லிச் சிரித்தான் தளபதி.

"நினைத்தேன்! அவருடையதாகத்தான் இருக்க வேண்டுமென்று. குறி தவறாமல் எறிகிறாரே!"

"என் குறி கூடச் சில சமயங்களில் தவறிவிடுகிறது அம்மணி!"—எதையோ உட்பொருளாக அடக்கி வைத்துப் பேசினான் ஆபத்துதவிகள் தலைவன். அவனுடைய அந்தச் சிலேடைப்பேச்சு தளபதி வல்லாள தேவனுக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று.

"குழைக்காதரே! நீங்கள் போய் உங்கள் வேலைகளைக் கவனிக்கலாம். நானும் பகவதியும் தனிமையாகப் பேச வேண்டியிருக்கிறது. உங்களுக்குத் தெரிவிக்க வேண்டிய முக்கியமான செய்திகள் எவையேனும் இருந்தால் பகவதியிடம்சொல்லிவிட்டுப் போகிறேன். அவள் உங்களுக்குத் தெரிவிப்பாள். இப்போது நீங்கள் போகலாம்!" என்று தளபதி கூறினான்.

"நல்லது, வணக்கம்! நான் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்" என்று வணங்கிப் புறப்பட்டான் குழைக்காதன். தோட்டத்துப் புதர்கள் பதுங்கிப் பதுங்கித் தன்னை மறைத்துக் கொண்டு வெளியேற அவனுக்கு ஒத்துழைத்தன.

"அண்ணா! நீங்கள் அரண்மனையிலிருந்து வெளியேறிச் செல்லுவதற்கு முன் உங்களை எப்படியாவது ஒருமுறை சந்தித்து விடவேண்டுமென்று நானே நினைத்துக் கொண்டுதானிருந்தேன்" என்றாள் பகவதி.

"பகவதி! இப்போது இந்த அரண்மனையில் நிலவும் சூழ்நிலையில் அண்ணனும்—தங்கையும் தனியே சந்தித்துப் பேசினால் கூட மிகப் பெரிய அரசியல் இரகசியங்களைப் பேசிக் கொள்வதாக எண்ணிக் கொள்வார்கள்."

"மற்றவர்கள் என்னென்ன நினைப்பார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தால் உலகத்தில் எந்தக் காரியத்தையுமே செய்ய முடியாது. அண்ணா! நீங்கள் என்னைக் கூப்பிட்ட காரியத்தைப் பற்றிப் பேசுங்கள். நேரம் ஆகிறது" என்று அவனைத் துரிதப்படுத்தினாள் அவன் தங்கை.

"பகவதி! சிறு வயதில் உனக்கு நான் வேடிக்கையாக ஒரு கதையை அடிக்கடி சொல்வேன்; அது நினைவிருக்கிறதா?"

"ஏழை வேளாளன் ஒருவனுக்கு மண் சுவரின் மேல் கூரையால் வேய்ந்த குடிசைதான் வீடு. விடாத அடை மழையால் சுவர்கள் விழுந்து விடுமோ என்று அஞ்ச வேண்டிய சமயத்தில் குடிசைக்குள் மாடு கன்று போட்டுவிடுகிறது. நிறை மாதத்தோடு பிள்ளைப் பேற்றுக்குத் தயாராயிருந்த அந்த ஏழையின் மனைவிக்கு அதே சமயத்தில் இடுப்பில் வலி கண்டது. இன்னும் சிறிது நேரத்தில் குழந்தை பிறந்து விடுமோ என்று பரபரப்பு ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் குடிசையின் ஒரு பக்கத்து மண் சுவர் ஈரம் தாங்காமல் விழுந்து விட்டது. அந்த வீட்டில் வேலை பார்த்து வந்த அடிமைச் சிறுவன் ஒருவன் இறந்து போனான். வயல்கள் ஈரப்பதமாக இருக்கும்போதே விதைகளை விதைத்து விடவேண்டுமே என்று வீட்டுத் தலைவன் வயலுக்கு ஓடினான். வழியிலே அவனுக்குக் கடன் கொடுத்திருந்தவர் அவனை மறித்துக் கொண்டார். அந்தச் சமயம் பார்த்துப் பக்கத்து ஊரில் அவன் உறவினர் ஒருவர் இறந்து போனதாக இழவு ஓலை கொண்டு வந்தான் ஒருவன். என்ன செய்வதென்றே புரியாமல் அவன் திகைத்துக் கொண்டிருந்தபோது தள்ள முடியாத விருந்தினர்கள் இரண்டு பேர்கள் அவன் குடிசையைத் தேடிக்கொண்டு வந்தார்கள். அப்போது குடிசையின் பின்புறமிருந்து அவனுடைய மூத்த புதல்வனின் அலறல் கேட்டது. அவன் ஓடிப் போய்ப் பார்த்தான். அங்கே அவன் புதல்வனைப் பாம்பு தீண்டியிருந்தது. அவன் 'கோ'வென்று கதறி அழுதான். அந்தச் சமயத்தில் ஊர்க் கணக்கர் வந்து அவன் நிலவரி செலுத்தவில்லை என்பதை நினைவுபடுத்தினார். அவனுடைய குல குருவும் அந்த நேரம் பார்த்து அங்கே வந்து 'தட்சிணையைக் கீழே வைத்துவிட்டு மறு வேலை பார்' என்று கேட்க ஆரம்பித்தார்..."

பகவதிக்குச் சிரிப்பு பொறுக்க முடியவில்லை. "ஏதோ தலை போகிற காரியம் என்று அவசரமாகக் கூப்பிட்டுவிட்டு எதற்கு அண்ணா இந்தக் கதையெல்லாம் அளக்கிறீர்கள்?"

"கதை இல்லை! தென்பாண்டி நாட்டின் இப்போதையச் சூழ்நிலை ஏறக்குறைய இதுதான். கதையில் அத்தனை துன்பங்களுக்கும் ஒரு மனிதன் இலக்கு. இங்கே ஒரு நாடு இலக்கு."

"கதையா அது? தாங்க முடியாத வறுமைத் தொல்லைகளை அனுபவித்த எவனோ ஒரு புலவன் திரித்த பொய்!"

"கதை பொய்யாகவே இருக்கட்டுமே! இப்போது நம்மைச் சுற்றி நடப்பவைகள் பொய்களல்ல. பாண்டி நாட்டுக் கதவைத் தட்டிக் கூப்பிடும் கவலைகள் கனவுகள் அல்ல!"

"அண்ணா! கதையும், எடுத்துக்காட்டும் சொல்லி உண்மைகளைப் புரிய வைப்பதற்கு நான் இன்னும் சிறு குழந்தையா என்ன? சொல்ல வந்ததை நேரடியாகவே சொல்லுங்கள்!"



ராஜாஜியின் வாக்கு :

என்னைக் கொல்வதனால் நீங்களாவது மெலேதனாவது அநீதனாவது என் ஆத்மாவுக்குத் தினையளவு துன்பமும் செய்ய முடியாது. கடவுள் தர்மத்தில் நிற்பவனுக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகாது. எனக்கு மரணம் அல்லது தேசப் பிரஷ்டம் அல்லது குடிப் பிரஷ்டம் விதித்து விட்டால் பெரிய துன்பமாகுமென்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் அப்படியல்ல. இறத்தலை ஒரு பெரிய கஷ்டமாகவோ, துன்பமாகவோ நான் கருதவில்லை. இவ்வளவு நேரம் நான் பேசினதும் என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக அல்ல. அநியாயமாய்க் கடவுள் உங்களுக்குக்கொடுத்த ஒரு பெரும் பொருளைத் தள்ளிவிட்டு அதர்மத்தில் இறங்காதீர்கள்; உங்களுக்கே துன்பத்தையும் நஷ்டத்தையும் உண்டுபண்ணிக் கொள்ளாதீர்கள் என்றே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். என்னைக் கொன்றுவிட்டால் நான் உங்களுக்குச் செய்யும் தொண்டு செய்ய வேறு யாரும் உங்களுக்கு எளிதில் கிடைக்க மாட்டார்கள். ஒரு பெரிய சிங்கம் தன் பலத்தை மறந்து தூங்கிக் கொண்டிருக்குங்கால், ஓர் ஈயானது அதைக் கடித்துத் தொந்தரவுபண்ணி எழுப்புவதுபோல் நான் ஆதென்ஸ் மகா நகரத்தார் தங்கள் கடமைகளையும் உண்மைச் சக்தியையும் மறந்து உறங்கிக் கிடக்க அவர்களைத் தொந்தரவு செய்து தட்டி எழுப்பி வந்தேன். ஈயை நசுக்குவதுபோல் என்னை நீங்கள் சுலபமாய் நசுக்கிவிட்டு, மயக்கமும் நித்திரையும் கெடாமல் இருந்து வரலாம். தூங்குகிறவனை எழுப்பினால் கோபம் வருவது சகஜம். ஆனால் உங்களை நான் அஞ்ஞானத்திலிருந்து தட்டி எழுப்புவது நன்மையா தீமையா என்று யோசித்தீர்களானால் அவ்விதம் என்னை நசுக்கிவிட மாட்டீர்கள். இந்த ஈயை நீங்கள் நசுக்கிவிட்டால் கடவுள் உங்களை எழுப்ப வேறொரு ஈயை அனுப்புவாரோ, இல்லையோ, அதைச் சொல்லுவது முடியாது. கடவுள் எனக்கு இந்த ஏவலிடாதிருந்தால் நான் என் குடும்பம் என் காரியம் எல்லாவற்றையும் இவ்வளவு வருஷங்களாகக் கவனியாமல், ஏன் உங்களுக்குள் ஒவ்வொருவரிடமும் போய், "கெட்டுப் போகவேண்டாம், ஆத்மா பெரியது, தர்மம் பெரியது. நல்வழியில் இறங்கு. உண்மை ஞானத்தைத் தேடு" என்று மனம் சலியாமல் தகப்பனைப் போல், அண்ணன் மாதிரி அல்லும் பகலும் அலைந்து போதித்து வரவேண்டும்?

— ஸோக்ரதர்

"பகவதி! நீ என்னுடைய தங்கை! இந்தச் சூழ்நிலையில் என்னுடைய தங்கையிடமிருந்து நான் சில வீரச் செயல்களை எதிர்பார்க்கிறேன்!"—பொருள் புரிய நிறுத்தி இடைவெளி விட்டு ஒவ்வொரு சொல்லாகச் சொன்னபின் புருவங்கள் ஒன்றுகூடுமிடத்துக்கு மேல் உணர்ச்சி மேடாகிய அந்த அழகு நெற்றியை இமையாமல் பார்த்தான் தளபதி.

"என்ன அண்ணா, அப்படிப் பார்க்கிறீர்கள்? உங்கள் தங்கை மேல் உங்களுக்கே நம்பிக்கை இல்லையா?"

"நம்பிக்கைக்கு ஒன்றும் குறைவில்லை! இப்போது உன்னிடம் மனம் திறந்து உரிமையோடு பேசுகிறேன் நான். உடன்பிறந்தவன் என்ற முறையில் இதுநாள் வரை உனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. நம் அன்னையும் தந்தையும் பிரிந்த நாளிலிருந்து நீ என் கண்காண வளர்ந்திருக்கிறாய், பகவதி. என்னுடைய போர்த் தொழிலுக்குப் பயன்படும் சில வீரக் கலைகளிலிருந்து யாழ், இசை முதலிய நளினக் கலைகள் வரை கற்றுக் கொண்டிருக்கும் நீ இது வரை அரசியல் சூழ்ச்சிக் கலைகளை அதிகம் அறிந்துகொள்ள வாய்த்ததில்லை. நானும் அதற்கு உன்னை விடவில்லை. பவழக்கனிவாயரிடம் நளினக் கலைகளைக் கற்றாய்! ஆசிரியர்பிரானிடம் இலக்கிய அறிவு பெற்றாய்! நான் இப்போது கடைசியாகக் குறிப்பிட்ட கலையை என் மூலமாக எனக்காக நீ கற்றுக்கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது!"

"என்ன, அண்ணா! புதிர் போடுகிறீர்கள்?" என்றாள் பகவதி.

"இப்போதைக்கு அது புதிர்தான்! புதிரை விளக்கிக் கொண்டு வரத்தான் நீ உடனடியாகப் புறப்பட வேண்டும். மிகப் பெரிய அந்தரங்கங்களெல்லாம் இந்தப் புதிருக்குள்தான் அடங்கிப் போயிருக்கின்றன!"

அந்தப் பேச்சிலிருந்து எதுவும் விளங்கிக்கொள்ள முடியாமல் குழப்பத்தோடு அண்ணன் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள் பகவதி. அவனுடைய கண்களில் துணிவின் ஒளி, உறுதியின் சாயை இரண்டையும் அவள் கண்டாள். செய்தே தீரவேண்டிய செயல்களைப் பற்றிப் பிடிவாதமாகப் பேசும்போது அண்ணனுடைய கண்களில் அந்த ஒளியை அவள் கண்டிருக்கிறாள்.

"மென்மையான உன்னுடைய கைகளிலிருந்து வன்மையான செயல்களை எதிர்பார்க்கிறேன், பகவதி! வளை சுமக்கும் கைகளில் பொறுப்பைச் சுமத்த முடியுமா என்று தயங்குகிறேன்!"



சக்தி,
மனோவலிமை
மற்றும்
திடத்திற்கு

# ச்யவன்பிராஷ்

லேஹியம்

ZANDU




உங்களுக்கு சோம்பலும், மந்தமும் இருப்பதாக உணர்கிறீர்களா? உங்களை மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்ய சக்தியை அளிக்கும் டானிக் ஒன்று தேவையாயிருக்கிறது. ச்யவன் பிராஷில் சக்தியை கொடுக்கக் கூடிய பொருள்களுடன், ஆரோக்கியத்திற்கும், நோய்வாய்ப் பட்டிருக்கும் பொழுதும் மிகவும் அவசியமான விடமின்-C யும் சேர்ந்திருக்கிறது.



ஜண்டு பார்மஸுடிகல் வொர்க்ஸ் லிட்.,
கோகலே ரோடு ஸௌத், பம்பாய்-28.

Graphic 2 19

---

# மதுபாலாவின்
# அழகின்
# இரகசியம்

கோத்ரெஜ்

# வத்னி*

சாவி மார்க்






100% ஸ்வதேசி

* "தாய்நாடு"
என்று அர்த்தங்கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

# எச்சரிக்கை!

# உங்கள் ஜலதோஷம் அபாயகரமாகக் கூடும்!

**வியாதி ஆரம்பமாகு முன்னரே, ஜலதோஷ அவஸ்தைகளை இந்த நல்ல, சக்திவாய்ந்த ஆயின்மெண்ட்டால் ஒழியுங்கள்!**

உங்கள் சளித்தொந்திரவுகளை லகுவில் ஒழிக்க வழியிருக்கும்போது, வியாதி ஏற்பட ஏன் விடவேண்டும்? படுக்கும் முன், விக்ஸ்வேபோரப்பை மார்பிலும், தொண்டையிலும், முதுகிலும் தேயுங்கள். உடனேயே உபாதை இருக்கும் இடத்திலேயே ஆஸ்வாஸம் ஏற்படுவதை உணர்வீர்கள்! நீங்கள் நிம்மதியாக தூங்கும் சமயம், விக்ஸ் வேபோரப் சளி உபாதைகளை விரட்டியடிக்கிறது! மறுநாட்காலையிலேயே நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்!

*ஜலதோஷத்திலிருந்து 2 விதங்களில் நிம்மதி தருகிறது!*



**1**

மூக்கின் வழியே வேலை செய்கிறது. விக்ஸ் வேபோரப் சக்திவாய்ந்த ஔஷத ஆவிகளை வெளிவிடுகிறது. நீங்கள் சுவாசிக்கும்பொழுது மூக்கிலும் தொண்டையிலும் உள்ள சளி உபாதைகளை அகற்றுகிறது.



**2**

சருமத்தின் மூலமும் வேலை செய்கிறது. விக்ஸ் வேபோரப்பின் நிம்மதிதரும் உஷ்ணம் மார்கபத்தை உடைத்தெறிகிறது.




**விக்ஸ் வேபோரப்**

327 Tam

மார்பு, தொண்டை, முதுகில் தேய்த்தாலே போதும்.

"விக்ஸ் வேபோரப்" டிரேட் மார்க்

**இன்றே விக்ஸ்வேபோரப்பை உபயோகித்து பாருங்கள்!**

**'புதிய' கைக்கடக்கமான பரீட்சார்த்த சைஸ் டின் 40 ந.பைசா தான்**

வசி எக்ஸ்ட்ரா



"உங்கள் தங்கையின் கைகள் அதற்குத் தயங்கப் போவதில்லை, அண்ணா!"

"இந்த வார்த்தைகளை உன்னிடமிருந்து வரவழைப்பதற்கு இத்தனை பேச்சும் பேசவேண்டியிருந்தது. இனிமேல் கவலை இல்லை."—இவ்வாறு கூறிவிட்டுத் தன் தங்கைக்கு மிக அருகில் நெருங்கிக் காதோடு காதாக மெல்லிய குரலில் ஏதோ கூறத் தொடங்கினான் தளபதி வல்லாளதேவன்.

அவன் கூறியவற்றைக் கேட்டுக் கொண்டிருந்தபோதே அவள் முகத்தில் பல்வேறு உணர்ச்சிகளின் நிழல்கள் படிந்து மறைந்தன. நெடுநேரமாக அவள் காதருகில் அவனுடைய உதடுகள் அசைந்து கொண்டிருந்தன. வண்டு பூவைக் குடையும் ஓசையை விட மிக மெல்லிய ஓசையில் பேசுவதற்குத் தென்பாண்டி நாட்டுத் தளபதி எங்கே கற்றுக் கொண்டிருந்தானோ?

பகவதியின் முகபாவங்கள் விநாடிக்கு விநாடி அவன் சொற்களைப் புரிந்து கொண்டதற்கு ஏற்ப மாறுபடும்போது எத்தனை எத்தனை உணர்ச்சிக் குழப்பங்களை அந்த வனப்பு மிக்க நெற்றியில் காண முடிகிறது? பிறைச் சந்திரனைக் கவிழ்த்து வைத்தாற் போன்ற நெற்றி அது. தன் தங்கையிடம் அற்புதமான அழகும், வனப்பும் அமைந்திருப்பதாகப் பெருமைப் பட்டதைக் காட்டிலும், துணிவும், சாமர்த்தியமும் பெருக வேண்டுமென்பதற்காகத்தான் அதிகக் கவலைப் பட்டிருக்கிறான் வல்லாள தேவன். அந்தக் கவலையும் அவன் இப்போது கூறிய செயலைச் செய்ய அவள் ஒப்புக் கொண்டதால் அகன்று விட்டது.

எல்லாவற்றையும் அவள் காதில் இரகசியமாகக் கூறி விட்டுத் தலை நிமிர்ந்தபோது, மேலேயிருந்து சற்றுப் பெரிதான மாவடு ஒன்று தளபதியின் நெற்றிப் பொருத்தில் விழுந்தது. விண்ணென்று தெறித்து விழுந்த அது உண்டாக்கிய வலியில் ஒரு கணம் கண் கலங்கி விட்டது அவனுக்கு.

"ஐயோ, அண்ணா! 'வடு'ப்பட்டு விட்டதே?" என்று அவன் நெற்றியைத் தடவ நெருங்கினாள் பகவதி.

"அதனாலென்ன? இங்கே வடுப்பட்டால் கவலை இல்லை. நீ போகிற காரியம் வடுப்படாமல் பார்த்துக் கொள், பகவதி!" என்று கூறி விட்டு அவள் பதிலுக்குக் காத்திராமல் அங்கிருந்து கிளம்பி விட்டான் அவன்.

## ஏழாம் அத்தியாயம்
# கடலில் மிதந்த கற்பனைகள்

அடிவானத்து விளிம்பு கடற்பரப்பைத் தொடுமிடத்தில் சிறிதாய், இன்னும் சிறிதாய், மிகச் சிறியதாய், அந்தக் கப்பல் மறைகின்றவரையில்செம்பவழத் தீவின் கரையோரத்து மணல் திடலில் நின்று அதைப் பார்த்துக் கொண்டிருந்தாள் மதிவதனி. இன்னும் அந்தச் சங்கொலி அவளுடைய செவிகளில் புகுந்து மனத்தின் பரப்பெல்லாம் நிறைப்பது போலிருந்தது. பருகுவதற்குத் தண்ணீரே கிடைக்காத பாலை நிலத்தில் பயணம் செய்யப் போகிறவன் சேகரித்து வைத்துக் கொள்கிறமாதிரி அந்த ஒலியையும், அதற்குரியவனின் அழகிய முகத்தையும் மனச் செவிகள் நிறைய, மனக் கண்கள் நிறையச் சேகரித்து வைத்துக் கொள்ள முயன்றாள் அவள். பின்னால் அவளுக்குப் பழக்கமான குரல் ஒலித்தது.

"பெண்ணே! இதென்ன? உனக்குப் பித்துப் பிடித்து விட்டதா? விடிந்ததும் விடியாததுமாக உன்னை வீட்டில் காணவில்லையே என்று தேடிக் கொண்டு வந்தால், நீயோ மணல் மேட்டில் நின்று கடலைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்!"

தன் நினைவு வரப் பெற்றவளாய்த் திரும்பிப் பார்த்தாள் அவள். மணல் மேட்டின் கீழே அவளுடைய தந்தை நின்று கொண்டிருந்தார்.

"அப்பா! அவருடைய கப்பல் புறப்பட்டுப் போய் விட்டது." எதையோ இழந்துவிட்ட ஏக்கம் அவளுடைய சொற்களில் ஒலித்தது.

வாழ்க்கையின் எல்லா அனுபவங்களையும் எண்ணி, பேசி — அனுபவித்து உணர்ந்திருந்த அந்தப் பெரியவர் தம் பெண்ணின் பேதைமையை எண்ணி மனத்துக்குள் இலேசாகச் சிரித்துக் கொண்டே சொன்னார்:—

"அதைப் பார்க்கத்தான் சொல்லாமல் கொள்ளாமல் இவ்வளவு அவசரமாக எழுந்திருந்து ஓடி வந்தாயா? அங்கே உன் அத்தை உன்னைக் காணவில்லையே என்று கிடந்து தவித்துக் கொண்டிருக்கிறாள்."

மதிவதனி அவருடைய பேச்சைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை. "அப்பா! நான் இங்கே கரையில் வந்து நின்றதும் கப்பல் மேல் தளத்திலிருந்து என்னைப் பார்த்து விட்ட

ராஜாஜியின் வாக்கு

நம்முடைய சுதந்திரத்தின் தனிச் சிறப்பு என்னவென்றால் அதன் வெற்றிச் சரித்திரத்தில் கலந்து வந்த கடவுள் பக்தியும் அதையொட்டிய சாத்துவிகமும்! அந்தத் தனிச்சிறப்பை மங்காமல், மறவாமல் நாம் காப்பாற்றி வர வேண்டும். அப்போதுதான் பாரத நாட்டுக்கு உலகத்தில் ஒரு தனி ஆசனம் இருக்கும். இல்லாவிடில் மற்றவர்களோடு பின்வரிசையில் பத்தோடு பதினொன்றாக இருக்க வேண்டியதுதான்.

—ரகுபதி ராகவ

அவர் மகிழ்ச்சியோடு அந்தச் சங்கை எடுத்து ஊதினார், அப்பா!'' என்று அந்த மகிழ்ச்சித் நினைப்பிலே தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தாள் அவள்.

'' சரியம்மா !....போதும் அவருடைய பெருமை! வா வீட்டுக்குப் போகலாம். இங்கே சிறிது தாமதித்தால் உன் அத்தையே நம் இருவரையும் தேடிக் கொண்டு வந்து விடுவாள்.'' மகளைக் கடிந்து கொள்பவர்போல் சினத்துடன் பேசி அழைத்துக் கொண்டு சென்றார் அவர். அந்தப் பெண்ணின் கால்கள் தரையில் நடந்தன. எண்ணங்களோ கடலில் மிதந்து சென்ற அந்தக் கப்பலோடு மிதந்து சென்றன.

வீட்டுக்குப் போனதும் அவளுடைய அத்தை வேறு அவளைக் கோபித்துக் கொண்டாள். ''வயதுதான் ஆகிவிட்டது உனக்கு! உன் வயதுக்கு இவ்வளவு அசட்டுத்தனமும், முரட்டுத்தனமும் வேறு எந்தப் பெண்ணுக்காவது இருக்கிறதோ, பார். யாரோ ஊர் பேர் தெரியாதவன் கடையில் வந்து சங்கு வாங்கிக் கொண்டு போனான் என்றால் இப்படியா அவனையே நினைத்துக் கொண்டு பைத்தியம் பிடித்துப் போய் அலைவார்கள்? கிழக்கே ஒரு மூலை விடிவதற்குள் உனக்குக் கடற்கரையில் என்ன வேலை?''

அத்தையின் சீற்றத்துக்கு முன் தலை குனிந்து நின்றாள் மதிவதனி. கால் கட்டை விரலால் தரையைத் தேய்த்துக் கொண்டு நின்ற அவளுக்குக் கண்கள் கலங்கி விட்டன. பக்கத்தில் நின்ற தந்தை அனுதாபத்தோடு அவளைச் சமாதானப் படுத்தினார்.

'' அசடே! இதற்காக வருத்தப்படலாமா? அத்தை உன் நன்மைக்காகத் தானே சொல்லுகிறாள்! எவரோ மூன்றாவது மனிதரை நினைத்து ஏங்கிக் கொண்டிருந்தால் அவர் நம்மவர் ஆகி விடுவாரா? நீதான் இப்படி நினைத்து நினைத்துக் குமைகிறாய்! இரண்டாயிரம் பொற் கழஞ்சுகளை அலட்சியமாகத் தூக்கிக் கொடுத்து ஒரு சங்கை வாங்கிக் கொண்டு போகும் செல்வச் சீமான் அந்த இளைஞன். நேற்றிரவு நீ அவன் உயிரையே காப்பாற்றி யிருக்கிறாய்! ஆனாலும் என்ன? இந்தத் தீவு பார்வையிலிருந்து மறைந்ததுமே உன்னையும், என்னையும், இந்தத் தீவையும் மறந்து விடப் போகிறான் அவன்! செல்வர்களுக்கு நினைவு வைத்துக் கொள்வதற்கு நேரம் ஏது, அம்மா!''

'' அப்பா! நீங்கள் நினைப்பது தவறு! அவர் என்னையும், இந்தத் தீவையும் ஒரு போதும் மறக்க மாட்டார்'' என்று உடனே பதில் சொல்லிவிடத் துடித்தது அவள் நாக்கு. ஆனால் சொல்லவில்லை. தந்தையின்மேல் கோபம் கோபமாக வந்தது அவளுக்கு. காற்றில் மேலும் கீழுமாக ஆடும் இரண்டு மாதுளை மொட்டுக்களைப் போலத் துடித்தன அவள் இதழ்கள். வலம்புரிச் சங்கோடு தன் நெஞ்சையும் கொண்டு போனவனை அவ்வளவு சுலபமாக — அவர் மதிப்பிட்டதை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அடிபட்ட புலி சீறுவது போல் தந்தையை எதிர்த்துச் சீறின அவள் சொற்கள். ''உங்களையும், இந்தத் தீவையும் எந்நாளும் மறக்கமாட்டேன் என்று நேற்று அவர் நமக்கு நன்றி கூறும் போது நீங்களும்தானே உடன் இருந்தீர்கள் அப்பா?''

பெண்ணின் சினம் அவருக்குச் சிரிப்பை உண்டாக்கியது.

'' பேதைப் பெண்ணே! மனிதர்கள் சொல்கிற வார்த்தைகளை எல்லாமே நூற்றுக்கு நூறு உண்மையாக எடுத்துக் கொண்டு ஏமாறக் கூடாது! செல்வந்தர்கள் எதையுமே சீக்கிரமாக மறந்து விடுவார்கள். உலகத்தில் தாங்கள் செல்வர்களாக இருப்பதற்குக் காரணமாக எங்கோ சிலர் துன்பப் பட்டுக் கொண்டிருப்பதையே அவர்கள் மறந்து விடும்போது உன்னையும் என்னையுமா நினைத்துக்கொண்டே யிருக்கப் போகிறார்கள்?''

'' இல்லை! இல்லவே இல்லை. அவர் என்னை மறக்க மாட்டார்''— குழந்தை போல் முரண்டு பிடித்துப் பேசினாள் அவள். என்னவோ தெரியவில்லை, தன் அடக்கத்தையும் மீறிப் பேசும் ஒரு துணிவு வெறி அவளுக்கு அந்தச் சமயத்தில் உண்டாகி யிருந்தது.

"மதிவதனி! 'அனிச்சம்' என்று ஒரு வகைப் பூ இருக்கிறது. அது மோந்து பார்த்துக் கொண்டிருக்கும்போதே வாடிப் போய் விடும். செல்வந்தர்கள் கொடுத்து விட்டுச் செல்லும் உறுதி மொழிகளும் அப்படித்தான். அவற்றை உண்மை என்று நம்ப முயலும்போதே அவை பொய்யாகி வாடி விடும். செல்வந்தனான ஆண் மகன் ஒருவனின் வார்த்தையை நம்பிக்கொண்டு அவனுக்காக ஏங்கிக் கால வெள்ளத்தில் கரைந்து கொண்டிருந்தாள் ஒரு பெண். அவள் பெயர் சகுந்தலை. அந்த ஆண்மகனோ அவளை மறந்தே போனான். அந்தப் பெண்ணின் ஏக்கத்தை உலகத்துக்கு எடுத்துக்கூற ஒரு மகாகவி தேவையாயிருந்தது. உனக்குத்தான் தெரியுமே, இந்தக் கதை?"—பெரியவர் மறுபடியும் அவளிடம் விவாதித்தார்.

"தெரியாது, அப்பா! தெரிந்து கொள்ளவும் ஆசை இல்லை." அழுகை வெடித்துக் கொண்டு கிளம்பும் எல்லைக்குப் போய் விட்டது அவள் குரல்.

"அண்ணா! இதென்ன? நீங்களும் அவளுக்குச் சரியாகப் பேச்சுக் கொடுத்துக் கொண்டு நின்றால் என்ன ஆவது?" என்று மதிவதனியின் அத்தை கூப்பாடு போட்ட பின்பே அவரும் தம்முடைய பேச்சை நிறுத்தினார்.

முகத்தை மூடிக் கொண்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழத் தொடங்கி விட்டாள் மதிவதனி. அந்தப் பெரியவர்களுக்கு அவளை எப்படித் திருப்தி செய்வதென்று திகைப்பாகி விட்டது. நயமாகவும், பயமாகவும் அவள் அழுகையைத் தணித்து வழிக்குக் கொண்டு வந்தார்கள். அவர்களுக்கு அவள் ஒரே குலக்கொழுந்து. செல்லப் பெண். அந்தப் பெரியவர் வாழ்க்கையில் பல துயர அனுபவங்களைக் கண்டவர். இதோ வளர்ந்து பெரியவளாகி மதிவதனி என்ற பெயருடன் நிற்கும் இப் பெண் சிறு குழந்தையாக இருக்கும் போதே தாயை இழக்க நேரிட்டது. குழந்தைக்குத் தாய்மைப் பேணுதல் மட்டும்தான் இல்லாமற் போய் விட்டது. ஏறக்குறைய அதே சமயத்தில் பக்கத்துத் தீவில் ஒரு பரதவனுக்கு வாழ்க்கைப் பட்டிருந்த அவருடைய இளைய சகோதரி அமங்கலியாகி அண்ணனைத் தேடிக் கொண்டு பிறந்த வீடு வந்து சேர்ந்தாள். இந்த இரண்டு துன்பங்களும் அவருக்கு வாழ்க்கையிலேயே பெரிய அதிர்ச்சிகள்.

தங்கை, வீட்டோடு இருந்து அவருடைய பெண் குழந்தையைப் பேணி வளர்த்து விட்டாள். அத்தையின் ஆதரவில் மதிவதனி வளர்ந்து உருவாகி விட்டாள். கண்டிப்பும், கண்காணிப்பும் அதிகமாக இருந்தாலும் அவளுடைய கண் கலங்கினால் மட்டும் அவர்களால் பொறுக்க முடியாது.

"மதிவதனி! உனக்கு நல்ல கைராசி இருக்கிறது. நீ போய் உட்கார்ந்து வியாபாரம் செய்தால் கடையிலும் நன்றாக விலை போகிறது. இன்றும் நீயே கடையில் போய் இரு. நான் வேறு வேலையாகக் கொஞ்சம் வெளியே போய் வருகிறேன்." பெண்ணின் அழுகையையும் கோபத்தையும் தணித்து ஒரு வழியாக அவளைத் தமது கடையில் வாணிகத்தைக் கவனித்துக் கொள்வதற்கு அனுப்பி வைத்தார் அந்தப் பெரியவர்.

கடையில் போய் உட்கார்ந்த பின்பும் அவளுடைய நினைவுகள் எல்லையற்ற கடலில்தான் இருந்தன. (தொடரும்)

**ராஜாஜியின் வாக்கு :**

வேறு தேசத்திலிருந்து வந்த அன்னியன் ஒருவனுக்கு ஊரிலிருக்கும் விஷயங்கள் தெரியாது. அவ்வாறே நடக்கும் சம்பவங்களின் பொருளை அறிந்து ஒப்புக் கொள்ளாதவன் உலகத்துக்கே அன்னியனாவான். ஜனங்களை ஒன்றாகக் கட்டுப்படுத்தி அமைந்து வரும் சமூக தருமத்தை ஒத்து நடவாமல் வேறுபடுகிறவன் பரதேசியாவான். அறிவு என்னும் கண்ணை மூடிக் கொள்கிறவன் குருடனாவான். சுகம் தரும் சுவாதந்திரியத்தை விட்டுப் பிறரை எதிர்பார்க்கிறவன் யாசகனேயாவான். நாம் எதிலிருந்து உண்டானோமோ, அதிலிருந்தே சகல சம்பவங்களும் உண்டாகின்றன. தனக்கு நேரிட்ட சம்பவங்களைப் பற்றி வெறுப்பு கொண்டு விசுவ தருமத்திலிருந்து வேறுபடுகிறவன் உலகத்துக்கு ஒரு புண்ணைப் போலாவான். அறிவுள்ள பிராணிகளெல்லாம் ஒரு ஜீவ அமைப்பாக இருக்கத் தன்னை வேறாக நினைத்து வாழ்பவன் குலப் பிரஷ்டனாவான்.

தெய்வத்தை நம்பி உனக்கு எஞ்சியுள்ள நாட்களை முடித்துக்கொள். நீ படைத்த அனைத்தையும் தெய்வத்துக்குச் சமர்ப்பித்தாய் என்று சந்தோஷமாக இரு. மற்றவர்களை நான் அக்கிரமமாக நடத்தவில்லை. எவனுடைய சுதந்திரத்தையும் நான் ஆக்கிரமிக்கவில்லை. நானும் யாருக்கும் அடிமையாகாமல் சுதந்திரமாகக் காலம் கழித்தேன் என்று சந்தோஷமாக இரு.

—மார்க்க அரேலியரின் ஆத்மசிந்தனை

அவனுக்கு,
ஜான்ஸன்ஸ்
பேபி சோப்பே
ஏற்றது




இலவசபுத்தகம்: ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு 35 நயா பைசா ஸ்டாம்பு வைத்து எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது தமிழ் பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிடவும்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ் 1976,
டிபார்ட்மெண்ட் 100 B
பம்பாய்

# பழைய நினைவுகள்

க. சந்தானம்

சாதாரண மனிதருக்கும் மகான்களுக்குமுள்ள பேதத்தை ஏரிக்கும் கடலுக்குமுள்ள வித்தியாசத்துக்கு ஒப்பிடலாம். மழை பெய்து நீர் நிரம்பியிருக்கும்பொழுது ஏரி ரம்மியமாக விருக்கிறது. சில வேளை கரையை உடைத்துப் பயிரை நாசமாக்கிவிடுமோ என்ற பயமும் உண்டாகிறது. கோடை காலத்தில் ஜலம் வற்றிப் பாழும் இடலாகிறது. கடல் ஒரு சமயம் பொங்கி எழும். மற்ற வேளைகளில் சலனமற்றுச் சாந்தமாகவிருக்கும். ஆனால் அதன் பெருமை என்றும் குன்றாது. பொங்கும் காலத்தில் பயங்கரமாக இருக்கலாம். சலனமற்ற சமயத்தில் அதன் காம்பீர்யம் அதிகம். ராஜாஜியின் வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கையில் இந்த உவமைகள் என் மனத்தில் உதித்தன.

இக்கட்டுரை விமர்சனம் அல்ல. குருக்களைச் சீடர்களும், தலைவர்களைத் தொண்டர்களும் நடுநிலைமை வகித்து விமரிசனம் செய்வது சாத்தியமல்ல. தகாத செயலுமாகும். இது புகழுரையுமன்று. 'கல்கி' பத்திரிகையே ராஜாஜிக்கு ஓயாத புகழுரையல்லவா? அதை ஆரம்பித்தவர் பெரும் பக்தர் கிருஷ்ணமூர்த்தி. அதை நடத்துபவர் பரமபக்தர் சதாசிவம். நிறைந்த தேன் குடத்தில் ஓர் கரண்டி சர்க்கரை போடுவதில் பயன் என்ன? ஆதலால் ராஜாஜிக்கு 79 ஆண்டுகள் பூர்த்தியாகும் நன்னாளில், அவர் வாழ்க்கையில் எனக்குத் தெரிந்த சில கட்டங்களைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன்.

1920ம் வருஷத்தில் ஆகஸ்டு மாதத்தில் மகாத்மா காந்தி தமது ஒத்துழையாமை இயக்கத்தை முதன் முதலாகத் தமிழ் நாட்டில் பிரசாரம் செய்யத் தொடங்கினார். அதற்குக் காரணம் ராஜாஜியே. பிராட்வே 7ம் நம்பர் கட்டடத்தில் கிலாபத் கமிட்டி காரியாலயம் இருந்தது. அங்கு ஓர் தனி கூட்டம் நடைபெற்றது. சீனிவாச சாஸ்திரியார், ஜி. ஏ. நடேசன், சத்தியமூர்த்தி முதலானோர் வந்திருந்தனர். 'பொது மக்கள் பேராதரவு அளிக்கலாம். ஆனால் வக்கீல்கள் தங்கள் தொழிலைத் தியாகம் செய்வார்களா? மாணவர்கள் கல்விக் கூடங்களைத் துறப்பார்களா?' என்ற பிரச்னைகளைப் பற்றியே நீண்ட சர்ச்சை நடந்தது. காந்திஜி முடிவில் கூறியது எனக்கு இன்னும் ஞாபகமிருக்கிறது. ''பலர் தியாகத்திற்குத் தயாராக இல்லாமலிருக்கலாம். ஆனால் சிலர் முன் வந்தாலே திருப்தி யடைவேன். ஓர் நல்ல தியாகி கிடைத்தாலும் போதும்'' என்றார். தனது கையில் ஒருவரை வைத்துக்கொண்டே அவ்விதம் தைரியமாகக் கூறினார்.

அப்பொழுது கிலாபத் இயக்கத்தில் சென்னை முஸ்லிம்கள் குதூகலத்துடன் பங்கெடுத்துக் கொண்டனர். ஆனால் அதை நடத்த ராஜாஜியையே நம்பியிருந்தனர். 1920 செப்டம்பரில் கல்கத்தாவில் கூடவிருக்கும் விசேஷ காங்கிரஸ் கூட்டத்தில் ஒத்துழையாமைத் தீர்மானமே முக்கியப் பிரச்னையாக விருக்குமென்று நிச்சயமாயிற்று.

அச்சமயம் பாரதத்தின் பிரபல தலைவர்கள் அதை எதிர்த்தனர். சென்னையில் காங்கிரஸ் நிர்வாகத்தை நடத்தி வந்தவர்களும் ஒத்துழையாமையை எதிர்த்தனர். அதற்குச் சாதகமான பத்திரிகைகளே இல்லை என்றால் மிகையாகாது. தமிழ் நாடு காந்தியடிகளுக்கு ஆதரவளிக்காது என்றே பலர் எதிர்பார்த்தனர். ஆனால் ராஜாஜியின் திறமையை அறியாமலே அவ்வாறு நினைத்தார்கள்! சென்னையின் பல பாகங்களிலிருந்து இருநூறுக்குமேல் பிரதிநிதிகள் கல்கத்தாவுக்குப் புறப்பட்டனர். இதைக் கண்டு சென்னைக் காங்கிரஸ் தலைவர்கள் திடுக்கிட்டனர். கல்கத்தாவில் கம்பெனிகளில் வேலை பார்க்கும் தமிழ் வாலிபர்களைப் பிரதிநிதிகளாகச் சேர்த்தனர். பிரதிநிதிக்கட்டணம் பத்து ரூபாய் கொடுத்து காங்கிரஸ் கூடும் இடத்துக்குப் பிரயாணம் செய்யக்கூடிய எவரும் அக்காலத்தில் பிரதிநிதி யாகலாம். வெளியூர்களில் வசிப்போரும் தமது மாகாணத்தின் பிரதிநிதிகளாகலாம்.

பிரதிநிதிகளின் முக்கிய வேலை விஷயாலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பது. அக்கமிட்டியின் முடிவுகளே முதலில் காங்கிரஸ் கூட்டத்தில் விவாதிக்கப்படும். ஒத்துழையாமைத் தீர்மானம் அங்கு தோற்று விட்டால் காந்தியடிகள் அதைப் பொதுச் சபையில் வற்புறுத்துவாரென்று எவரும் நம்பவில்லை. சென்னைப் பிரதிநிதிகளின் கூட்டத்தில் பழைய காங்கிரஸ் தலைவர்கள் தாங்கள் விரும்பும் விஷயாலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களின் ஜாபிதாவை வெள்ளைக் காகிதத்தில் அச்சடித்துத் துண்டுப் பிரசுரமாக வழங்கி இருந்தனர். ராஜாஜியைச் சேர்ந்தவர்கள் தங்கள் அபேக்ஷகர்களைப் பச்சைக் காகிதத்தில் அச்சடித்துக் கொடுத்தனர்.

கல்கத்தா குமாஸ்தாப் பிரதிநிதிகள் என்ன செய்வார்களென்பதே சந்தேகத்துக்கிடமாக விருந்தது. அவர்களில் பலர் வந்து தூரத்திலிருந்து பார்த்தனர். ராஜாஜியின் தலைமையில் ஒத்துழையாமையை ஆதரிப்போர் சிப்பாய்களைப் போல் அணிவகுத்து உட்கார்ந்திருப்பதையும், அவர்களில் பெரும்பாலோர் தங்களைப்போல் இளைஞர்களாக இருப்பதையும் கண்டு திரும்பிப் போய் விட்டனர். ஆதலால், பச்சை ஜாபிதாவிலிருந்தவர் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இது சென்னைக் கூடாரத்தில் மட்டுமின்றி எல்லாக் கூடாரங்களிலும் அதிர்ச்சியையுண்டாக்கிற்று.

* * *

1921-ம் ஆண்டில் பெஜவாடாவில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கூடி, ஒரு கோடி அங்கத்தினர்களையும், ஒருகோடி ரூபாய் திலகர் நிதியும் சேகரிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்தது. தமிழ் நாட்டில் நிதி திரட்டுவது மிகவும் சிரமமாக விருந்தது. தனவந்தர்களில் பலர் ஜஸ்டிஸ் கட்சியில் சேர்ந்திருந்தனர். மற்றவர் அரசாங்கத்துக்கு அஞ்சி

யவர். சிறு தொகைகளாக நடுத்தரத்தாரிடமும், பொதுக் கூட்டங்களில் ஏழைகளிடமிருந்தும் வசூல் செய்யவேண்டியிருந்தது. அதற்காகச் சுற்றுப் பிரயாணம் செய்யும்பொழுது தினம்தோறும் வசூல்களின் கணக்குகளைத் தீர்த்து, வசூலான பணத்தை ரகவாரியாகப் பிரித்துக் கட்டி அடுத்தநாள் பாங்கிக்கு அனுப்பத் தயார்செய்த பிறகே ராஜாஜியும் அவருடைய சகாக்களும் படுக்கைக்குச் செல்வார்கள். பல நாட்களில் இரவு 12மணிக்கு மேலாகிவிடும். மொத்தம் இரண்டு லக்ஷத்துக்குக் குறைவாகவே தமிழ்நாட்டில் வசூலாயிற்று. ஆனால் அதைக் கொண்டு இதர மாகாணங்களில் பத்து லக்ஷம் ரூபாய் செய்த வேலையை இங்கு ராஜாஜி செய்தார். அதன் பெரும்பாகம் கதர் வேலைக்கு முதலீடாக வைக்கப்பட்டது. அது இன்றும் தமிழ்நாட்டுச் சர்க்கா சங்கத்தின் ஆஸ்தியில் இருந்து வருகிறதென்று நம்புகிறேன். பண விவகாரங்களில் தம்பிடி வரையில் நேரான கணக்கும், செலவில் கடுமையான சிக்கனமும் ராஜாஜியின் பொது வாழ்வின் தனிச் சிறப்புக்கள்.

* * *

1922ம் வருஷம், சௌரி சௌரா சம்பவத்தின் காரணமாக காந்தியடிகள் சத்தியாக்கிரக இயக்கத்தை நிறுத்தி விட்டார். சிறைகளில் குழுமியிருந்த தலைவர்கள், தொண்டர்களுக்கெல்லாம் பெரும் ஏமாற்றம், கோபம். 'ஒத்துழையாமை தோற்றுவிட்டது, இனிச் சட்டசபைகளில் புகவேண்டு'மென்ற கிளர்ச்சி பரவிற்று. கல்கத்தாவில் சித்தரஞ்சனதாஸ், அலகாபாத்தில் மோதிலால்நேரு, சென்னையில் சத்தியமூர்த்தி முதலிய பெருந்தலைவர்களின் கர்ஜனைகளைப் பத்திரிகைகள் பன்மடங்காகப் பெருக்கின.

'காந்தியடிகள் என்ன செய்தாலும் அது சத்தியத்தையும், சுதந்திரத்தையும் வளர்க்கும்' என்ற பக்தியுள்ள தொண்டர்கள் மனம் சோர்ந்தனர். இதுவே சரியான தருணமென்று காந்தியடிகள்மீது ராஜத் துவேஷக் குற்றம் சாட்டி ஆறு வருஷம் தண்டனை கொடுத்துச் சிறையில் அடைத்தனர். ஜவாஹர்லாலும் ஜெயிலில் இருந்தார். ஒத்துழையாமைக் கட்சியைச் சேர்ந்தவர் அனைவரும் ராஜாஜியையே நோக்கிக் கவலையுடன் காத்திருந்தனர். அக்காலத்தில் கொடிய காசநோயால் (ஆஸ்த்மாவால்) அவர் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் பக்கத்திலிருந்தவர்கள் அவருடைய இருமலைக் கண்டு நடுங்கினர். எப்படிப் பிழைத்திருப்பார் என்று அடிக்கடி ஐயமுறுவது முண்டு.

அவ்வாண்டின் இறுதியில் காங்கிரஸ் மகாசபை கயாவில் கூடியது. சித்தரஞ்சன்தாஸ் தலைமை வகித்தார். கல்கத்தா விசேஷ காங்கிரஸ் போலவே தலைவர் கோஷ்டி பெரும்பாலும் சட்டசபையில் புகுவதை ஆதரித்தது. பிரதிநிதிகளில் பெரும்பாலோர் ஒத்துழையாமை இயக்கத்தில் சிறை சென்ற தொண்டர்கள். அவர்களுடைய தலைவர்கள் ராஜாஜி, சர்தார் பட்டேல், ஜம்னுலால் பஜாஜ், ராஜேந்திரபிரசாத். விஷயாலோசனைக் கமிட்டியிலும், பொதுக் காங்கிரஸ் மேடையிலும் சட்டசபைகளை எதிர்த்த கூட்டத்தாரின் சார்பாகப் பேசியது பெரும்பாலும் ராஜாஜியே.

மற்றவர்கள் எவ்வளவோ ஆவேசத்துடன் வாதம் செய்தனர்! சிங்கங்கள்மாதிரி கர்ஜித்தனர். ராஜாஜியோ எள்ளளவும் ஆத்திரமின்றி, உணர்ச்சியே இல்லாத ஓர் சர்வகலாசாலை ஆசிரியரைப்போல் தத்துவங்களை எடுத்து விளக்கினார். அவரது அமைதியைக் கண்டு எதிர்க்கட்சித் தலைவர்களின் ஆத்திரம் அதிகரித்தது. ஆனால் தொண்டர்களின் உறுதியும் பெருகியது. சட்டசபை பகிஷ்காரம் ஊர்ஜிதமாகி விட்டது. தாஸ் ராஜிநாமா செய்துவிட்டார். விரும்பினால் ராஜாஜி காங்கிரஸ் மகாசபையின் தலைவராகி யிருக்கலாம். ஆனால், அவர் என்றும் தனக்காகப் பெருமையையோ, பதவியையோ விரும்பியதில்லை. சில மாதங்களுக்கெல்லாம் ஜவாஹர்லால் வெளிவந்தார். மகம்மதாலியும் விடுபட்டார். இருவரும் கூடி சுயராஜ்யக் கட்சியோடு காகிநாடா காங்கிரஸ் கூட்டத்தில் சமாதானம் செய்து கொண்டனர். பின்னர் மகாத்மா காந்தி விடுதலை யடைந்ததும், அவரைச் சேர்ந்தவர்கள் சட்டசபைப் பூசலிலிருந்து அடியோடு விலகி கதர், தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு முதலிய நிர்மாண வேலைகளில் ஈடுபட வேண்டுமென்று தீர்மானமாயிற்று. ராஜாஜி திருச்செங்கோட்டுக் கருகாமையில் காந்தி ஆசிரமம் அமைத்துக் கிராமத்தொண்டு புரியலானார்.

* * *

பாரதம் முழுதும் ஓயாமல் சுற்றுப்பிரயாணம் செய்து, ஆயிரக்கணக்கான மக்கள் குழுமிய கூட்டங்களில் பிரசங்கம் செய்து, பத்திரிகைகளுக்கு ஆங்கிலக் கட்டுரைகள் எழுதிவந்த ஒருவர், இவற்றை யெல்லாம் விட்டு விட்டு, ரயில்வேஸ்டேஷனிலிருந்து பன்னிரண்டு மைல் தூரத்தில் காட்டாரம்பத்தில் படிக்கத் தெரியாத குடியானவர் மத்தியில் என்ன வேலைசெய்ய முடியும் என்று கேட்பது சகஜமல்லவா? படிக்கத் தெரியாத குடியானவர்களுக்குத் தபாலில் வரும் கடிதங்களைப் படித்துக்காட்டிப் பதில் எழுதுவார். ஓர் ஆரம்பப்பள்ளி ஏற்படுத்தி அதில் தலைமை ஆசிரியராகப் பணி செய்தார். மாட்டுவண்டியில் இரவு முழுதும் உட்கார்ந்து சென்று தூரத்திலுள்ள கிராமங்களில் கதர், மதுவிலக்குப் பிரசாரம் செய்தார். விமோசனம் என்ற ஓர் சிறிய மதுவிலக்குப் பத்திரிகை பிரசுரித்தார். காந்தி ஆசிரமத்திலிருந்து கொண்டு உலக மதுவிலக்குச் சங்கக் காரியதரிசியாக வேலைசெய்தார். அவர் அங்கிருந்த ஐந்து வருஷங்களில் மூன்று வருஷம் பஞ்சம். குடியானவர்களுக்குக் குறைந்த விலையில் தானியம் கொடுத்துப் பஞ்ச நிவாரண ஏற்பாடுகள் செய்யவேண்டியிருந்தது.

ஓர் அபூர்வ சம்பவத்தை மட்டும் கூறிவிட்டு இந்தக் கட்டத்தை முடித்து விடுகிறேன். ஆசிரமத்துக்குச் சமீபத்தில் ஓர் கொலை நடந்தது. சுற்றியுள்ள குடியானவர்களில் பெரும்பாலோர் கவுண்டர்கள், நல்ல உழைப்பாளிகள். ஆனால் கொலைக்கு அஞ்சாதவர்கள், குடிகாரர்கள். கொலை நடந்த கிராமத்திலும் அதற்கருகாமையிலுமுள்ள பல கவுண்டர்

ஆண்களையும், பெண்களையும் போலீசார் பிடித்துக் கொண்டுபோய், சிறையில் வைத்து அவர்களிடம் வஞ்சம் வாங்கிக் கொண்டு விடுதலை செய்தனர். அக் குடியானவர்கள் ஆசிரமத்தில் வந்து முறையிட்டனர். ராஜாஜி அவர்களிடம் வாக்குமூலம் வாங்கி, போலீசாரை வரவழைத்துப் புத்திமதி கூறினார். போலீசார் வாங்கின வஞ்சத் தொகைகளைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, தங்கள்மீது மேல் நடவடிக்கை எடுத்துக் கொள்ளக் கூடாது என்று வேண்டிக் கொண்டனர்.

* * *

உப்பசத்தியாக்கிரகம் குஜராத்தில் காந்தியடிகளின் தலைமையிலும் தமிழ் நாட்டில் ராஜாஜி தலைமையிலுமே ஒழுங்காக நடைபெற்றது.

காந்திஜி தண்டிக்குப் போய்க் கொண்டிருக்கும் பொழுது அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்குச் சென்று, அங்கிருந்து ராஜாஜியுடன் காந்திஜி கோஷ்டியின் பிரயாணத்தைப் பார்க்கப் போயிருந்தேன். திரும்பி வந்ததும் திருச்சியிலிருந்து நூறு பேர் கொண்ட உப்பு சத்தியாக்கிரக கோஷ்டி வேதாரண்யத்திற்குக் கால் நடையாகச் சென்று சத்தியாக்கிரகம் செய்வதென்று ராஜாஜி தீர்மானம் செய்தார். அப்பொழுது தமிழ்நாட்டில் இருந்த உற்சாகமும், கூடிய கூட்டங்களும் வேதாரண்யத்தில் தொண்டர்களின் தைரியமும் குஜராத்திலிருந்ததை விட எவ்விதத்திலும் குறைவில்லை என்பது எனது அபிப்பிராயம்.

முதலில் ராஜாஜிக்கு வடமொழியில் அதிக பரிச்சயமில்லை. கல்லூரியில் தமிழ்தான் ஓர் அளவு கற்றிருந்தார். ஒத்துழையாமை ஆரம்பத்திலிருந்து தனது தமிழ் அறிவை வளர்த்து வந்தார். வட மொழியையும் பயிலவேண்டும் என்ற ஆவல் எப்பொழுது தோன்றிற்று, அதை எப்பொழுது ஆரம்பித்தார் என்று எனக்கு ஞாபகமில்லை. உப்பு சத்தியாக்கிரகத்தில் சிறை சென்ற காலத்தில் தொடங்கினதாக எண்ணுகிறேன். அப்பொழுது அவருக்கு வயது ஐம்பதுக்குமேல். அந்த விடா முயற்சியுடன் பயின்றதின் பலன் அவருடைய கீதை, வேதாந்தம், வியாசர் விருந்து, சக்கரவர்த்தித் திருமகன் என்ற ஒப்பற்ற நூல்கள்.

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் 1930 லிருந்து 5 வருஷங்கள் விவாதம் செய்து 1935 ம் ஆண்டில் புதிய இந்திய அமைப்புச் சட்டத்தை இயற்றினர். அதன்கீழ் 1937-ல் மாகாண சபைகளுக்குத் தேர்தல் நடைபெற்றது. அப்பொழுது ராஜாஜி அரசியலிலிருந்து ஒதுங்கி இருந்தார். அந்த அமைப்பின்கீழ் மாகாண மந்திரி சபைகள் அமைக்கவேண்டுமா என்பதைப்பற்றி பலத்த விவாதம் ஏற்பட்டது. முதலில் தேர்தலில் போட்டி போட்டு வெற்றிபெற்று, அதன்பின் மந்திரி சபையைப் பற்றி முடிவு செய்வதாகத் தீர்மானமாயிற்று. காந்தியடிகளும், சர்தார்படேலும் பலவந்தமாக ராஜாஜியைச் சென்னைத் தேர்தலை நடத்தி, அதற்குப்பின் சென்னைச் சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக்குத் தலைவராகத் தொண்டு புரிய வேண்டுமென்று கட்டளையிட்டனர். 1937 ம் வருஷத்திய தேர்தல் மஞ்சள் பெட்டித் தேர்தல் என்று பெயர் பெற்றது. அப்பொழுது இருந்த குதூகலமும், கட்டுப்பாடும் பாரதம் குடியரசாகிப் புதிய அரசியல் திட்டம் அமைத்துப் பொதுத் தேர்தல் 1952 ல் நடத்தியபொழுது காணப்படவில்லை. பல காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்குச் செலவு செய்யவேண்டிய அவசியமே ஏற்படவில்லை. எதிராக நின்ற அபேக்ஷகர்கள் பல்லாயிர ரூபாய்கள் செலவழித்த போதிலும் கிராமந்தோறும் ஜனங்களே கட்டுப்பாடு செய்துகொண்டு தேர்தல் தினத்தன்று ஊர்வலமாகச் சென்று மஞ்சள் பெட்டியை நிரப்பி இதர பெட்டிகளைக் காலியாக வைத்து வந்தனர்.

ஸ்ரீ எஸ். ராமநாதனின் தேர்தல் குறிப்பிடத் தகுந்தது. காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியோடு சமரசம் செய்ததால் அவர் கோபித்துக்கொண்டு விலகி, காங்கிரஸ் மகா சபைக்கு விரோதமாகப் பிரசாரம் செய்து, பத்திரிகை நடத்திச் சமூக சீர்திருத்தப் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்தார். ஒத்துழையாமையின் ஆரம்ப காலத்தில் அவர் செய்த சேவையை நினைத்து மீண்டும் சேர்த்துக் கொள்ள விரும்பி ராஜாஜி அவரை ஓர் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தினார். பல காங்கிரஸ்காரர்களுக்கு இது பிடிக்கவில்லை. ராமநாதனிடம் பணமுமில்லை. ஆனால் அப்பகுதியில் ஓர் தனவந்த முதலியாரைத்

## நமது கடமை என்ன?

1937—38ல் சென்னை ராஜ்யத்தில் ராஜாஜி மந்திரி சபை ஆட்சி புரியும்போது, ஆலயப் பிரவேச மசோதா கொண்டு வரப்பட்டது. அப்பொழுது மேல்சபை அங்கத்தினராயிருந்த மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் மேற்படி மசோதாவை எதிர்த்துப் பேசுகையில், "நாம் நாட்டை இழந்தோம்; அரசியல் துறையில் தாழ்வை அடைந்தோம். நமக்குள்ள செல்வம் மகரிஷிகளால் அளிக்கப் பட்ட கலைகள். அக் கலைகளுக்கு அறிகுறியாக எஞ்சியிருப்பவர்கள் நம் நாட்டிலுள்ள ஏழை வைதீகர்கள்; அவர்கள் மனம் புண்படும்படியான மசோதா இது. இதை நான் அங்கீகரிக்க முடியாது" என்று குறிப்பிட்டார்.

பிரதம மந்திரி ராஜாஜி எதிர்ப்புக்குப் பதிலளிக்கையில் சாஸ்திரியாரை ஒட்டியே,

"நம் மூதாதைகளாகிய மகரிஷிகளுடைய பெயரையும் புகழையும் நிலைநிறுத்த வேண்டியது நமது கடமை. மனித சமூகத்தை பிளவுபடுத்தி, ஒரே மதத்தைச் சேர்ந்த குற்றமற்ற பெரும் பகுதியினரைப் பிறவிக் குற்றமென்ற கற்பனையில் ஒதுக்கி வைத்து, பகவானைத் தரிசிக்க அவர்களுக்கு உரிமை இல்லை என்று ஒரு காலத்திலும் ரிஷிகள் சொல்லியிருக்க மாட்டார்கள்; சொல்லவும் இல்லை. அப் பெரியார்களின் நற்பெயர் ஓங்க வேண்டியே இந்த மசோதாவை நான் கொணர்ந்துள்ளேன்" என்று பதிலளித்தார்.

தோற்கடித்துப் பெரும் மெஜாரிட்டியுடன் ராமநாதன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அவ்வளவு கஷ்டப்பட்டு வெற்றி பெற்ற தன் பலமே மந்திரிசபை அமைத்தாலொழிய அடைய முடியாதென்று பிடிவாதமாக வற்புறுத்தி ராஜாஜி காந்தியடிகளின் சம்மதத்தைப் பெற்றுவிட்டார். அம் மந்திரிசபை மூலம் உபயோகமுள்ள எக்காரியமும் செய்ய முடியாதென்று சர்தார் படேல், ஜவாஹர்லால் நேரு, ராஜேந்திர பிரசாத் முதலிய தலைவர்கள் தேர்தலில் பங்கெடுத்துக் கொள்ளவும், மந்திரிசபைகளில் சேரவும் மறுத்துவிட்டனர். சென்னையில் ராஜாஜியின் தலைமையில் ஏற்பட்ட மந்திரிசபை 1937ம் ஆண்டிலிருந்து இரண்டு வருஷ காலத்தில் செய்த காரியங்களை இன்று நினைத்தால் ஆச்சரியமாக விருக்கிறது. மதுவிலக்குச் சட்டம் இயற்றப்பட்டு நான்கு ஜில்லாக்களில் அமுல் செய்யப்பட்டது. விவசாயிகளின் கடன் சுமை குறைக்கப்பட்டது. முதல் முதலாக விற்பனை வரி விதிக்கப்பட்டது. பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் மந்திரி சபைக்குப் பணிந்து வேலை செய்தனர். கவர்னர் மந்திரிகளின் காரியத்தில் குறுக்கிடவில்லை. மற்றப் பெருந் தலைவர்களும் அவ்விதமே இதர மாகாணங்களில் தலைமை வகித்து வேலை செய்திருந்தால் நமது அரசியலின் போக்கு வேறுவிதமாக இருந்திருக்கும்.

* * *

**1939**ல் பிரிட்டிஷ் சர்க்கார் தேசத்தின் தலைவர்களைக் கலக்காமல் பாரதத்தை இரண்டாவது உலக யுத்தத்தில் பிணைத்ததற்காக எல்லா காங்கிரஸ் மந்திரிசபைகளும் 1939ல் ராஜினாமா செய்துவிட்டன. அடுத்த வருஷம் நாட்டின் அதிருப்தியைத் தெரிவிக்கவும், ஆனால் ஏதேச்சாதிகாரத்தை எதிர்க்கும் நேச நாடுகளின் கட்சிக்குப் போரில் எவ்வித இடைஞ்சலும் செய்யாமலிருப்பதற்கும் தனிநபர் சத்தியாக்கிரகம் நடைபெற்றது. தென் மண்டலத்துச் சத்தியாக்கிரஹிகள் திருச்சியில் ஓர் தனிச் சிறையில் வைக்கப்பட்டனர். முள் கம்பி வேலிக்குள் அவர்களுக்குப் பல சுதந்திரங்கள் வழங்கப்பட்டன. சீட்டாட்டத்திலும் வீண் வம்பிலும் பலர் காலம் கழித்தனர். ராஜாஜி ஓர் சிறிய காலக்ஷேப கோஷ்டி ஏற்பாடு செய்தார். வால்மீகி ராமாயணம், துளஸிதாஸ் ராமாயணம் இரண்டும் படித்து வியாக்கியானம் செய்யப்பட்டன. ராஜாஜி எழுதிய கீதையையும் சிலர் நன்கு ஆராய்ந்து சந்தேகங்களைக் கூறியதன் பலனாக அதில் பல திருத்தங்கள் செய்தார்.

**1942**-ல் தொடங்கிய சத்தியாக்கிரகம் காலோசிதமானதல்ல என்று ராஜாஜி காங்கிரஸ் மகாசபையிலிருந்து விலகியபோது அவருடைய அரசியல் வாழ்க்கை முடிந்துவிட்டதென்று பலர் நினைத்தார்கள். அவர் வெறும் அரசியல்வாதியாக விருந்தால் அப்படித்தானிருந்திருக்கும். முஸ்லிம் லீக்கையும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையும் ஏக காலத்தில் எதிர்ப்பது சாத்தியமில்லையென்றும், இரண்டில் ஒன்றோடு சமாதானம் செய்துகொள்ளுவது அவசியமென்றும் அப்பொழுது ராஜாஜி கூறியது இப்பொழுது சாதாரணமான ராஜதந்திரமாகத் தோன்றுகின்றது. அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட காங்கிரஸ் மகாசபை பாகிஸ்தானை மறுப்பது சாத்தியமில்லை என்று அவர் எடுத்துரைத்ததையும் இன்று அனைவரும் ஒப்புக்கொள்வார்கள். ராஜாஜியின் புத்திமதியை எதிர்த்த காங்கிரஸ் தலைவர்களைவிட ஜின்னாவே அவர் மீது அதிக கோபங் கொண்டது குறிப்பிடத்தக்கது. பாகிஸ்தான் வேண்டுமென்றால் பஞ்சாப், வங்காளம் இரண்டையும் துண்டு போட்டு முஸ்லிம் அல்லாதவர்கள் பெரும்பாலோராக இருக்கும் பிரதேசங்கள் பாரதத்தைச் சேருமென்று விளக்கியது ஜின்னாவுக்கு விஷபானமாக விருந்தது. அது முண்டமான பாகிஸ்தானாகும் என்று சீறினார். ஆனால் அந்த முண்டத்தையே ஏற்கவேண்டியதாயிற்று. பிரிட்டிஷ் தூதுகோஷ்டியின் யோசனைப்படி 1946ம் ஆண்டின் இறுதியில் ஜவாஹர்லால் நேருவின் தலைமையில் ஓர் தேசீய மந்திரிசபை அமைக்கப்பட்டு அது 1947 ஆகஸ்டு 15ம் தேதி வரையில் பதவியிலிருந்தது. அக்காலத்திய அனுபவத்தால் பாகிஸ்தான் பிரிந்து போகவேண்டுமென்று சர்தார் பட்டேல் துடி துடித்தார். அப்படியில்லாமல் இரண்டு பாகங்களையும் பலவீனமான சங்கிலிகளால் பிணைத்த சுதந்திரத்தை நாம் பெற்றிருந்தால், இன்று பாரதமும் பாகிஸ்தான் நிலைமையில் இருக்கக்கூடும்.

* * *

**ரா**ஜாஜி மத்திய மந்திரி சபையை விட்டு வங்காள கவர்னராகச் சென்றது, கவர்னர் ஜெனரல் பதவியிலிருந்து சென்னை வந்த பிறகு மீண்டும் மத்திய மந்திரி சபையில் புகுந்தது, அதை ராஜினாமாச் செய்து சென்னை வந்தபின் 1952 பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சி மோசநிலையடைந்ததால் அதைக் காப்பாற்றிச் சென்னை மந்திரி சபைக்குத் தலைமை வகித்தது முதலிய கட்டங்களைப் பற்றிப் பலவிதமாக வாதம் செய்யலாம். இரண்டு விஷயங்களை மட்டும் குறிப்பிடுவேன். நான் இக்கட்டுரையின் ஆரம்பத்தில் கூறிய உவமையை மறக்கலாகாது. கடல் எப்பொழுது பொங்கும், ஏன் பொங்குகிறது என்று வினவுவது வீண். இப்பணிகளில் ராஜாஜியின் திறமையையும், தேச சேவையையும் எவரும் போற்றாமலிருக்க முடியாது.

ராஜாஜி அரசியலில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டிருந்த காலங்களில் நாட்டுக்கு அதிக சேவை செய்தாரா அல்லது அதிலிருந்து விலகிப் பொதுமக்களின் அறிவையும், தெய்வ பக்தியையும் வளர்ப்பதற்குச் சிறந்த நூல்களை எழுதியபொழுது சிறந்த சேவை செய்தாரா என்பதைப் பற்றியும் அபிப்பிராயபேதமிருக்கலாம். அவ்வித வாதத்தில் ஈடுபடாமல் அவரைப்போல் உள்ளத்தில் தூய்மை, மதியில் கூர்மை, மனத்தில் பக்தி, சொல்லில் சக்தியுள்ள பெரியார் எது செய்தாலும் அது உலகின் நன்மைக்காகவே பயன்படும் என்று நம்புவதே நியாயம்.

# ஒவ்வொன்றின் விலை அணா 4 தான்!



2




23




58

## லிப்கோ குறைந்த விலைச் சிறு பதிப்புக்கள் [64]

[சுவை மிக்க தமிழ்ப் பெரு நூல்களின் சுருக்கங்கள் (கையடக்க அளவில்)]

Brought to the notice of all public libraries and libraries attached to educational institutions—*vide* Proceedings of the Director of Public Instruction, Madras (Dis. No. 977/58 dated 13-2-1958)

1 வள்ளுவர் வாய்மொழி (குறள் மூலம்)
2 பொய்யாமொழிக்குப் பொழிப்புரை
3 வள்ளுவர் வகுத்த வழி (குறள் விளக்கம்)
4 வள்ளுவர் காட்டிய ஏர்
5 வள்ளுவர் கண்ட காதலர்
6 வள்ளுவர் காட்டிய இல்லறம்
7 நாலடியார் (மூலம்)
8 நாலடியார் (தெளிவுரை)
9 பிற்கால நீதி நூல்கள் (மூலம்)
10 கடையெழு வள்ளல்கள்
11 இலக்கியச் சோலையிலே
12 பாரதியும் பைந்தமிழும்
13 வருக! வாழ்க! (அழைப்பும் வாழ்த்தும்)
14 சிலப்பதிகாரம்
15 சிலப்பதிகாரப் பெண்டிர்
16 மணிமேகலை
17 சீவக சிந்தாமணி
18 நளவெண்பா (மூலம்)
19 நளவெண்பா (சுருக்கம்)
20 அரிச்சந்திர புராணம்
21 குசேலோபாக்கியானம்
22 பன்னிரு ஆழ்வார்கள்
23 சூடிக்கொடுத்த சுடர்க் கொடி
24 திருவிளையாடற் புராணம்
25 பெரிய புராணம்
26 திருஞானசம்பந்தர்
27 திருநாவுக்கரசர்
28 சுந்தரர்
29 மாணிக்கவாசகர்
30-36 கம்பரது இராமாயணம் (7 நூல்கள்)
37-41 வில்லிபுத்தூராரின் மகா பாரதம் (5 நூல்கள்)
42 சில தனிப்பாடற் காட்சிகள்
43-44 கந்த புராணம் (2 நூல்கள்)
45 குமரேச சதகம் (மூலம்)
46 வளையாபதி
47 குண்டலகேசி
48 நக்கீரர்
49 பட்டினத்து அடிகள்
50 தாயுமான அடிகள்
51 இராமலிங்க அடிகள்
52 தசாவதாரம்
53 கம்பன் கண்ட பிரகலாதன்
54 தெய்வத் திருமணங்கள்
55 பழந்தமிழ்க் காதல் காட்சிகள்
56 தோத்திரத் திருப்புகழ்
57-59 கவி சொன்ன கதை - பாகவதம் (3 நூல்கள்)
60 பாரதியார் பாடல்கள் – சில பொறுக்கு மணிகள்
61 அறப்பளீசுர சதகம் (மூலம்)
62 ஈசன் அருள் பெற்ற இளங்கன்றுகள்
63 புத்தி தரும் பக்தி தரும் சக்தி தரும் முக்தி தரும் புராணக் கதைகள்
64 மணிவாசகரும் மணிவாசகமும்

**நூல் நிலையங்களுக்கேற்ற 'லிப்கோ'வின் பிற புத்தக விவரங்களுக்கு எழுதுக.**



தி லிட்டில் ஃப்ளவர் கம்பெனி, சென்னை-17; எம். தாமோதரம் & கம்பெனி, அப்பர் பில்டிங்ஸ், சென்னை-1; எஸ். கிருஷ்ணஸ்வாமி & கம்பெனி, தெப்பக்குளம், திருச்சி-2; எம். நடராசுந்தரம் பிரதர்ஸ், புதுமண்டபம், மதுரை; ஏ. கே. சந்திரைய்ய செட்டியார், கோட்டை, சேலம்-1; வி. ஆர். நடராஜன் & ஸன், கோயமுத்தூர்; கவிஞர் பதிப்பகம், 241, ராஜ வீதி, கோயமுத்தூர்; எஸ். எம். ஜெகநாதம், நாகர்கோவில்; ஹிக்கின் பாதம்ஸ் (பிரைவேட்) லிமிடெட், மௌண்ட் ரோடு, சென்னை-2; ரெயில்வே ஸ்டால்கள்; மற்றும் அநேக புத்தகக் கடைகள்.

★ லிப்கோ நடமாடும் புத்தக 'வான்'களிலும் கிடைக்கும்.

# மூன்று நண்பர்கள்

## 17. சேகர் சிறைப்பட்டார்

விநாடிக்கு விநாடி வலி விஷம்போல் ஏறிக்கொண்டிருந்தது. மூச்சுவிடும் அசைவுகூட அதிர்ச்சியை உண்டாக்கி ரத்தம் கட்டிப் போன கரத்திலே இசிவை ஏற்படுத்தியது. தாங்க முடியாத வேதனையிலே புழுப் போலத் துடித்துக் கொண்டிருந்தார் சேகர். யாராவது வந்து கையை வெட்டி இந்த அவஸ்தையிலிருந்து விடுதலை செய்தால் கூடத் தேவலாம் போலிருந்தது அவருக்கு. விரோதியைக் கூட இப்போது வரவேற்றது அவர் மனம்.

கிட்டு நிலவறைக்குள் வருவதற்கு அரை மணி நேரம் முன்புதான்; இப்படி விநாடிகளை யுகங்களாகக் கணக்கிட்டுக் கொண்டிருந்த சேகரை உலுப்பி உணர்வு கொள்ளச் செய்யும் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. நிசப்தமான அந்த நிலவறைக்குள் யாரோ நடந்து வரும் காலடியோசை கேட்டது. நெஞ்சம் துடிக்கச் சேகர், பல்லைக் கடித்துக்கொண்டு வலியைவிழுங்கியபடி உடலை வளைத்துத் தலையை உயர்த்திச் சுற்றுமுற்றும் பார்த்தார். 'யாராவது வரமாட்டார்களா? வர வேண்டும்' என்று தவித்த அவர் உள்ளத்துக்கு அந்த ஓசை இதமாக, இன்பமாக இருந்தது. கூச்சலிட்டு அவர்களைக் கூவி அழைக்கலாமா என்று தவித்தது உள்ளம். ஆனால் அந்த நிலையிலும் நிதானத்தை இழக்காமல் அவசரப்படாமல் அமைதியாகவே காத்துக் கிடந்தார். 'கடவுளே! அவர்கள் யாராயிருந்தாலும் சரி, சதிகாரர்களானாலும் சந்தோஷம் தான். இங்கு வர வேண்டும். என்னை இந்த அவஸ்தையிலிருந்து விடுவிக்க வேண்டும்' என்று அவர் மனம் ஜபம் செய்ய ஆரம்பித்தது.

காலடி ஓசை வர வரத் துல்லியமாகக் கேட்டது. அருகே, அடுத்த கூடத்தில் தான் எங்கோ யாரோ நடமாடுகிறார்கள் என்று எண்ணினார் சேகர். பாதாளச் சுவரில் கை சிக்கிக் கொண்டுள்ள அந்த நிலையில் சேகரால் எதையும் நன்றாகப் பார்க்க முடியவில்லை. கழுத்தை வளைத்து ஒரு கோணத்தில் தான் பார்க்க முடிந்தது. அடுத்த கூடத்திலே கலங்கரைவிளக்கத்தின் ஒளிக்கரங்களைப் போல வெளிச்சம் இங்கும் அங்கும் ஆடி அசைந்தது. அங்கிருப்பவர்கள் பாட்டரி விளக்கினால் எதையோ ஆராய்கிறார்கள் போலிருக்கிறது. ஏதோ பேச்சுக் குரலும் கேட்டது. வந்திருப்பது இருவர் என்பதை யூகித்துக் கொண்ட சேகர் அந்தச் சம்பாஷணையைக் கிரகிக்க முயன்றார். ஆனால் உருப்படியாக எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை.

சேகருக்கு ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருந்தது. வெகு நேரம் வரையில் சலனமற்று நிசப்தமாக இருந்தது நிலவறை. 'ஒரு வேளை அவர்கள் திரும்பிப் போய் விட்டார்களோ?' இதை எண்ணிய போது சேகரின் தலை சுழல ஆரம்பித்தது. கண்களையும் காதுகளையும் தீட்டிக் கொண்டு நெஞ்சத் துடிப்போடு காத்துக் கிடந்த சேகரின் முகத்தில் பளீரென்று ஒரு ஒளி வீசிக் கண்களைக் குருடாக்கியது. ஒரு விநாடி திக்குமுக்காடிப் போன சேகர் சமாளித்துக் கொண்டு பிரயாசையுடன் ஒளி வழியே உற்று நோக்கினார். தனக்குச் சற்றுத் தூரத்தில் இரண்டுபேர்கள் நின்று கொண்டிருப்பதுதான் தெரிந்தது. ஆனால் அவர்களை அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி ஒரு மனிதனின் கையிலிருந்த பாட்டரி விளக்கு உமிழ்ந்து கொண்டிருந்த ஒளி சேகரின் கண்களைக் கூசச் செய்தது. சேகரின் முகத்தில் வீசிக் கொண்டிருந்த பாட்டரி விளக்கின் ஒளியை அகற்றாமலே, அணைக்காமலே அவர்கள் பேசினார்கள். பார்வையைக் குருடாக்கித் துன்புறுத்தும் அந்த ஒளிக் கற்றையிலிருந்து சேகரினாலும் ஒதுங்க முடியவில்லை. எப்படி முடியும்?

"யார் இந்த ஆள்? உனக்குத் தெரிகிறதா?"

"தெரியவில்லை. ஆனால் அந்த மனிதனைத் தேடி நம்மைப் பின்தொடர்ந்து வந்தவனாகத்தான் இருக்க வேண்டும்."

"ஓ! நம்மைக் கண்காணித்துக் கண்டு பிடிக்கும் நோக்கத்துடன் வந்த சூரப் புலியோ?"

இப்படி அவர்கள் சம்பாஷணை தொடர்ந்தது. சேகர் சிரமப்பட்டு அவர்களைப் புரிந்து கொள்ள முயன்றார். ஒருவன் உயரமானவன், மற்றொருவன் குள்ளனான குண்டன். இதற்கு மேல் வேறு எதுவும் அறிய முடியவில்லை. குள்ளனின் காதில் நெட்டையன் ஏதோ சொன்னான். உடனே குள்ளன் சேகரைப் பார்த்து. "டேய்! நீ யார்? உண்மையைச் சொல்லி விடு" என்றான் அதிகாரத்துடன்.

வாண்டுமாமா



"முதலில் நீங்கள் யார் என்பதைச் சொல்லுங்கள்!" என்றார் சேகர். அடுத்த நிமிஷம் சேகரின் விலாவில் எட்டி உதைத்தான் நெட்டையன். "ஐயோ!" என்று துடித்துப் போனார் சேகர். ஆனால் அதற்கு மேல் பேசவில்லை. பெருமூச்சும் முக்கலுமாக அந்த வலியைச் சமாளித்துக் கொண்டு உதட்டைக் கடித்து உள்ளத்திலே உறுதியை ஏற்படுத்திக் கொண்டார்.

"அந்த ஆளைப் போலவே இவனும் பெரிய நெஞ்சழுத்தக்காரனாக இருக்கிறானே" என்றான் குண்டன்.

"நம்ப முறையைப் பிரயோகித்தால் நெஞ்சழுத்தமெல்லாம் பஞ்சாகப் பறந்து விடும். பயலைக் கேட்கிறபடி கேட்டால் தான் பேசுவான். ம்...! அந்த விசையைத் திருப்பிக் கல்லை நகர்த்து. பொறியில் சிக்கிக் கொண்டுள்ள இந்த எலியை விடுதலை செய்வோம்!"

விளக்கு அணைந்தது. இருள் கவிந்தது. விசை நகரும் 'கிரீச்' ஒலி கேட்டது. சேகரின் உள்ளம் வேகமாக அடித்துக் கொண்டதைப் போலவே, சிந்தனையும் வேகமாக வேலை செய்தது. 'கை விடுபட்டதும் இந்தக் கொலைகாரர்களிடமிருந்து மெதுவாகத் தப்பிவிட வேண்டும்' என்று தீர்மானித்தார்.

மெள்ள மெள்ளச் சுவர் நகர்ந்தது. 'அப்பாடா! விடுதலை' ரத்த ஓட்டம் நின்று போயிருந்ததால், உணர்விழந்து மரத்துப் போயிருந்த கரம் துவண்டு தொங்கலாடியது. கையே துண்டிக்கப்பட்டு விட்டது போன்ற ஒரு பிரமை. விறுவிறுவென்று உடல் முழுதும் ஒரு புதுவித வலி பரவியது. ஆனால் அதைப் பொருட்படுத்தாமல் கைவிடுபட்டதும் சேகர் குபீரென்று துள்ளி எழுந்து தன் முன்னால் நின்று கொண்டிருந்த இருவரையும் முட்டித் தள்ளிக் கொண்டு முன்னால் பாய்ந்து ஓடினார். எப்படியாவது அவர்கள் கையில் சிக்கி விடக்கூடாது என்ற நோக்கம்தான் அப்போது அவருக்கு.

இந்தத் திடீர்த் தாக்குதலைச் சற்றும் எதிர்பாராத அவர்கள் ஒரு வினாடி திகைத்துப்போனாலும் உடனே ஓடும் சேகரைத் துரத்தலானார்கள்.

நிலவறையிலிருந்து வெளியேறும் துவாரத்தில் சேகர் ஒரு கையால் தொத்திக் கொண்டு மேலே ஏற முடியாமல் வலியோடு போராடிக் கொண்டிருந்தார். சுவரில் சிக்கிய கைக்குப் பற்றும் திறனே இல்லை. பாவம் சேகர்! ஒரு கையினால் பற்றிக் கொண்டு எவ்வி ஏறவும் முடியவில்லை. விண் விண் என்று தெறிக்கும் மறு கையின் வலியையும் சமாளிக்க முடியவில்லை. நலித்துக்கொண்டிருந்தார். அப்போது அவர் தலையில் 'மடார்' என ஏதோ ஒன்று பலமாகத் தாக்கியது. அப்படியே அடிபட்ட பறவையைப் போலத் துவண்டு பொத்தென்று தரையில் விழுந்து மூர்ச்சையானார் சேகர்.

ஒரு செங்கலினால் சேகரின் தலையில் ஓங்கி அடித்து வீழ்த்திய நெட்டையன் குண்டனின் உதவியுடன் மூர்ச்சையாகிக் கிடந்த சேகரைத் தூக்கிக் கொண்டு நிலவறையிலிருந்து இருவரும் வெளியேறினார்கள். சதிகாரர்களால் சேகர் எங்கோ கொண்டு போகப்பட்டார்.

*　　　　*

கிட்டு சரித்திர ஆசிரியர் சந்தானத்தின் வீட்டுக்குப் போன போது அவர் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். கிட்டுவைக் கண்டதும் முகமலர்ச்சியுடன் அவனை வரவேற்றார். கிட்டு சிறிது நேரம் ஏதோ விஷயங்களைப் பற்றிச் சாதாரணமாகப் பேசி விட்டு, தான் வந்த காரியத்தைப் பற்றி விவரிக்கலானான். முதல் நாள் இரவு நடந்தது அவ்வளவையும் தனக்குத் தெரிந்த அளவோடு மணி சொன்ன தகவல்களையும் வைத்துக் கொண்டு மிகவும் சுவாரஸ்யமாகச் சொன்னான். மர்மங்கள் நிறைந்த துப்பறியும் கதையைக் கேட்பது போல எல்லாவற்றையும் வியப்போடு கேட்டுக் கொண்டிருந்த ஆசிரியர் முடிவாக, 'கிட்டு' இம்மாதிரி விஷயங்களை யெல்லாம் உடனே போலீசுக்குத் தெரிவிப்பதுதான் நமது

கடமை. அவர்களுக்கு உதவியாக நாம் ஏதாவது செய்யலாமே தவிர, அவர்களுக்குத் தெரியாமல் நாமாக எதையும் செய்வது கூடாது. ஆகவே இவ்விஷயத்தை உடனே போலீசுக்குத் தெரிவிக்கிறேன்" என்றார். ஆனால் கிட்டு அதற்குச் சம்மதிக்காமல் 'போலீஸின் உதவியை நாடும் சந்தர்ப்பம் வரத்தான் போகிறது. சில காரணங்களை முன்னிட்டு உடனடியாக போலீசுக்கு இதைத் தெரிவிக்க வேண்டாம்' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். சேகர், மணியிடம் உறுதி வாங்கிக் கொண்டபடி மணியும் கிட்டுவிடம் வாங்கி இருந்தான். கிட்டுவின் வேண்டுகோளை சந்தானமும் ஏற்க வேண்டியதாயிற்று. 'கோரா' விஷயத்திலுள்ள மர்மத்தை விடுவித்தாக வேண்டுமே! ஆகவே அவர் தனது ஆப்த நண்பரான ரமேஷின் வீட்டுக்குக் கிட்டுவுடன் கிளம்பினார். ரமேஷ் ஒரு பிரபல துப்பறியும் நிபுணர். பல கொள்ளை, கொலை வழக்குகளில் அபாரமான திறமையோடு துப்பறிந்து குற்றவாளிகளை அம்பலப்படுத்திப் பெயரும் புகழும் பெற்றவர்.

* * *

சேகர் கண் விழித்துப் பார்த்தார். ஒரு விநாடி உலகமே சுழல்வது போல எல்லாம் தட்டாமாலையாடின. ஒரு விநாடி கண்களை மூடிக் கொண்டிருந்து விட்டு மறுபடி திறந்து பார்த்தார். பழக்கமில்லாத ஏதோ ஒரு புதிய இடத்தில் ஒரு தனியறையில் தான் இருப்பதை உணர்ந்து பரபரப்புடன் எழுந்திருக்க முயன்ற போதுதான் தன் நிலையை அவரால் உணர முடிந்தது. உடல் முழுதும் ஒரே வலி. தலையைக் 'கிண்' என்று தெறித்தது. தலையைத் தடவிக் கொள்ளக் கையைத் தூக்கிய போதுதான் தன் கையிலே பெரிய 'பாண்டேஜ்' சுற்றப்பட்டிருப்பதைக் கண்டார் சேகர்.

இப்போது எல்லாம் அவருக்கு ஒவ்வொன்றாக நினைவுக்கு வரலாயிற்று. தலையில் அடித்ததும் தான் மூர்ச்சையாகி மயக்கமுற்று விழுந்திருக்க வேண்டும். சதிகாரர்கள் தன்னைத் தூக்கி வந்து தன் காயங்களுக்குக் கட்டுப் போட்டு இங்கு கொண்டு வந்து கிடத்தியிருக்கிறார்கள். நிலைமையை ஓரளவு புரிந்து கொண்ட சேகர் தான் இருக்கும் இடம் எது என்பதை ஆராயலானார். மிக்க சிரமத்துடன் எழுந்திருந்து படுக்கையில் உட்கார்ந்து கொண்டார். சுற்றுமுற்றும்பார்த்தார். அது ஒரு சிறிய அறை. அவர் உட்கார்ந்துள்ள கட்டிலைத் தவிர அறையின் ஒரு மூலையில் உள்ள மேஜைமீது குடிக்க ஒரு செம்பில் தண்ணீரும் ஒரு தம்ளரும் இருந்தன.

## பண முடிப்பு

இந்த விளையாட்டை எத்தனை பேர் வேண்டுமானாலும் விளையாடலாம். ரொம்பத் தமாஷாக இருக்கும். இதற்கு வேண்டியதெல்லாம் பணமுடிப்புகளைப் போல வரைந்து கத்தரிக்கப்பட்ட ஏராளமான காகிதத் துண்டுகள், பத்திரிகைகளைப் பின் செய்து வரும் இரும்புக் கம்பி-எத்தனை காகிதத் துண்டுகள் இருக்கிறதோ அத்தனை. விளையாடுபவர்கள் ஒவ்வொருவரிடமும் சிறிய காந்த மேற்றப்பட்ட இரும்புத் துண்டு இருக்க வேண்டும்.

இந்த இரும்புத் துண்டை ஒரு நூலில் கட்டி அதன் மறுமுனையை ஒரு குச்சியுடன் இணைத்து விடவேண்டும். அதாவது தூண்டிலைப்போல. இனி பணமுடிப்புக் காகிதத் துண்டுகள் ஒவ்வொன்றிலும் ஒரு இரும்பு ஊசியைக் குத்தி மடக்கி விட்டு அதன் மறுபுறத்தில் 30, 50, 100, 1000, 2, 8, இப்படிப் பலதரப்பட்ட எண்களை எழுதிவிட வேண்டும். இப்படி எழுதிய காகிதத் துண்டுகளை இலக்கங்கள் தெரியாதபடி மேஜையின்மீது கவிழ்த்துப் போட்டுப் பரப்ப வேண்டும்.

இனி ஒவ்வொருவரும் தங்களிடமுள்ள காந்தத் தூண்டிலை இந்தக் காகிதப் பணமுடிச்சுகளின் அருகே கொண்டு போனால் ஒவ்வொரு பணமுடிச்சும் காந்தத் தூண்டிலில் ஒட்டிக் கொள்ளும். இப்படியாக ஒவ்வொருவரும் தங்கள் தூண்டிலின் மூலம் சேகரித்த பண முடிச்சுகளின் மதிப்பை எண்ணிப் பார்க்க வேண்டும். யாருக்கு அதிக ஆஸ்தி கிடைத்திருக்கிறதோ அவனே ஆட்டத்தில் ஜெயித்தவனாவான்.

— மூர்த்தி.

அதைத் தவிர அந்த அறையில்வேறு எவ்விதப் பொருளும் இல்லை. ஒரே ஒரு ஜன்னல் இருந்தது. அந்த அறைக்கு எழுந்து சென்று அதன் வழியே எட்டிப் பார்த்தார். ஒரு பழங்காலக் கட்டடத்தின் மூன்றாவது மாடியிலுள்ள ஒரு அறையில் சிறை வைக்கப்பட்டிருக்கிறோம் என்பதை உணர்ந்து கொள்ள அவருக்கு அதிக நேரமாகவில்லை.

அந்தக் கட்டடத்தைச் சுற்றி நெடுந்தூரத்துக்கு வேறு கட்டடங்களை காணப்படவில்லை. வெகு தூரத்தில் மரவட்டையைப் போல் பிரதான ரஸ்தா வளைந்து திரும்புவது தெரிந்தது. அதையும் அங்கங்கே செழித்து வளர்ந்திருந்த மரங்கள் மறைத்துக் கொண்டிருந்தன. தான் என்ன கூச்சல் போட்டாலும் யாருடைய கவனத்தையும் கவர முடியாது என்பதையும் உணர்ந்து கொண்ட சேகர் மனம் ஒடிந்துபோய்ப் படுக்கையில் வந்து உட்கார்ந்தார். அவருடைய கைக் கட்டுக்குள் வலி நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டிருந்தது. (தொடரும்)

# நீலக் கண்ணன்

அழ. வள்ளியப்பா

குட்டிக் கதைகளை அற்புத மாகவே
கூறிநற் புத்தி புகட்டிவரும்
கெட்டிக்காரத் தாத்தா ராஜாஜி பற்றி நான்
கேட்டகதை ஒன்றைக் கூறிடுவேன்.

வக்கீல் படிப்புப் படித்திடவே — சென்னை
மாநகர் தன்னை அடைந்தனராம்.
அக்கறையோடு படித்தனராம் — நல்ல
அறிவுடை மாணவ ராயினராம்.

கடற்கரைப் பக்கம் இருந்ததுவாம் — ஒரு
'ஹாஸ்டல்'லில் ராஜாஜி தங்கினராம்.
படம் ஒன்றை அறையினில் வைத்திருந்தார் கிருஷ்ண
பகவான் உருவமே அப்படமாம்.

வடக்கில் இருந்து ஒரு பெரியார் — அங்கே
வந்தவர் அந்த அறையிலுள்ள
படத்தை ஒரு முறை பார்த்தனரே — உடன்
பார்த்ததுமே கேட்டனர் ராஜாஜியை.

" கண்ணனை நீல நிறத்தினிலே — இங்கே
காட்டி யிருப்பதன் காரணமேன் ?"
என்றுமே அந்தப் பெரியவர் கேட்டிட
யாவரும் யோசனை செய்தனராம்.

உடனடி யாகவே ராஜாஜியும் — எதிர்
உள்ள கடலினைக் காட்டினராம்.
" கடலின் நிறமுமே நீலநிறம் — மேலே
காணும் ஆகாயமும் நீலநிறம்.

எல்லையில் லாது பரந்து விரிந்திடும்
இந்தக் கடலையும், வானையும் போல்
எல்லா இடத்தும் இறைவன் இருக்கிறார்
என்ப துணர்த்தவே நீலநிறம் "

இப்படி ராஜாஜி சொன்னதுமே — அவர்
எல்லையில் லாது மகிழ்ந்தனராம்.
அப்பொழு தேஅவர் திறமையினைக் — கண்டு
அனைவரும் மெச்சிப் புகழ்ந்தனராம்.

# ராஜாஜியின் உவமைகள்

ரோஜாப் புஷ்பம் உயர்வானதா, மல்லிகைப் புஷ்பம் உயர்வானதா என்பது போன்ற வீண் விவாதங்களைச் செய்யக் கூடாது. நமக்கு ரோஜா, மல்லிகை எல்லாம் வேண்டியதுதான். சிலர் குழந்தைகளைப் பார்த்து 'உனக்கு அப்பா வேண்டுமா? அம்மா வேண்டுமா?' என்று கேட்பதுண்டு. அப்படிக் கேட்கிறவர்களைக் கன்னத்தில் அறையலாம் என்று எனக்குத் தோன்றும். அது போலவே, கவிகளில் எந்தக் கவி உயர்ந்தவர் என்று விவாதிப்பதும் தவறு. 'கம்பர் உயர்ந்தவரா, பாரதி உயர்ந்தவரா' என்றெல்லாம் விவாதிக்கக் கூடாது. நமக்குக் கம்பரும் வேண்டும்; பாரதியும் வேண்டும். உண்மைக் கவி எது என்று தெரிந்து கொண்டு எல்லாவற்றையும் அனுபவிப்பதற்கு முயற்சிக்க வேண்டும்.

★

ரொம்ப கெட்டிக்காரர் ஒருவருக்கு பதவி கிடைக்கு முன்பு பெருமை கொடுக்காமல், பதவி கிடைத்த பின் அவருக்கு மதிப்புக் கொடுப்பது எப்படி என்றால், ஒருவன் தன் தாயாரை, தன்னைப் பெற்றவள் என்பதற்காகக் கௌரவம் கொடுக்காமல், அவள் 'லேடீஸ் கிளப் பிரஸிடெண்டா'னவுடன் அவளுக்கு மதிப்புச் செலுத்துவது போலாகும்.

★

வாழை மரத்தில் பெரும் இலைகள், வளரும் குருத்துக்கு மேலும் நன்றாக வளர நிழல் கொடுக்கிறது. மாடுகள் குருத்துகளைக் கடித்துத் தின்று விடாமல் பெரிய இலைகள் தங்களையே தியாகம் செய்து காப்பாற்றுகின்றன. ஆகவே இளம் குருத்துக்கள் வளர்ச்சிக்குப் பெரிய இலைகள் தடையாயிருக்குமோ என்று நாம் எண்ணுவது தவறு. அதைப் போல, இளைஞர்கள் வளர்ச்சிக்குப் பெரியவர்கள் தடையாக இருப்பார்களோ என்று எண்ணுவதும் தவறு.

★

சங்கீதம்வேறு, மொழி வேறு என்பது நிச்சயம். பாத்திரம் வேறு, ஜலம் வேறு என்பது நிச்சயம். ஆனால் நான் ஒரு டம்ளர் பால் சாப்பிடுகிறேன் என்றால் பாலையும் டம்ளரையும் சேர்த்துச் சாப்பிடுவதில்லை. பால் மட்டும் தான் சாப்பிடுகிறேன். டம்ளர் இல்லாமலும் சாப்பிடலாம். அதாவது கன்றுக்குட்டி முதலியவைகள் டம்ளர் இல்லாமலும் குடிக்கும். டம்ளரில் போட்டுக் காப்பியோ, பாலோ சாப்பிடுவதும் உண்டு. எப்படிச் சாப்பிட்டாலும் உண்மையில் குடிப்பது பால்தான். சங்கீதம் தான் கேட்கிறேன். மனிதன் மொழிகளுடன் சேர்த்துக் கேட்கும்போது ஒரு தனி சந்தோஷம் உண்டாகிறது.

★

ஏரியில் நீர் நிறைவது விவசாயிக்குப் பயன்படத்தான். 'இத்தனை தண்ணீரும் என் நன்மைக்காகவே' என்று ஏரி கற்பனை செய்து கொண்டிருக்கலாம். ஆனால், ஏரித் தண்ணீர் ஏறஏற, மடையைத் திறந்து, தண்ணீரை வெளியே விட வேண்டியது அவசியமாகிறது. இது இயற்கையின் சட்டம். ஏராளமாய்ப் பணம் குவித்த மனிதனும், ஏரியைப் போலவே, தன் பணத்தைத் தாராளமாகப் பிறர் உபயோகத்துக்கு வழங்கி விடுவான். ஆகையால், பணக்காரர்களைப் பார்த்து யாரும் ஆத்திரம் கொள்ளத் தேவையில்லை. நாம் மட்டும் கொஞ்சம் பொறுமையாக இருந்தால், பணக்காரர்கள் தாமாகவே தங்கள் செல்வத்தைப் பொது நன்மையான காரியங்களுக்கு உதவ முன் வருவார்கள்.

★

"வடமொழியை நாம் எப்படி விலக்க முடியும்? வடமொழிச் சொற்கள் கலக்காத பழந்தமிழ் நூல் ஒன்று கூடக் கிடையாது. எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் குறிப்பிடுங்கள், சில சமஸ்கிருத வார்த்தைகளாவது எடுத்துக் காட்டுகிறேன். அப்படி எடுத்துக் காட்டும் வார்த்தைகள் எல்லாம் சுத்தத் தமிழ்ப் பதங்கள்தான் என்றும், அவை தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்றவை என்றும் கூறுவார்கள். சமஸ்கிருதமே தமிழிலிருந்து வந்தது என்று கூடச் சிலர் துணிந்து கூறுவார்கள். இது எப்படி இருக்கிறது என்றால் போளியைப் பிசைந்து உருட்டித்தான் வெல்லம் செய்திருக்கிறார்கள் என்று சொல்வது போலிருக்கிறது."

★

"ஆங்கிலத்திலுள்ள 'F' போன்ற எழுத்துக்குப் பிரதி எழுத்து தமிழில் இல்லையே என்று கேட்கலாம். தமிழிலுள்ள 'ழ'வும் மற்ற பாஷைகளில் இல்லை. ஒரு மொழியின் எழுத்துக்கள்

அந்த மொழியின் சொற்களை உச்சரிக்கவே ஏற்பட்டவை. வேறு பாஷைச் சொற்களைச் சரியாக எழுதத் தமிழ் பாஷையில் எழுத்துக்கள் இல்லை என்பது ஒரு குறையாகாது. இது எப்படி என்றால், பழைய சட்டைகள் விற்கும் கடைக்குப் போய் ஒருவன் ஒரு பழைய சட்டையை விலைக்கு வாங்குகிறான். அதைப் போட்டுக் கொண்டு பார்க்கிறான். 'கழுத்துப் பிடிக்கிறது; கை நீளமாக இருக்கிறது' என்று அவன் அந்தச் சட்டை தைத்த தையல்காரனைத் திட்டுவது நியாயமாகுமா? அந்தத் தையல்காரன் இவனுக்கு அளவெடுத்தா சட்டையைத் தைத்தான்? யாருக்கோ தைத்த சட்டையை இவன் போட்டுக் கொண்டு தையல்காரன் மேல் புகார் சொல்வது போல்தான் தமிழில் வேறு பாஷைச் சொற்களை எழுத முடியவில்லையே என்று தமிழ் நெடுங் கணக்கைக் குறை கூறுவதும்!''

★

''எண்ணெய்க்கும் காஸ்டிக் சோடா உப்புக்கும் இடையே எவ்வளவோ வேற்றுமை இருக்கிறது. எண்ணெய் வழவழப்பாகவும் அசுத்தமாகவும் இருக்கிறது. காஸ்டிக் சோடா உப்பு உடம்பில் பட்டால் எரியும். உடம்பு புண்ணாகி விடும். ஆனால் இந்த இரண்டு பொருள்களையும் நாம் ஒன்றாகச் சேர்க்கும் போது நமக்கு நல்ல சோப்பு கிடைக்கிறது. **சுத்ய காஸ்டிக் சோடா உப்பும் அமேரிக்க எண்ணெயும்** என்றாவது ஒரு நாள் ஒன்றாகக் கலந்து உலகத்துக்கு ஒரு நல்ல சோப்பை வழங்குமென்று நாம் நம்புவோமாக!''

★

''நமது சமூக ஆசாரங்களிலும் பழக்க வழக்கங்களிலும், எத்தனையோ தீமையான அம்சங்கள் இருக்கின்றன. அவைகளை மாற்ற வேண்டியதுதான். ஆனால் அதற்காக அந்த ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திய நமது முன்னோர்களை நாம் குறை கூற வேண்டியதில்லை. அந்தக் காலத்தில் அவைகளுக்கு ஏதோ உபயோகம் இருந்திருக்கலாம். தற்போது அவை நமக்கு விளங்க வில்லையென்றால் அதற்காக முன்னோர்களை மூடர்கள் என்று சொல்லக் கூடாது.

மரங்களுக்கு மேலே பட்டை இருக்கிறது. மரங்கள் ஜீவித்திருப்பதற்கும், வளர்வதற்கும் அந்தப் பட்டை மிகவும் அவசியம். ஆனால் மரம் முதிர்ச்சி அடைந்து வெட்டிய பின்னர் கட்டட வேலைகளுக்கு உபயோகப் படுத்தும் போது தச்சன் முதலில் பட்டையைத் தான் செதுக்கி எறிகிறான். அப்போது பட்டைக்கு எவ்வித உபயோகமும் இல்லை. ஆகையால் மரத்திற்குப் பட்டையே வேண்டியதில்லை என்று சொல்லி விடலாமா? பட்டையில்லாமலே மரத்தை வளர்த்திருக்க வேண்டும் என்று அந்தத் தச்சன் மரம் வளர்த்தவனைத் திட்டினால் அவனை மூடன் என்று சொல்ல மாட்டோமா?''

★

தொழிலாளர்கள் தங்கள் குறைகளை அஹிம்ஸா தர்மப்படி, சட்ட ரீதியான வழிகளில் நிவர்த்தி செய்து கொள்ளவே தொழிற்சங்கங்களை அமைக்க வேண்டும். வேலை நிறுத்தம் செய்வதற்கு மட்டும்தான் சங்கம் என்று நினைப்பது தவறு. இதனால் வேலை நிறுத்தமே செய்யவேண்டாம் என்பதல்ல. ரொம்பவும் அவசியம் நேர்ந்தபோது நியாயமாகச் செய்யலாம். ஒரு மனைவி தனது கணவனுடன் எப்பொழுதாவது சண்டை போட்டுக்கொண்டு, சாப்பிட முடியாதென ஒருநாளைக்குச் சொல்லலாம். ஆனால் சண்டை போட்டுக்கொண்டிருக்கவே கலியாணம் செய்துகொண்டாள் என்று சொல்லுவது தவறு. கணவனும் மனைவியும் சேர்ந்தே குடும்பத்தை நடத்தவேண்டும்.

★

ஒருவருக்கு உள்ளத்தில் ஒரு ஸ்தானம் உண்மையோடு கொடுத்து விட்டால் அந்த ஸ்தானத்திலிருந்து அவரை அகற்றிவிட்டு அந்த இடத்தில் வேறொருவரை வைப்பது என்பது இயலாத காரியம். மாதுளம் பழத்தை உடைத்தால் அதிலிருந்து சில முத்துக்கள் கீழே உதிரும். முத்துக்கள் உதிர்ந்தவுடன் அந்த முத்துக்கள் இருந்த இடம் குழி குழியாக இருக்கும். உதிர்ந்த முத்துக்களில் ஒன்றை எடுத்து ஏதாவது ஒரு குழியில் வைத்தால் பொருந்தாது. அந்தந்தக் குழியில் அந்தந்த முத்துக்களையே வைத்தால்தான் பொருந்தும்.

★

மதுவிலக்குச் சட்டம் அமுலுக்கு வருவது, ஒரு வீட்டிற்கு மருமகள் வருவதுபோல. அவளைக் காப்பாற்றுவது மாப்பிள்ளை மாமியார் கடமையாகும். புதிதாக வாங்கிவந்த பசுவிற்குத் தீனி சவரக்ஷணை எல்லாம் செய்தால்தான் பால் கறக்கும். அதைப்போலவே மதுவிலக்கைக் காப்பாற்றி அதன் பலனை அனுபவிக்கச் சட்டத்தைச் சரிவரப் பாதுகாக்க வேண்டியது கிராமவாசிகளின் கடமையாகும்.

# ஆண்டுகள் பலவாகினும் அழகு குன்றாத ஆடைகளை அணியுங்கள்!

**ஹறுவா**



நெ ஏஸி. எஸ் 5208 ஏஸி 3000 - குறிப்பிட்டுகேளுங்கள்.

**லஸ்டலின்**



'ப்ளெயின்' ரகம் எல் 4914 என்றும், 'செக்' ரகம் எல் 976 என்றும்கேளுங்கள். 'டாபி' ரகமும் கிடைக்கிறது.

**ட்ரில்**

இந்த நம்பர்களைச் சொல்லுங்கள்: பி 17 (ராணுவத்தினர் அணிவது இது) பி 37, பி 11, பி 94, பி 39, பி 83.



எடுப்பான தோற்றம், உகப்பான உடைக்கு பின்னி ஜவுளியே ஏற்றது. இந்த பிரசித்த டிரேட் மார்க்குகள் உள்ள துணிகளையே வாங்குங்கள்.



பக்கிங்ஹாம் & கர்னடிக் கம்பெனி லிமிடெட்
மானேஜிங் ஏஜெண்டுகள்.
பின்னி & கோ (மதராஸ்) லிமிடெட், சென்னை

BY 301a

# பொங்கிவரும்

### பத்தாம் அத்தியாயம்

## விம்மல் ஒலியும் சிரிப்பொலியும்

கி. ராஜேந்திரன்

நடராஜன் எழுந்து விட்டான். விமலாவின் விம்மல்களைக் கேட்டுக் கேட்டு அவனுக்குக் காது புளித்துப் போய் விட்டது. 'தினமும்தான் வீட்டில் அழுகுரல் கேட்டுக்கொண்டேயிருந்ததே. சந்தோஷமாகச் சிறிது நேரம் பொழுது போக்க வந்தால் இங்கும் அதே கண்ணீர் தானா? இயற்கை எழிலை அனுபவிக்க வந்த இடத்தில், உயிர்த் துடிப்பு நிறைந்திருக்கும் இந்த அற்புதக் காட்சிக்கிடையில் சாவைப் பற்றிப் பேச்சு! உயிர் போகவில்லையே என்று குறை! சேச்சே! சுத்த மோசம். இவளை அழைத்தே வந்திருக்கக் கூடாது. இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்தால் தனியாகவே வந்திருக்கலாம். இல்லாவிட்டால் இந்து மல்லிகாவுடன் வந்திருக்க வேண்டும்.

'அவள் வந்திருந்தால் இன்றையப் பொழுது எவ்வளவு நன்றாகக் கழிந்திருக்கும்? சொர்க்கத்தைப் பற்றிப் பேசியிருக்க மாட்டாள். சொர்க்கத்திலிருந்து சாவுக்குத் தாவியிருக்கவே மாட்டாள். இந்தப் பறவைகளைப் பார்த்து, குழந்தை போலக் கைகொட்டிச் சிரித்து மகிழ்ந்திருப்பாள். இந்த மனமோகனச் சூழ்நிலையில் சொக்கிப் போயிருப்பாள். இனிய நிலவில் இன்பக் கதைகள் பேசியிருப்பாள். ஆனால் அவள்தான் தன் உள்ளத்தில் காதலுக்கே இடமில்லை என்று சொல்லிவிட்டுப் பம்பாய்க்குப் போய் விட்டாளே?' தன் துரதிர்ஷ்டத்தை நொந்துகொண்டு காரை நோக்கி நடந்தான் நடராஜன். விமலா புடவையை உதறித் தட்டிக் கொண்டு அவனைப் பின்தொடர்ந்தாள்.

அவன் வெறுப்பிலே பேசவில்லை. அவள் பயத்திலேயே பேசவில்லை. அத்தான் மனத்தைப் புண்படுத்திவிட்டோம் என்று புரிந்து கொண்ட விமலா, பேசினால் வெறுப்பு கோபமாக மாறி விடுமோ என்று பயந்தாள்.

வீட்டருகே வண்டியை நிறுத்தி விட்டு அவள் இறங்கி உள்ளே செல்லக் காத்திருந்தான் நடராஜன். அழுத அவளுக்கு ஆறுதல் சொல்லாமல் விறைப்பாக நடந்து வந்தது தவறு என்று அவனுக்குத் தோன்ற ஆரம்பித்தது. 'சிரித்துப் பேசிக் கொண்டுதானே இருந்தாள். திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு மனம் கலங்கிப்போயிருக்கிறாள், பாவம்!' என்று பச்சாத்தாபப் பட்டான். ஆனால் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை அவன்.

விமலா அவன் முகத்தை ஏக்கத்தோடு ஒரு நிமிஷம் பார்த்துக் கொண்டேயிருந்தாள். 'போய்வா, விமலா!' என்று சொன்னால் அவளுக்குப் போதும். ஆனால் அவன் உதடுகள் அசையக் கூட இல்லை. மறுபடியும் அழுது விடாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையிலேயே கீழே இறங்கி விட்டாள் விமலா. வாயைத் திறந்தால் விம்மலும் அழுகையும்தான் வெளிப்படுமே தவிர, வார்த்தைகளைப் பேச முடியும் என்று தோன்றவில்லை.

மாடியிலிருந்து ஆன வாசல் கேட்டைத் திறந்துகொண்டு உள்ளே போய் மறுபடியும் சாத்தித் தாளிட்டாள். வாசலில் எரிந்த ஒரே ஒரு விளக்கின் மங்கிய ஒளியில் அத்தானை அவளால் சரியாகப் பார்க்க முடியவில்லை. அவன் முகத்தில் நிழல் படர்ந்து முக பாவத்தை மறைத்தது. மௌனமாகப் படிகளில் ஏறினாள். வாசல் கதவைத் தட்டப் போன சமயம் அவளுக்கு ஒரு உண்மை பளிச்சிட்டது.

'அத்தான் ஏன் இன்னும் இங்கிருந்து கிளம்பவில்லை? வண்டியிலிருந்து நான் இறங்கி விட்டதும் அவர் உடனே புறப்பட்டுப் போக வேண்டியதுதானே? அதுவும் என்னிடம் இருந்த கோபத்தில் அவர் இத்தனை நேரத்துக்குள் வீட்டை அடைந்திருக்க வேண்டுமே?

'அத்தானின் மனம் இளகி விட்டது! நான் அழுது அவர் உற்சாகத்தைக் குலைத்ததால் ஏற்பட்ட கோபம் தணிந்து விட்டது. என்னிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் போய் விட அவருக்கு மனம் வரவில்லை! அதனால்தான் தயங்கித் தயங்கி இன்னும் அங்கேயே நின்று கொண்டிருக்கிறார்!'

"அத்தான்!" என்று கூவி அழைத்துக் கொண்டே 'திபுதிபு'வென்று படிகளில் வேகமாக இறங்கி வந்தாள் விமலா. அதே கணத்தில் நடராஜன் கார்

# பெருநிலவு

கதவைத் திறந்துகொண்டு அவனை நோக்கி விரைந்தான். வாசல் கேட்டருகே இருவரும் சந்தித்தார்கள்.

அவர்களைப் பிரித்து வைத்த மர 'கேட்'டின் சட்டங்களுக் கிடையே நடராஜனின் கைகள் புகுந்து விமலாவின் மிருதுவான விரல்களைப் பற்றிக்கொண்டன. அந்தக் கேட்டைத் திறக்கக் கூட அவர்களுக்கு அவகாசம் இல்லை!

விமலா சிரித்தாள். அவளுடைய செவ்வாய் சிரித்தது. அவளுடைய கருவிழிகள் சிரித்தன. பட்டுக் கன்னங்கள் சிரித்தன. அவள் உடலே சிரித்தது!

நடராஜன் அசந்து போனான். "விமலா! இது என்ன இப்படிச் சிரிக்கிறாய்? உன்னைப் புரிந்து கொள்ளவே எனக்கு முடியவில்லை. திடீரென்று அழுகிறாய். திடீரென்று சிரிக்கிறாய். விம்மல் ஒலியும் சிரிப்பொலியும் மாறி மாறி வெளிப்பட்டு என்னைத் திகைக்க வைக்கின்றன!" என்றான்.

"பைத்தியம், அத்தான்!" என்று சொல்லி மறுபடியும் சிரித்தாள் விமலா. அதற்கிடையே தன் கைகளைப் பற்றியிருந்த அத்தானின் விரல்களைக் கண்களிலே ஒற்றிக் கொண்டாள். அங்கே தன் விரல்கள் ஈரமாவதைக் கண்டு பிரமித்தான் நடராஜன்.

'நிஜமாகவே இவளுக்குப் பைத்தியம் தான் பிடிக்கிறதோ என்னமோ?' என்று கூட நினைக்கத் தோன்றியது அவனுக்கு.

"என்ன அத்தான் அப்படியே நின்று விட்டீர்கள்? பைத்தியம் என்று சொன்னதால் பயந்து விட்டீர்களா?" என்று கேட்ட விமலா, கேட்டின் அடிப்பாகத்தில் இருந்த சட்டத்தில் கால்களை வைத்து ஏறித் தன் நிலையைச் சற்று உயர்த்திக் கொண்டாள். இப்போது அவள் முகம் அத்தானுடைய முகத்துக்கு நேராக இருந்தது. அவனுடைய காதருகே, வெட்கத்தால் சிவந்த தன் கன்னங்களைக் கொண்டு போய், "பயப்படாதீர்கள், அத்தான்! எனக்குச் சாதாரணப் பைத்தியம் பிடிக்கவில்லை. காதல் பைத்தியம்! அவ்வளவுதான்" என்று ரகசியம் பேசினாள் விமலா.



சட்டென்று கீழே இறங்கிக் கேட்டைத் திறந்து அத்தானைக் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள், "உள்ளே வாருங்கள், அத்தான்! சாப்பிட்டு விட்டுப்போகலாம்" என்று சொல்லியவாறே. தூக்கத்தில் நடப்பது போல் நடந்தான் நடராஜன். அவளுடைய போக்கு அவனுக்குப் பிடிபடவேயில்லை. படிகளில் ஏறி வாசல் கதவை நெருங்கியதும், விமலா நின்று விட்டாள்.

"அத்தான்! நான் அழுததை எண்ணி வருத்தப்படாதீர்கள். உங்களுக்குப் பிடிக்கவே பிடிக்காது என்று எனக்கு நன்றாகத் தெரியும். இனிமேல் அழவே மாட்டேன். சரிதானே? அசடு போல் நான் அழ ஆரம்பித்ததிலிருந்துதான் உற்சாகமாகப் பேசி வந்த நீங்களும் மௌனமாகி விட்டீர்கள். எவ்வளவோ இன்பமாகக் கழிந்திருக்க வேண்டிய நாளைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி விட்டேன் இல்லையா?"

'ஆமாம்' என்று சொல்லி அவளைப் புண்படுத்த விரும்பாமல் அவள் இரு கன்னங்களையும் ஒரு முறை செல்லமாகத் தட்டினான் நடராஜன்.

"நான் ஏன் இப்படி இருக்கிறேன் என்பது உங்களுக்குப் புரியவேயில்லை என்று சொன்னீர்களல்லவா? இன்று வரையில் எனக்கும் அது புரியாமலே இருந்து வந்தது, அத்தான்! ஒரு சமயம் ஒரே சந்தோஷமாக இருக்கும். உள்ளம் குதூகலத்தில் நிறைந்து கட்டுக்கடங்காமல் சிரிப்பு வரும். திடீரென்று விம்மி விம்மி அழத் தோன்றும்.

"ஆனால் இன்று வேடந்தாங்கலில் காரணத்தைக் கண்டுபிடித்துவிட்டேன், அத்தான்! எதிர்காலத்தைப் பற்றி நினைக்கும் போதுதான் கண்ணீர் என்னையும் மீறிக்கொண்டு பெருகுகிறது. ஏதோ மிகப் பெரிய துன்பம் எனக்கு நேரப் போவதாகத் தோன்றுகிறது. அதைப் பற்றி நினைக்காமல் இருந்தால், இப்போது நடப்பதைப் பற்றியே சிந்தித்தால் சந்தோஷமாக இருக்கிறது. அதுவும் நீங்கள் அருகேயிருக்கும்போது சொல்லி முடியாத ஆனந்தம் உண்டாகிறது. மாறி

மாறித் தோன்றும் என்னுடைய விம்மல் ஒலிக்கும் சிரிப்பொலிக்கும் இதுதான் அத்தான் காரணம். ஒன்று மட்டும் நிச்சயம், அத்தான்! எதிர்காலத்தில் எப்படிப்பட்ட துன்பம் எனக்கு நேர்ந்தாலும் சரி, கவலைப் படவே மாட்டேன், சமாளித்து விடுவேன், உங்கள் அன்பு மட்டும் எனக்கு இருக்குமானால்'' என்று சொல்லி விட்டு அத்தானுடைய முகத்தை மிகுந்த ஆவலுடன் ஏறிட்டுப் பார்த்தாள் விமலா.

''உன்னிடம் எப்போதுமே நான் அன்புடன்தான் இருந்து வந்திருக்கிறேன். இனி மேலும் அன்புடன் தான் நடந்து கொள்வேன்.''



அத்தான் கூறிய அன்பு என்ற வார்த்தைக்கு அர்த்தம் புரியவில்லை விமலாவுக்கு. அவள் உள்ளம் திருப்தியடையவில்லை. ஆனால் திருப்தி யடைந்தது போல் நடித்தாள். கதவைத் தட்டினான்.

ஜன்னலில் உட்கார்ந்து அவர்களுடைய வருகையைக் கவனித்துக் கொண்டும் அவர்களுடைய பேச்சைக் கேட்டுக் கொண்டும் இருந்த மரகதம்மாள் உடனே கதவைத் திறக்கவில்லை. இன்னும் நாலு முறைகள் தட்ட விட்டு ''இதோ வந்துவிட்டேன்'' என்று குரல் கொடுத்தாள். தூங்கி எழுந்தவள் போல் கண்களைக் கசக்கிக் கொண்டு அவர்களை வரவேற்றாள்.

''சாப்பிட்டு விட்டுப் போகலாமே?'' என்றாள் நடராஜனைப் பார்த்து.

''இது என்ன கேள்வி அம்மா? இலையைப் போடுவாயா.....கேட்கிறாயே?'' என்றாள் விமலா.

''நீங்கள் செய்து கொடுத்த அத்தனை இட்டிலிகளையும் புளியோதரையையும் நானே சாப்பிட்டு விட்டேன், அத்தை! வயிறு நிறைந்திருக்கிறது. பாவம்! விமலாதான் ஒன்றுமே சாப்பிடவில்லை. முழுப்பட்டினி. அவளுக்குப் போடுங்கள் சாதம்'' என்றான் நடராஜன்.

''நீங்கள் சாப்பிடவில்லையானால் எனக்கும் சாப்பாடு வேண்டாம்'' என்று பிடிவாதம் பிடித்தாள் விமலா.

''இரண்டு பேருமே உட்காருங்கள்'' என்று உபசரித்தாள் மரகதம்மாள்.

அவர்கள் அருகருகே உட்கார்ந்து சாப்பிட்ட காட்சியை உள்ளங் குளிரப் பார்த்து மகிழ்ந்தாள் மரகதம்மாள். 'சீக்கிரமே கணவன் மனைவியாக இதே போல் நெருங்கி உட்கார்ந்து, சாப்பிட வேண்டும்' என்று மனத்துக்குள் அவள் வேண்டிக் கொண்டாள்.



தன்னுடன் வீட்டிலேயே இல்லாமல் தூரத்திலிருந்த விமலா அருமையாகத் தோன்றினாள் நடராஜனுக்கு. நேரம் கிடைத்த போதெல்லாம் அவளைப் போய்ப் பார்த்து வந்தான். ஒழிந்த வேளைகளை அவளுடன் சேர்ந்து கழிப்பதில் ஆனந்தப்பட்டான்.

அன்றைய தினத்துக்குப் பிறகு விமலா அழுவதை நிறுத்தி விட்டாள். எதிர் காலத்தைப் பற்றிய எண்ணங்களை மனதில் எழ விடாமல் தடுத்தாள். அத்தானுடன் சிரித்துச் சிரித்துப் பேசி மகிழ்ந்தாள். இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு அவளுக்கு எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கையே பிறந்து விட்டது. தனக்கு ஏற்பட்டதெல்லாம் மனப் பிரமை என்றும், அத்தானின் காதலைப் பரிபூரணமாகப் பெற்று விட்ட பாக்கியசாலி என்றும் நினைக்க ஆரம்பித்தாள். இந்த நம்பிக்கை மேலும் வேரூன்றி உறுதி பெற்றது. சில நாட்களுக்குப் பிறகு அத்தான் கூறிய சில வார்த்தைகளால்.

"விமலா!" தினமும் உன்னைப் பார்க்க இவ்வளவு தூரம் வருவது கஷ்டமாக இருக்கிறது. நீங்கள் மறுபடியும் 'முன் போலவே வீட்டுக்கு' வந்து விடுங்கள். பிரிந்திருந்தது போதும், மறு

படியும் சேர்ந்தே இருப்போம்'' என்று சொன்னான் நடராஜன்.

'' நிஜமாகவா சொல்லுகிறீர்கள் ?'' என்று ஆவலுடன் கேட்டாள் விமலா. அவள் முகத்தில் மகிழ்ச்சி ததும்பியது.

'' நிஜமாகத்தான், விமலா! நாம் சேர்ந்து இருக்க முடியாமல் இருந்த தடையை நீக்கி விட்டால் போகிறது! அப்புறம் யார் என்ன சொல்லி நம்மைத் தூற்ற முடியும்? எதற்குப் பயப்பட வேண்டும்?'' என்றான் நடராஜன்.

சந்தோஷத்தில் அத்தானை அப்படியே கட்டிக் கொண்டு விடவேண்டும் என்று தோன்றியது விமலாவுக்கு. வெட்கம் பிடுங்கித் தின்றது. உடல் வெலவெலத்துப்போயிற்று. கண்களிலே அசாதாரணமான ஒரு ஒளி படர்ந்து பிரகாசித்தது. இன்பக் கிளுகிளுப்பு உண்டாயிற்று. அதே சமயத்தில் இதயத்தின் ஒரு மூலையிலிருந்து இறுமாப்பு தொனிக்கும் ஒரு குரல், 'விட்டுக் கொடுத்துப் பேசாதே. இன்னொரு தடவைதான் தெளிவாகக்



கேட்கட்டுமே? பெரியோர்களிடம் பேசி முடிவு செய்யட்டுமே? நாமே வலியப் போய்ப் பேச வேண்டாம்! கூடவே கூடாது!' என்று கூறியது.

*    *    *

அன்று நடராஜன் விமலாவைக் காணப் புறப்பட்டபோது வந்தது அக் கடிதம். அவளைக்காணப்போகும் ஆர்வத்தில் அதைப் பிரித்துப் பார்த்துப் படிக்கக்கூட அவனுக்குப் பொறுமையில்லை. சட்டைப் பையில் செருகிக் கொண்டு காரில் ஏறிச் சென்றான்.

பேச்சுக்கிடையே பையிலிருந்த கடிதத்தைப் பற்றிக் கேட்டாள் விமலா. '' புறப்படும் சமயத்தில் ஏதோ வந்தது. நான் அதைக் கவனிக்கக்கூட இல்லை'' என்று அலட்சியமாகப் பதில் சொன்னான் நடராஜன்.

'' கடிதம் வந்தால் படிக்காமலா வைத்திருப்பார்கள்? பிரித்துப் படியுங்கள், அத்தான்!'' என்றாள் விமலா.

'' இப்போது என்ன அவசரம்? எனக்கு அதிக நேரம் இல்லை. உன்னோடு பேசிக் கொண்டிருக்க ஒதுக்கிய நேரத்தை அதற்குச் செலவிடுவேனேன்? சாவகாசமாகப் படிக்கிறேன்!''

அத்தானுக்குப் பின்பக்கமாக வந்து உரிமையுடன் சட்டைப் பையிலிருந்து கடிதத்தை உருவி எடுத்தாள் விமலா. '' நான் படிக்கிறேன், கேளுங்கள்'' என்று சொல்லிப் படிக்க ஆரம்பித்தாள். நடராஜன் தடுக்கவில்லை. 'மனைவியின் உரிமையை இப்போதே பிரயோகிக்க ஆரம்பித்து விட்டாளே!' என்று நினைத்தவன் அவள் ஆசையைக் கெடுக்க விரும்பாமல் பேசாமல் இருந்தான்.

'' அநேக நமஸ்காரங்கள்.

டெலிபோனில் பேச எண்ணினேன். மனம் விட்டுப் பேசுவதை விட மனம் விட்டு எழுதுவது சுலபமாகப் பட்டது.

உங்களைப் பார்த்து நீண்ட நாட்களாகிவிட்டன. நண்பர்களை அடியோடு மறந்து விட்டீர்கள் போலிருக்கிறது. மறதிதானா? அல்லது வேண்டுமென்றே இந்தப் பக்கம் வராமல் இருக்கிறீர்களா என்று தெரியவில்லை. பின்னதாக இருந்தால் இப்போதே இந்தக் கடிதத்தை நீங்கள் கிழித்து எறிந்து விடுங்கள். மேலே படிக்க வேண்டாம்.

கடைசியாக நாம் சந்தித்தபோது நீங்கள் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் ஞாபகம் இருக்கிறதா? அது எங்கே நினைவிருக்கும்? என்னையே மறந்து விட்டபோது நீங்கள் கூறிய வார்த்தைகளைத்தானா ஞாபகம் வைத்திருக்கப் போகிறீர்கள்? கிடக்கட்டும், நான் நினைவூட்டுகிறேன். 'அவசரப்பட்டு ஒரு முடிவுக்கும் வராதே. நன்றாக யோசித்து முடிவு செய்' என்றீர்கள்.

இப்பொழுது முடிவுக்கு வந்து விட்டேன். அதைத் தெரிந்து கொள்ள உங்களுக்கு ஆவலாக இல்லையா?

இப்படிக்கு,

மல்லிகா.

கடிதத்தின் முதல் இரண்டு வரிகளை விமலா படித்ததுமே நடராஜன் தன் அசட்டுத்தனத்துக்காக வருந்தினான். இனிமேல் ஒன்றும் செய்வதற்கில்லை. கடிதத்தைப் பிடுங்கினால் அத்தான் தன்னிடமிருந்து எதை எதற்காக மறைக்கிறார் என்று விமலா ஊகித்து உணர அதிக நேரமாகாது. அப்படி விரசமாகப் போவதை விட அவளே முழுக்கப் படித்துத் தெரிந்து கொண்டு விடட்டும் என்று இருந்து விட்டான்.

மனத்தில் சந்தேகமே எழாமல் படித்துக் கொண்டு வந்த விமலாவுக்குக் கையெழுத்தைப் பார்த்த பிறகுதான்,




# கலிங்கா டியூப்ஸ்

**தண்ணீர், காஸ், எஃகு, கலாய்
குழாய்கள் அரை அங்குலம்
முதல் இரண்டு அங்குலம் வரை**

(B. S. S. 1387/1947 - Class A & B)

## கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்

**33, சித்தரஞ்சன் அவின்யூ, கல்கத்தா - 12**

(பாக்டரி: சௌத்வார், கட்டாக்)



கேரளம், சென்னை, பாண்டிச்சேரி, மைசூர், ஆந்திர ராஜ்யங்களுக்குப்
பிரத்தியேக விநியோகஸ்தர்கள் :

| | |
|---|---|
| சௌத் இந்தியா கார்ப்பரேஷன்<br>(ஏஜன்ஸீஸ்) பிரைவேட் லிட.<br>2, அர்மீனியன் தெரு - சென்னை-1 | எம். வி. சுந்தரராஜன் & கம்பெனி<br>290, லிங்கி செட்டித் தெரு<br>த. பெ. நெ. 182 - சென்னை-1 |



தென் பிராந்தியத்திற்கு ஸோல் ஏஜண்டுகள் :

**டியூப் ஸப்ளையர்ஸ் (பிரைவேட்) லிமிடெட்**
2, அர்மீனியன் தெரு சென்னை - 1



# இந்தியா

புகைப்படத் தொழில் உலகில்-கால அளவில்-ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் பின் தங்கி இருக்கிறது. கடுமையான அன்னியச் செலாவணி நெருக்கடி காரணமாய் ஏற்பட்டுள்ள இறக்குமதிக் கட்டுப்பாட்டினால், ஆக்பாவின் பல புதிய, புரட்சிகரமான தயாரிப்புகள் நமது தேசத்துக்கு இன்னும் வரவில்லை. இந்த நெருக்கடி தீர்ந்து, நாட்டின் வர்த்தகம் சகஜ நிலைக்கு வரவேண்டியது தான் தாமதம், இதுவரை நாம் இழந்துவிட்ட காலத்தையும் சரிக்கட்டிவிடுவதாக, ஆக்பா இந்தியா பிரைவேட் லிமிடெடைச் சேர்ந்தவர்கள் பிரதிக்ஞை செய்து கொள்கிறோம். அதே சமயத்தில், உங்கள் வியாபாரத் தொழிலும் சரி, பொழுதுபோக்கும் சரி, லாபகரமானதாகவும் இன்பமூட்டுவதாகவும் ஆக ஆக்பா புகைப்படத் தொழிற்பொருள்களில் கடைசியாக (மிகச் சமீப காலத்தில்) தயாரானவற்றை உங்களுக்குக் கிடைக்கும்படி செய்வோம். அதுவரை நீங்கள்




**ஆக்பா புகைப்படப் பொருள்கள்**
புதிதான யாவற்றுக்குமே
காத்திருப்பது உத்தமம்.

ஆக்பா புகைப்படப் பொருள்களில் புதியவற்றை முன்கூட்டி விவரமாகக் கண்டறிய, உங்கள் ஆக்பா வியாபாரியிடம் நவம்பர்-1958க்கான 'ஆக்பா போட்டோ காலரி'யின் இலவசப் பிரதியைப் பெறுங்கள்.

இந்தப் புதிய பொருள்கள் இந்தியாவில் கிடைப்பதில்லை. ஆனால் நீங்கள் மேல் நாடுகளுக்குச் சென்றால் இவை யாவற்றையும் கண்டிப்பாகப் பாருங்கள்.

**ஆக்பா இந்தியா** பிரைவேட் லிட்.

பம்பாய் . புதுடில்லி . கல்கத்தா சென்னை

AGFA, 58, 14, TAM EVEREST

பழுக்கக்காய்ச்சிய இரும்பினால் இருதயத்தில் சூடு போட்டது போல் இருந்தது.

கடிதத்தை நடுங்கும் விரல்களால் பற்றியபடியே அத்தானைப் பார்த்தாள். அவன் எந்த விதமான உணர்ச்சியும் வெளிக்காட்டாமல் உட்கார்ந்திருந்தது சற்றுத் தெம்பு அளித்தது அவளுக்கு.

விமலா பேசாமல் இருந்திருக்கலாம். கடிதத்தை மடித்து அத்தான் பையிலேயே வைத்து விட்டு ஒன்றும் நடவாதது போல் இருந்திருக்கலாம். அத்தான் சட்டைப் பையிலிருந்து கடிதத்தை உருவி எடுத்து உரிமையுடன் படிக்க ஆரம்பித்த அதிகப்பிரசங்கித்தனத்தை நடராஜன் மன்னித்திருப்பான், மறந்திருப்பான். அவளும் மறந்திருக்கலாம்.

ஆனால் பெண்புத்தி பின் புத்தி என்பதைக் காட்டி விட்டாள் அவள். சென்ற சில நாட்களாக அத்தானிடம் ஏற்பட்டிருந்த நம்பிக்கையும், அவர் தன்னிடம் காட்டிய அன்பினால் அவருடைய காதலைப் பரிபூரணமாகப் பெற்று விட்டோம் என்ற எண்ணத்தில் உண்டான இறுமாப்பும் அவளைப் பேச வைத்து விட்டன.

"உங்களைப் பிடித்து ஆட்டுவித்த மாய மோகினி உங்களை விட்டு ஓடி விட்டாளாக்கும் என்று நினைத்தேன். மறுபடியும் அழைப்பு அனுப்பியிருக்கிறாள், அழைப்பு! பைத்தியக்காரி!" என்று சொல்லி விட்டுச் சுக்குச்சுக்காகக் கடிதத்தைக் கிழிக்க ஆரம்பித்தாள் விமலா. அவளுடைய செய்கையைக் கண்கொட்டாமல் முறைத்துப் பார்த்தான் நடராஜன். அத்தானுடைய முகத்திலே தோன்றிய கடுமையைக் கண்டு சற்றுப் பயந்து போனாள் விமலா. சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, "அவள் கிடக்கிறாள். அத்தான்! வேறு ஏதாவது நல்ல விஷயமாகப் பேசுவோம்" என்றாள்.

நடராஜன் எழுந்து திரும்பிக் கூடப் பார்க்காமல் போய் விட்டான்.

சிரிப்பொலி கேட்ட இடத்தில் விம்மல் ஒலி கேட்க ஆரம்பித்தது.

## பதினோராம் அத்தியாயம்

# அன்பு என்னும் அமுது

சென்னை விமான நிலையத்தில் இறங்கியதுமே, மல்லிகாவின் கண்கள் சுற்றுமுற்றும் பார்த்து நடராஜனைத் தேடின. அவனைக் காணாது போகவே, ஒரே ஏமாற்றமாகப் போய் விட்டது. 'விமான நிலையத்திலேயே வந்து சந்திக்க வேண்டுமா, என்ன? வீட்டுக்கு அவசியம் வந்திருப்பார்' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டாள். வீட்டுக்குப் போன பிறகு அவன் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்து வீட்டை அலங்கரித்தாள். இரண்டு வாரத்துத் தூசியையெல்லாம் அப்புறப்படுத்தி ஒவ்வொரு பொருளையும் இருக்கவேண்டிய இடத்தில் அழகாக வைத்தாள். தோட்டத்திலிருந்து பல வர்ணங்களில் விதம் விதமான மலர்களைப் பறித்து வந்து கோப்பையில் அடுக்கி மேசையின்மீது அலங்காரமாக வைத்தாள். தன்னுடைய அலங்காரத்திலும் விசேஷ கவனம் செலுத்தினாள்.

அவ்வளவுக்கும் பிறகு நடராஜன் வரவில்லை. 'எப்படி வருவார்? உன்னிடம் வந்து தன் உள்ளத்தைத் திறந்து காட்டினார், நீ பார்க்க மறுத்தாய். தன் நிலையை தெளிவுபடுத்தினார். நீ அலட்சியம் செய்தாய். உன் உள்ளத்தில் அவருடைய காதலை ஏற்றி வைக்கும்படி கெஞ்சினார். நீ 'காதலுக்கு இடமில்லை' என்று உதறினாய். உன்னுடன் உலகத்தையே சுற்றிவர அவர் தயாராக இருந்தார். நீ 'என்னை வதைக்காதீர்கள்' என்று வெறுப்புடன் பேசினாய். இவ்வளவுக்கும் பிறகு அவர் எப்படி வருவார்? சவிரக்கம் இல்லாமல் அவர் மனம் நோகப் பேசிய பிறகு இப்போது அவர் என்னைக் காண வரவில்லையே என்று ஏங்கிப் பயன் என்ன? அவர் ஆண் மகன் இல்லையா? ரோசம் இருக்காதா?

வாழ்க்கையில் முதல் முறையாக அவளுக்குத் துயரத்தைத் தாள முடியாது என்று தோன்றியது. முதன் முதலாகத் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டுமோ என்ற நிலை ஏற்பட்டது.

தோல்வியை வெற்றியாக மாற்றக் கூடிய திறமை தனக்கு உண்டு என்று மனப்பால் குடித்துவந்த மல்லிகா இப்போது தோல்வியை ஒப்புக் கொள்ளத் தயாரானாள். இன்பமும் துயரமும் நம்மிடம்தான் இருக்கின்றன என்றும், நாமே ஏற்படுத்திக் கொள்பவைதான் என்றும், துயரத்தை இன்பத்தை அடையும் பாதையாகவும் கருதிய மல்லிகா இப்போது உண்மையிலேயே துன்பப் பட்டுக்கொண்டிருந்தாள்.

துன்பத்திலேயே உழன்று கொண்டிருக்கும்போது மேலே மேலே துன்பம் ஏற்பட்டால் அதைத் தாங்குவது கடினமில்லை. ஆனால் துன்பத்தை எதிர்த்துப் போராடி வெற்றி கண்டவர்களுக்கு

மீண்டும் பெரிய அளவிலே துயரம் உண்டாகும்போது தாங்கவே முடிவதில்லை.

அழுவது என்றாலே பிடிக்காத மல்லிகா கண் சிவக்க அழுதாள். வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டும் என்ற உறுதியோடு இருந்த மல்லிகா அந்த லட்சியங்கள் நிறைவேறும் சமயத்தில் திடீரென்று உருக்குலைந்து சிதைந்துபோகவே ஆறுதலளிக்கக் கூட யாரும் இல்லாத நிலையில் விம்மினாள். தங்கை சரஸ்வதியிடம் கூடத் தன் ஆற்றாமையைச் சொல்லிக் கொள்ள முடியவில்லை. சொன்னாலும் அவளுக்குப் புரியாது.

புகழுக்காக ஆசைப்பட்ட மல்லிகா அந்தப் புகழ் நிலைத்து நிற்காது என்று புரிந்துகொள்ள இத்தனை நாட்கள் ஆயின. செல்வத்தில் புரண்டால் உழைக்க வேண்டாம், உல்லாசமாக வாழலாம் என்று கனவு கண்ட அவள் செல்வம்கூடத் தீராத துன்பத்தைக் கொடுக்கக்கூடும் என்று உணர்ந்தாள். லட்சியத்துக்காகப் பாடுபட்ட மல்லிகா அந்த லட்சியம்கூடப் பெரிதல்ல, உண்மையான தூய அன்பு ஒன்றுதான் நிலையானது, அமுது போன்றது என்பதைச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் இப்போது தெரிந்து கொண்டாள்.

புகழேணியில் மறுபடியும் ஏறிப் பார்க்க அவள் விரும்பவில்லை. இதைவிடப் பலத்த அடிபடும் என்று நம்பினாள். நடிப்புக்கும் தனக்கும் காத தூரம் என்று தீர்மானித்தாள்.

தன்னையும் விமலாவையும் ஒப்பிட்டுப் பார்த்தது அவள் மனம்.

விமலா தன்னைப் போல் எப்போதும் சிரித்துக் கொண்டு குதூகலமாக இருப்பதில்லை. அதற்கு முயற்சி செய்வதும் இல்லை. பெரும்பாலும் துயரப்பட்டு அழுவதிலேயே அவளுக்கு நாட்கள் கழிந்திருக்கின்றன. தன்னிடம்கூட விமலா தன் துயரத்தை மறைத்தது கிடையாது. 'துன்பம் அனுபவிக்கப் பிறந்தவள் நான்' என்பதை ஒப்புக்கொண்டு விட்டவள் அவள். அதனால் அதை அனுபவிப்பது அவளுக்குக் கஷ்டமாக இல்லை, கஷ்டமாக இல்லாதது மட்டுமல்ல! அதிலே ஒருவித இன்பம்கூட அனுபவித்தாள் விமலா! ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும். அத்தானிடம் அவள் கொண்டிருந்த தாய்மையான அன்பு, மாசற்ற காதல் அந்தத் துயரங்களைத் தாங்கக் கூடிய சக்தியை அவளுக்கு அளித்தன. அந்தக் காதலுக்காக அவள் துன்பப் படத் தயாராக இருந்தாள். அத்தானுக்காக மனம் உருகுவதில் அவளுக்கு உள்ளூற ஆனந்தமே ஏற்பட்டது!

'வெளிப்படையாகத் தோன்றும் அந்தத் துயரத்தையும், காதலுக்காக

அனுபவிக்கும் துன்பம் இது. இதை விடப் பெரிய துயரம் நேர்ந்தாலும் அந்தக் காதலை விட்டுக் கொடுக்கமாட்டேன், தைரியமாக அதையும் தாங்கிக் கொள்வேன் என்ற பெருமிதத்திலே உள்ளுக்குள்ளே எழும் மகிழ்ச்சியையும் அனுபவிக்கக் கொடுத்து வைக்காதவள் நான்! விமலா பாக்கியசாலி!'

*    *    *

மல்லிகாவை அடையாளம் கண்டு கொள்ளவே ஒரு நிமிஷமாயிற்று நடராஜனுக்கு. இன்முகம் காட்டி வரவேற்று, பரிகாசப் பேச்சும் குதூகலச் சிரிப்பும் நிறைந்து, மனத்தைக் கவரும் அந்த மல்லிகாவைக் காணவில்லை அவன். அழுது அழுது சிவந்த கண்ணும் வீங்கிய முகமுமாக அவள் தோற்றமளித்தாள்.

அவனைக் கண்டவுடன்தான் அந்த முகத்தில் ஒரு புன்னகை தோன்றியது. அத்தனை அழுகைக்கும் அலங்கோலத்துக்கும் இடையே அந்தப் புன்னகை சோபிக்கவில்லை. சோகத்தை அதிகரிப்பதாகவே இருந்தது.

''மல்லிகா! இது என்ன அசட்டுத்தனம்? எதற்கு இப்படி ஒரேயடியாக அழுது தீர்த்திருக்கிறாய்? உன்னுடைய முகத்தைப் பார்க்கவேமுடியவில்லையே?'' என்றான் நடராஜன்.

''நீங்கள் வராததால் அழுகை வந்தது. இனிமேல் ஒரு சொட்டுக்கூடக் கண்ணீர் வராது'' என்றாள் மல்லிகா.

''நிஜமாகவா, மல்லிகா? நீ கண் சிவக்க எனக்காகவா அழுதாய்? என்னைக் காணாததாலா? அப்படியானால் நான் பாக்கியசாலிதான். ஆனால் உன்னை இப்படி அழ விட்டுவிட்டேனே! நீ பம்பாயிலிருந்து வந்து விட்டாய் என்பது எனக்கு எப்படித் தெரியும் மல்லிகா? தெரிந்திருந்தால் வராமல் இருந்திருப்பேனா? டெலிபோனில் கூப்பிட்டு ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் விழுந்தடித்துக்கொண்டு ஓடி வந்திருப்பேன்.''

''என் கடிதம் கிடைத்ததா?''

''கிடைத்தது, மல்லிகா! படித்தவுடன் புறப்பட்டு வந்தேன். உன்னுடைய முடிவைத் தெரிந்து கொள்ள ஆவலுடன் வந்திருக்கிறேன்.''

''முடிவைச் சொல்வதற்கு முன்னால் என்னைப் பற்றிய கதையை என்றாவது ஒரு நாள் சொல்கிறேன் என்றேனல்லவா? அதைச் சொல்ல வேண்டிய சமயம் இப்பொழுது வந்து விட்டது. சொல்லிவிடுகிறேன். முடிவை நீங்களே தீர்மானித்து விடுங்கள்.''

நடராஜன் உட்கார்ந்துகொண்டு கேட்க ஆரம்பித்தான். (தொடரும்)



கருநிறச்
சுடர்
விழிகளுக்கு




# ஆஷா




## கண் மை

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

**மெஸர்ஸ் ஜே. எல். மாரிசன் சன் அண்டு**
**ஜோன்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.**
**கண்ட்ராக்டர் பில்டிங்ஸ், நிக்கல் ரோடு**
**பல்லார்டு எஸ்டேட் - - பம்பாய்-1**

தயாரிப்பாளர்கள் :

**ஐடியல் இன்ஸ்டிடியூட் பிரைவேட் லிமிடெட்.**
**பம்பாய்-2**

# கோவையில் ஒரு நாள்



பகீரதன்

அந்தச் சிறு பிள்ளை யார்? அவன் பெயர் என்ன? அவனுடைய சாதி என்ன? அவன் பெற்றோர்கள் யார்? இது ஒன்றும் எனக்குத் தெரியாது. எனக்கு மட்டும் அல்ல; அந்தச் சிறுவனுக்கும் தெரியாது.

ஒருநாள் கோயமுத்தூரில் உள்ள தெரு ஒன்றில் போலீஸ்காரர் ஒருவர் ரோந்து வந்து கொண்டிருந்தார். ஒரு குழந்தையின் அழு குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். சாக்கடையின் ஓரத்தில் ஒரு சின்னஞ்சிறு குழந்தை அநாதரவாக அழுது கொண்டிருந்தது. அக் குழந்தையின் பெற்றோர்கள் யாரையும் அங்கு காணவில்லை. யாரோ என்ன காரணத்தினலோ குழந்தையை ங்கு விட்டு விட்டுப் போய் விட்டார்கள். அந்த அநாதைக் குழந்தையை எடுத்துவந்து போலீஸ்காரர் வளர்த்தார். தம்முடைய குடும்பத்துடன் குழந்தையையும் சேர்த்து வளர்த்தார். பிறகு அந்தக் குழந்தையை என்ன செய்வது என்று தெரியாமல் தவித்தார். அந்தக் குழந்தையைக் காலம் எல்லாம் வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு அவருடைய குடும்பமும் வருவாயும் ஒத்துழைக்கவில்லை. ஆகவே அந்தக் குழந்தையைக் கோயமுத்தூரிலுள்ள சேவா சமாஜத்தில் சேர்த்தார்.

அந்த அநாதைச் சிறுவனைக் கோயமுத்தூரின் நகர எல்லைக்குச் சற்று அப்பால் உதகமண்டலம் நெடுஞ்சாலைக்கு அருகில் இருக்கும் சேவாசமாஜம் என்னும் ஸ்தாபனத்தில் பார்த்தேன். சிறுவனுக்கு இப்போது சுமார் ஆறு அல்லது ஏழு வயது இருக்கும். உற்சாகத்துடன் விளையாடிக் கொண்டிருக்கிறான். ''உன் அப்பா யார்?'' என்று கேட்டால் தன்னை எடுத்து வளர்த்த போலீஸ்காரரைச் சொல்லுகிறான். ''நீ பெரியவனானால் பிறகு என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டால் குதூகலத்துடன் ''போலீஸ்காரர் ஆகப் போகிறேன்'' என்று சொல்லுகிறான்.

ஆனால் பார்க்கிறவர்களுக்கு அந்தப் பாலகனுடைய முகமும் கண்களும் எத்தனை எத்தனையோ சோகக் கதைகளை நினைவூட்டுகின்றன. சொல்ல முடியாத பயங்கரங்கள், விவரிக்க முடியாத பல துன்பங்கள் அந்தப் பச்சிளம் பாலகனுடைய பால் வடியும் முகத்தில் காணப்படுகின்றன.

இவனைப் போன்ற அநாதைப் பிள்ளைகள் சுமார் நாற்பது குழந்தைகள் கோயமுத்தூர் சேவாசமாஜத்தில் அன்னமிட்டு வளர்க்கப் படுகிறார்கள்; கல்வி கற்பிக்கப்படுகிறார்கள்.

சேவாசமாஜத்தின் புதுக்கட்டடம் சென்ற மாதம் திறக்கப்பட்டது. பாரதத்தின் உபஜனாதிபதி திரு ராதாகிருஷ்ணன் அவர்கள் வந்து கட்டடத்தைத் திறந்து வைத்தார்கள். கட்டடம் எல்லா வசதிகளுடனும் கட்டப்பட்டிருக்கிறது. இருந்தாலும் சின்னஞ் சிறு கட்டடம்தான். கட்டடத்தைச் சுற்றிலும் உள்ள திறந்த வெளியில் குழந்தைகள் விளையாடுவதற்கு இடமும், காய்கறித் தோட்டமும் அமைத்திருக்கிறார்கள்.

கோயமுத்தூரிலுள்ள எத்தனையோ கல்லூரிகளையும் அவற்றின் விடுதிகளையும் காட்டிலும் கோயமுத்தூர் நகருக்கு வெளியில் உள்ள இந்தச் சேவா சமாஜம் முக்கியமான ஸ்தாபனம் என்று நான் கருதுகிறேன்.

ஏனெனில், மற்றக் கல்லூரிகளிலும் அதன் விடுதிகளிலும் பணமும் வசதியும் படைத்த குடும்பத்தின் பிள்ளைகள் பணத்தைச் செலவு செய்வதற்கென்றே தங்கி வருகிறார்கள்.

சேவாசமாஜத்திலோ தாய் தந்தையற்ற அநாதைக் குழந்தைகளுக்கு இருக்க இடமும், பசிதீர அன்னமும், அறிவு வளரக் கல்வியும் கற்பிக்கப்பட்டு வருகின்றன.

ஆகையால் கட்டடம் மிகச் சின்னதாக இருந்தபோதிலும், பிள்ளைகளெல்லாம் பெற்

எல்லாவித நவீன வசதிகளும் நிறைந்த பூ. சா. கோ. பொறி இயற் கல்லூரி புதுக் கட்டடத்தின் கம்பீரமான தோற்றத்தை மேலே காணலாம்.

றோர்களை இழந்த அநாதைகளாக இருந்த போதிலும், அவர்களைக் காப்பாற்றச் செல வுக்குப் பணம் போதாமல் கஷ்டப்பட்ட போதிலும் சேவாசமாஜம் செய்து வரும் தொண்டு மகத்தானது என்பதில் ஐயமில்லை.

** ** **

நமது நாடும், சமூகமும் முன்னேற வேண்டுமானால் இந்த நாட்டில் அநாதைப் பிள்ளைகளை அநாதரவாக விடக் கூடாது.

உயிரையும் உள்ளத்தையும் அறிவையும் ஆன்மாவையும் கெடுக்கும் வழியில் செல்லத் தூண்டும் கொடிய வறுமையில் வாடிய குழந் தைகளாக ஆதரவற்றவர்களாக அவர்கள் வளர்ந்தால் நாட்டில் எவ்வளவுதான் நல்ல காரியங்கள் செய்து வந்தாலும் எல்லாம் விழலுக்கு இறைத்த நீராகிவிடும்.

இந்தக் குறையைப் போக்குவதற்காக ஆரம் பித்திருக்கும் புனிதமான ஸ்தாபனம்தான் சேவா சமாஜம். தற்கால நாகரிக வாழ்வுக்கு அடிமைப்பட்டவர்களால் இது போன்ற சேவா சமாஜத்தில் பங்கு கொண்டு பணி யாற்றுவது மிகவும் கடினமான காரியம்.

மக்கள் குலத்திடம் பரிபூரண அன்பு கொண்டு, ஆண்டவனிடம் உண்மையான நம்பிக்கை வைத்து ஏழை எளியவருக்கு ஆற்றும் பணிதான் ஆண்டவனுக்கு ஆற்றும் பணி என்ற அசைக்க முடியாத உண்மையை உணர்ந்தவர்களால்தான் இதுபோன்ற ஸ்தா பனத்தில் தொண்டாற்ற முடியும்.

அத்தகைய பண்புகளைப் பெற்ற உயர்ந்த குடும்பம் பி. எஸ். ஜி. குடும்பம். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவர் திரு மதி சந்திரகாந்தி கோவிந்தராஜன். செல் வம் படைத்த குடும்பத்தைச் சேர்ந்தவரா யிருந்த போதிலும் எளிய சுபாவம் நிறைந்த வர். ஏழை மக்களுக்கு அதிலும் அநாதைக் குழந்தைகளுக்கு ஆற்றும் தொண்டுதான் செல்வம் படைத்தவர்கள் செய்ய வேண்டிய தொண்டு என்ற நம்பிக்கையுடையவர். இந்த நம்பிக்கையில் யாருக்குச் சந்தேகம் தோன்றி னாலும் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜ னுக்குச் சந்தேகமே கிடையாது. அத்தகைய அருமையான குணம் படைத்தவர். திருமதி பாக்யலக்ஷ்மி கிருஷ்ணன் என்னும் இன்னொரு தர்ம குணம் படைத்தவரையும், திருமதி தாயார் தேவராஜுலு, திருமதி சாரதா மணி ராமசாமி ஆகிய இன்னும் சிலரையும் ஒன்று சேர்த்துச் 'சேவா சமாஜத்தை' நடத்தி வருகிறார். திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜன் அவர்களுக்கு அவருடைய கணவர் திரு ஜி. ஆர். கோவிந்தராஜன் அவர் கள் எல்லா உதவிகளையும் செய்து வருகிறார்.

** ** **

அநாதைக் குழந்தைகளை ஆதரிக்க ஆரம் பிக்கப்பட்ட சேவா சமாஜத்தில் இப்பொழுது நாற்பது குழந்தைகள் இருக்கிறார்கள். எல்லா சாதிமதத்தைச் சேர்ந்த குழந்தைகளும் இருக் கின்றனர். இதில் முப்பத்தொரு குழந்தை களின் பராமரிப்புச் செலவின் பெரும்பகுதியை மட்டும் 'யூனிட்டேரியன் சர்வீஸ் கமிட்டி' என்ற ஸ்தாபனம் ஏற்றுக் கொண்டிருக்கிறது. இந்த ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயம் கனடாவில் இருக்கிறது. இந்த ஸ்தாபனத் தார் உலகெங்கிலும் உள்ள அநாதைக் குழந்தைகளின் ஆதரவுக்காக அருமையான தொண்டு செய்து வருகிறார்கள். இந்த ஸ்தா பனத்தின் ஆதரவில் கோவை சேவா சமா ஜத்தில் வளரும் ஒவ்வொரு குழந்தைக்கும் மூந்நூறு ரூபாய் வீதம் ஒவ்வொரு ஆண்டுக் கும் அனுப்புகிறார்கள். அந்தத் தொகையைக் கொண்டு மட்டும் அந்தக் குழந்தைகளைப் பராமரிக்க முடியவில்லை. அதற்குமேல் ஆகும் செலவுகளைச் சேவா சமாஜம் ஏற்றுக் கொள் கிறது. இந்த ஸ்தாபனத்தை இன்னும் எவ் வளவோ சிறந்த முறையில் வெளிநாட்டார் யாருடைய உதவியும் இல்லாமல் நடத்தி விடலாம். இத்தகைய அருமையான ஸ்தாப னத்துக்குப் பொருளுதவி செய்து நாட்டி லுள்ள அநாதைப் பிள்ளைகளுக்கு ஆதரவு கொடுக்கும் புண்ணியவான்கள் கோயமுத்தூர் ஜில்லாவில் இல்லாமலா போனார்கள்?

* சேவாசமாஜத்துச் சிறு பிள்ளைகள் உப ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்களுக்குக் கை கூப்பி வணங்குவதையும். சேவா சமாஜத்தின் புதுக் கட்டடத்தையும், காரியதரிசி சந்திரகாந்தி கோவிந்தராஜன் அறிக்கை வாசிப்பதையும் படத்தில் காணலாம்.





உபஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்களுக்குத் திரு ஜி. ஆர். கோவிந்தராஜன் அவர்களை, பிரின்ஸ்பால் திரு ஜி. ஆர். தாமோதரன் அறிமுகம் செய்து வைக்கிறார்.

சேவா சமாஜத்தின் புதுக் கட்டடத் திறப்பு விழாவில் கலந்து கொள்வதற்குத்தான் சென்ற மாதம் கோயமுத்தூர் போயிருந்தேன். கட்டடத்தைத் திறந்து வைப்பதற்கு வந்திருந்த உபஜனாதிபதி திரு ராதாகிருஷ்ணன் அவர்களைச் சேவாசமாஜத்தின் குழந்தைகள் 'வணக்கம்' என்று சொல்லி வரவேற்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பிள்ளைகள் வரிசை வரிசையாக நின்று செய்த விளையாட்டுகள் பார்த்துப் பார்த்து மகிழ வேண்டியவை. திரு ராதாகிருஷ்ணன் மீது இயற்றியிருந்த வாழ்த்துப்பாடலுக்குக் குழந்தைகள் அபிநயம் பிடித்த காட்சி மனத்துக்கு மகிழ்ச்சி அளித்தது. மாலை நேரத்தில் அந்தத் திறந்தவெளியில் நடந்த இந்த விழாவை இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. இந்த சமாஜம் சென்ற பத்து ஆண்டுகளாக நடைபெற்று வந்தாலும் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜன் அதன் காரியதரிசிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பின்தான் சிறப்பாக நடைபெற்று வருகிறது என்று அறிந்தேன். திருமதி சந்திரகாந்தி அவர்கள் தம்முடைய செல்வாக்கை உபயோகித்து மிகக் குறைந்த காலத்துக்குள் சுமார் இருபதினாயிரம் ரூபாய் நன்கொடை வசூலித்து சேவாசமாஜத்தின் கட்டடத்தைக் கட்டி முடிக்க அரும்பாடுபட்டிருக்கிறார். ஏழை எளிய மக்களுக்கு ஆற்றிவரும் தொண்டில் இணையற்ற இன்பம் இருக்கிறது என்பதைத் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜன் அவர்கள் உணர்ந்து விட்டார்கள். தாய்மை உணர்ச்சியுடன் தொண்டாற்றி வரும் திருமதி சந்திரகாந்தி கோவிந்தராஜன் அவர்களை வாழ்த்திப் பாராட்டுகிறேன்.

** ** **

சேவாசமாஜக் கட்டடத் திறப்பு விழாவைப் போலவே மனத்துக்கு மகிழ்ச்சி அளித்த இன்னொரு கட்டடத் திறப்புவிழா அன்று காலையில் நடைபெற்றது. இந்தக் கட்டடம் சேவாசமாஜக் கட்டடம் போல் சின்னஞ்சிறு கட்டடம் அல்ல. மிகப் பிரும்மாண்டமான கட்டடம். இந்தக் கட்டடத்தையும் உபஜனாதிபதி திரு ராதாகிருஷ்ணன் அவர்களே திறந்து வைத்தார்கள்.

ஆம், பூ. சா. கோ. பொறி இயற் கல்லூரியின் புதுக்கட்டடத் திறப்பு விழாவைப் பற்றித்தான் சொல்லுகிறேன்.

"பூ. சா. கோ. பொறி இயற் கல்லூரியா? அப்படி என்றால்?"

"கோவை பீளமேட்டில் இருந்து வரும் பி. எஸ். ஜி. குடும்பம் பழமையான பெரிய குடும்பம். குடும்பத்தில் பிரபலஸ்தர் திரு பி. எஸ். ஜி. ரங்கசாமி நாயுடு அவர்கள். அவருக்கு மூன்று சகோதரர்கள்.

"குடும்பத்தின் பத்து லட்ச ரூபாய் சொத்தை நாலு சகோதரர்களும் பிரித்துக் கொண்டார்கள். திரு ரங்கசாமி நாயுடு அவர்களின் யோசனைக்கு இணங்கச் சொத்தை ஐந்து பங்குகளாகப் பிரித்து, ஒரு பங்கைத் தர்மத்துக்கு வைத்தார்கள். அந்த இரண்டு லட்ச ரூபாய் மூலதனத்தில் ஆரம்பிக்கப்பட்ட பி. எஸ். ஜி. தர்ம ஸ்தாபனம் இன்று பல லட்ச ரூபாய் சொத்துடன் இருக்கிறது!

"தர்ம ஸ்தாபனத்தின் நிதியைக் கொண்டு ஒரு இயந்திரத் தொழிற்சாலை ஆரம்பித்தார்கள். இதில் நூறு மாணவர்கள் தொழில் கல்வி பெற வசதி செய்தார்கள். இன்னும் 300 மாணவர்கள் மேற்படி தொழிற்சாலையை ஒட்டி ஆரம்பித்த பொறிஇயற் பாடசாலையில் பயிற்சி பெறுவதற்கு ஏற்பாடு செய்தார்கள். தொழிற்சாலை திறமையுடன் நிர்வகிக்கப் பட்டதால் நல்ல லாபம் வந்தது. நிதி ஏராளமாகப் பெருகி விட்டது.

"அந்த நிதியைக் கொண்டு தங்கள் பொறி இயற் கல்வி ஸ்தாபனத்தை மேலும் வளர்த்தார்கள். அதன் பலன்தான் பூ. சா. கோ.

பொறி இயற் கல்லூரி. அது இப்பொழுது எவ்வளவோ பிரமாண்டமாக வளர்ந்து விட்டது. பல நூற்றுக்கணக்கான மாண வர்கள் இந்தக் கல்லூரியிலிருந்து ஆண்டு தோறும் தொழிற் கல்விப் பட்டம் பெற்று வெளியேறுகிறார்கள்.''

இந்த விவரங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு பி. எஸ். ஜி. தர்ம ஸ்தாபன கைத் தொழில் இன்ஸ்டிடியூட்டுக்குள் சென்றேன். விஸ்தாரமான கைத்தொழில் சாலையைப் பார்த்தேன். அதைப் பார்க்கும் போது தமிழ் நாட்டின் எதிர்காலத்தில் ஒரு நம்பிக்கை ஏற்பட்டது. அந்த நம்பிக்கை யுடனேயே கைத்தொழில்சாலையின் ஒவ்வொரு பகுதியாகப் பார்த்தேன். பற்பல விதமான இயந்திரங்களைப் பார்த்தேன். அவை வெறும் அலங்காரப் பொருள்களாக இல்லாமல் உயிருடன் இயங்குவதையும் பார்த்தேன். கும்பல் கும்பலாக மாணவர்கள் அந்த இயந்திரங்களைச் சுற்றி நின்று அவை சம்பந்தமான நுணுக்கங்களை ஆராய்ந்து படித்துக் கொண்டிருப்பதையும் பார்த்தேன்.

இந்த இயந்திரச் சாலைக்குள் சில இயந்திரங் களும் செய்யப் படுகின்றன. இந்த இடத்தில் செய்யப்பட்ட தண்ணீர் இறைக்கும் பம்பு செட்டுகள் பல காணப்பட்டன. இன்னும் பல விதமான இயந்திரச் சாமான்களும் இயந்திர மோட்டார்களும் அங்கு தயாராகின்றன.

இவைகளை யெல்லாம் பார்த்து விட்டுப் பொறிஇயற் கல்லூரிக்குள் சென்றேன். அங்கு பல நூற்றுக் கணக்கான மாணவர்கள் பல வகுப்புகளாகப் பிரிந்து பற்பல இயந்திரத் தொழில்கள் சம்பந்தமான கல்விகளைக் கற்றுக் கொண்டிருந்தார்கள். கோயமுத்தூரில் நூல் ஆலைகள் அதிகம். துணி ஆலைகளும் இருக் கின்றன. ஆகையால் துணி நெய்யும் இயந்திரம், நூல் நூற்கும் இயந்திரம் சம்பந்த மான தொழில் நுணுக்கங்கள் விசேஷமாக இங்கு கற்பிக்கப்பட்டு வருகின்றன.

''இத்தகைய தேசத் தொண்டை ஆரம் பித்த புண்ணிய புருஷரான திரு ரங்கசாமி நாயுடு அவர்கள் இப்பொழுது எங்கே இருக் கிறார் ?'' என்று கேட்டேன்.

''அவர் பூத உடல் மறைந்து விட்டது. ஆனால் அவர் புகழ் உடல் மறையவில்லை. பி. எஸ். ஜி. பொறி இயற் கல்லூரியில் வாசிக் கும்; ஒவ்வொரு 'மாணவர் இதயத்திலும் இருக்கிறார்'' என்று பதில் வந்தது.

''திரு ரங்கசாமி நாயுடு விட்டுச் சென்ற இந்த உத்தமப் பணியை இப்பொழுது யார் கவனித்து வருகிறார்கள்?''

''அவருடைய குமாரர்களான திரு ஜி. ஆர். தாமோதரன் அவர்களும் திரு ஜி. ஆர். கோவிந்த ராஜுலு அவர்களும் இம்மகத்தான தர்மஸ்தாபனத்தின் பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறார்கள். அவர்களுடைய திறமையில் தான் பூ. சா. கோ. பொறிஇயற் கல்லூரி இப்படி விண்ணை இடிக்கும் அற்புதமான கட்டடத்துடன் திகழ்கிறது. ஆலமரம் போல் ஓங்கி வளர்ந்து பல விழுதுகள் விட்டுக் காட்சி தருகிறது. பொறி இயற் கல்லூரியின் பிரின்ஸிபாலாக மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகிறார் திரு ஜி. ஆர். தாமோதரன். அவருடைய சகோதரர் திரு ஜி. ஆர். கோவிந்தராஜுலு அவர்கள் அவருக்கு உறுதுணையாக இருந்து மற்ற அலுவல்களில் சிரத்தை காட்டி வருகிறார். இவர்களுடைய முயற்சியின் பயன்தான், உப ஜனாதிபதியே புது தில்லியிலிருந்து பறந்து வந்து பூ. சா. கோ. பொறிஇயற் கல்லூரியின் புதுக் கட்டடத் தைத் திறந்து வைத்து ஆசி கூறினார்.

இந்த அருமையான காரியங்களைத் திறமை யாகச் செய்து வரும் திரு ஜி. ஆர். சகோதரர் களை வாழ்த்திப் பாராட்டுகிறேன்.

திரு ஜி. ஆர். சகோதரர்கள் பூ. சா. கோ. பொறிஇயற் கல்லூரித் திறப்பு விழாவை அமோகமாக நடத்தி விட்டார்கள். கட்ட டத்தின் கம்பீரம், விழாப்பந்தல் அலங்காரம், மாணவர்களின் கட்டுப்பாடு, மேனதாள வரவேற்புகளெல்லாம் பிரமாதமாக இருந் தன. கோயமுத்தூர் ஜில்லாவைச் சேர்ந்த பிரமுகர்கள் அனைவரும் இந்த விழாவுக்கு வந்து சிறப்பித்திருந்தார்கள்.

கோயமுத்தூரில் நடைபெற்று வரும் இந்தத் தொண்டுகள் தமிழ்நாட்டின் எதிர்கால வளர்ச்சிக்கு ஆரம்பம் என்று வைத்துக் கொள்ளலாம். தமிழ் நாட்டின் ஒவ்வொரு ஜில்லாவும் இன்னும் சில ஆண்டுகளுக்குள் இதுபோன்று எல்லாத் துறையிலும் முன்னே றித் தமிழ் மக்கள் எல்லா வசதிகளும் பெற்று விளங்கப் போவதற்குக் கோவை ஜில்லா ஒரு நல்ல வழிகாட்டியாகத் திகழட்டும்.

# ரேடியோ களைப்பா?




இப்படி ஒருவித களைப்பு இருக்கிறது! அடிக்கடி ரேடியோவில் 'கிரீச்' 'கிரீச்' என்ற ஓலம் கேட்கிறது என்று சலிப்படைந்தால்....அபஸ்வரமும் அன்னிய குரலும் கேட்டால்....'கர்' 'கர்' என்ற அடித் தொண்டைச் சத்தம் காதைத் துளைத்தால்.......பொதுவாகவே இரட்டைக் குரலோசை ஒலித்தால் — உங்களுக்கு ரேடியோ களைப்பு ஏற்பட்டிருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம்.

அது ரேடியோவிலுள்ள ஒலிபெருக்கிக் கருவிகளின் குறைபாடு. ஹை-பி (ஹைபெடிலிடி) இயற்கைக் குரலை அப்படியே வெளிக்கொணர்ந்து ஒலிபரப்பும் நுட்பமான நவீன முறையில், குரல் வகைகளையும் இன்னிசைகளையும், தாரஸ்தாயி மந்தரஸ்தாயி பிரஸ்தாரங்களையும் உங்களுக்குப் பிடித்தமாதிரி, இரண்டு ஒலிபெருக்கிகளை இசைவாகப் பொருத்தி வைப்பதன் மூலம் வழங்கப்படுகிறது.

இந்த நவீன நுட்பத்தைக் கையாண்டு உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறது நோவாக் ஹை-பி என்ற பிரசித்தி பெற்ற பெல்ஜிய நாட்டு ரேடியோ. உன்னதமான முறையில் நாதத்தின் இனிமையை அளிக்கவல்லது.

உங்களுக்கு அருகாமையிலுள்ள நோவாக் வியாபாரியிடம் சென்று இந்த ரேடியோவை வைக்கச் சொல்லிக் கேட்டுப் பாருங்கள்.



## நோவாக் ரேடியோ

**மாடல் 684T Hi-Fi**

**ரூ. 550/-**

வரிகள் தனி

# NOVAK

**the famous Belgian Radio**

சக்திவாய்ந்த 8 சூப்பர்ஹெட் வால்வுகள் * 13.4 முதல் 572 மீட்டர் வரை 4 பாண்டுகளில் * தானாகவே இயங்கும் 'பியரோ'க் முறை * தாரஸ்தாயி மந்தரஸ்தாயில் மாற்றி வழங்கும் Hi-Fi ஏற்பாடு * ஸோரேஹூமிக் ஸ்பீக்கர்கள் 9½" ஸ்பீக்கர்கள் 3½" ட்வீட்டர் * மத்திய அலைகளைப் பிடிக்கும் ஏரியல் * சிற்றலைகளுக்கான மறைக்கப்பட்ட ஏரியல் பாண்டைப் ட்யூனிங் இண்டிகேடர் EM 80 * ப்ளேயிங் ட்யூனிங் * சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது. * அதிகப்படி ஸ்பீக்கர்களும் பிக்கப்பும் வைத்துக்கொள்ள வசதிகள். * 205, 225, 250 வால்ட்டேஜுக்கான அட்ஜஸ்ட்மெண்டுகள். * ஏ.ஸி. அல்லது ஏ.ஸி./டி.ஸி. * ரம்மியமான 'வினீர்' மரத்தினால் செய்யப்பட்ட 22"×14"×9½ காபினெட்

உற்பத்தியாளர்கள்: **டெலிராட் பிரைவேட் லிட்., பம்பாய்-10**

தென்னிந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள்

## ஓபுல் ரெட்டி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்

31, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, சென்னை-2

சென்னை ராஜ்ய ஜில்லா விற்பனையாளர்கள்: டி. எஸ். என். சுந்தரராஜ பாகவதர் அண்டு ஸன்ஸ் பாண்டிச்சேரி - ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட், கோயமுத்தூர் ஏ. சுப்பன் அண்டு கம்பெனி, வேலூர் - ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிமிடெட், உதகமண்டலம் நேஷனல் ரேடியோ லானிக்ஸ், கும்பகோணம் - பீபிள்ஸ் ரேடியோ கம்பெனி, காஞ்சீபுரம் ஸ்ரீ நடராஜா ரேடியோ ஹௌஸ், சிதம்பரம் - ஜெர்மன் ரேடியோ ஹவுஸ், திருச்சி பானு ரேடியோ சர்வீஸ், மதுரை - ஆர். சுந்தரேசன் அண்டு கம்பெனி, சேலம்



# நன்னீராடி
# நறுமணம் கமழ

Finest
Musk
Soap
Dralle
MADE IN INDIA



# டிராலி
# மஸ்க் சோப்






## எழுத ஆரம்பிக்கும்போது

“வாழ்க்கைத் தலை. இருக்கும் நாலைந்து மயிரும் வெளுப்பு. உமக்கென்ன தெரியும், காதலைப் பற்றி? தயவுசெய்து வேறு விஷயம் பேசும். பழைய அனுபவம் பேசப் போகி றீரா? போதும் போதும், நிறுத்தும்! காதல் என்ன கண்டீர்? கர்நாடகப் பேர்வழியைக் கேட்டு நாம் கற்றுக் கொள்ளவா?”

இவ்வாறெல்லாம் வாசகர்கள் அதிலும் பட்டணக்கரை வாலிபர்களும் யுவதிகளும் கேட்டுச் சிரிப்பது என் மனக் காதில் விழுகிறது. எவ்வாறாயினும் இன்று விவாகம், காதல் இவ்விஷயங்களைக் குறித்து வியாசம் எழுதியனுப்பத் தீர்மானித்து விட்டேன் நான். காதல் என்பது கடினமான விஷயம். விவாகம் என்பதை வைத்துக் கொண்டு காதலைப் பற்றி இளைஞர்களுடன் கொஞ்சம் பேசலாம் என்று எனக்கு உத்தேசம்.

ஆராய்ந்து பார்த்தால், நம் நாட்டில் சரியான காதல் விளைவதற்குத் தக்க பூமியே இல்லை என்று ஒப்புக் கொள்ள வேண்டும். ஏனெனில், இந்நாளிலும் கூட, தினசரி வாழ்க்கையில் ஆண் பெண்கள் தாராளமாய்க் கலந்து பழகுவது நமக்குள் கிடையாது. என்ன சமாதானம் சொன்ன போதிலும் இது உண்மையே. இது நல்லதா, கெடுதலா என்பது வேறு பிரச்னை.

இரண்டாவதாக, நம்முடைய சமூகத்தில் பிறந்த பெண்களுக்கெல்லாம் விவாகம் செய்தே ஆகவேண்டும். காதல் என்னும் நிபந்தனை வைத்துக் கொண்டால் இது முடியாத காரியமாகும். இது பெண்ணைப் பெற்றவர்களுக்கு எளிதில் விளங்கும்.

மூன்றாவதாக, இது எல்லா நாடுகளுக்கும் பொது. காதல் என்பது இருபாலார் இடத்தும் இருக்க வேண்டிய மன நிலை. ஒருத்தி பேரில் ஒருவன் காதல் கொள்கிறான். அதற்கு ஏற்றாற்போல் அவளுக்கு அவன்பேரில் காதல் உண்டாகவில்லை. காதலைத் தூண்டும் உருவமும், குணங்களும், செயல்களும் இருந்தால் இந்தப் பைத்தியக்காரப் போட்டி உலகத்தில் அந்த ஒருத்தியையோ அல்லது ஒருவனையோ பலபேர்கள் காதலிக்க முந்துகிறார்கள். இதற்கு என்ன செய்வது? காமதேவன் நம்முடைய சௌகரியத்தை உத்தேசித்து ஆண் பெண்களைத் தனித்தனி ஜோடிகளாகப் பிரித்துத் தன் பாணங்களைப் பிரயோகிப்பதில்லை. எல்லோரும் காதல் மணந்தான் செய்ய வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்திக் கொண்டோமானால் பலபேர்கள் விவாகமில்லாமலே இருக்க நேரும். ஆகையால் காதலித்துத்தான் கலியாணம் செய்ய வேண்டும் என்ற நிபந்தனை முடியாத காரியம் என்பதும் விளங்கும்.

## மின்னலும் மழையும்

இதனால் காதல் என்பது ஒரு கனவு. வாழ்க்கையில் நிறைவேற முடியாதது என்றல்ல. காதல் என்பது ஓர் உண்மையான வேகமே, சந்தேகமில்லை. சில சமயம் இரு பக்கமும் காதலுண்டாகி விவாகமும் முடிவு பெறுகிறது. சில சமயம் இரு பக்கமும் காதல் இல்லைதான். அதனாலேயே வாழ்க்கை காதலற்றுப் போக வேண்டியதில்லை.

விவாகம் செய்துகொண்ட தம்பதிகள், ஒருவரை யொருவர் மதிக்கவும், நேசிக்கவும், கூட்டாளிகளாக வாழ்க்கை நடத்தவும் பயில வேண்டும். காதலில்லை, தாய் தகப்பனார் செய்வித்த மணம். இது உப்பில்லாத சோறு. பிற நாடுகளில் எவ்வளவு காதல் கதைகளில் படிக்கிறோம், சினிமாவில் பார்க்கிறோம், அதுவல்லவோ உண்மையான வாழ்வு என்று ஏக்கமடைந்து ஏமாற வேண்டாம். அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நம்முடைய நாட்டிலும் ஆண்பெண்கள் கூடி உயர்வும் நயமும் பொருந்திய வாழ்வு நடத்தலாம். மின்னலைக் காண்கிறோம். அது உண்மையான வேகம். அழகான காட்சி. ஆயினும் மின்னல் மின்னினால்தான் மழை என்ற நியதி கிடையாது. மின்னல் தானாக உண்டாகும். உண்டானால் அழகு தான். ஆனால் மின்னல் இருப்பினும் இல்லையாயினும் மேகங்கள் கூடி மழை பெய்கின்றன அல்லவா, அப்படிப் பெய்தால்தான் வாழ்வு.

## வியக்கத் தக்க தைரியம்

வாலிபனே! ஓர் இளம் பெண் உனக்கு மனைவியாக வீட்டுக்கு வந்திருக்கிறாளல்லவா, அதைப் பற்றி நீ எப்போதாவது ஆழ்ந்து சிந்தித்ததுண்டா? சிறு வயதில் ஒரு பெண் தன் தாய் தகப்பனை விட்டு விட்டுப் புதிய ஒரு குடும்பத்துக்கு எவ்வளவு தைரியமாக வரு

கிறான்! எவ்வளவு சந்தோஷமாக வருகிறான்! அவள் எதை நம்பி, யாரை நம்பி இவ்வளவு தைரியமும், சந்தோஷமும், முகமலர்ச்சியும் கொண்டிருக்கிறாள்? மணம் புரிந்த ஒவ்வொரு வாலிபனும் இதைத் தனக்குள் யோசித்து, வியப்புற வேண்டும். இதைப் போன்ற தைரியத்தையும் திட புத்தியையும் ஆண்களில் யாராவது காட்டியிருக்கிறார்களா? காட்ட முடியுமா? மனைவியின் இந்த ஆத்ம சக்தியையும் தைரியத்தையும் கண்டு விட்டால், அவனுக்குத் தான் செய்ய வேண்டிய கடமையை ஒவ்வொரு வாலிபனும் உணரவே செய்வான். தன் உடல் இன்பத்துக்காக அடைந்த ஒரு கருவியாக அவளை நினைக்க மாட்டான். தனக்குக் கிடைத்த அரிய பெரிய நட்புச் செல்வம் என்று அறிந்து நடந்து கொள்வான். தன்னை நேசிக்கும் ஆடவனை ஒரு சிநேகிதனிடம் நடந்து கொள்வதுபோல் கவனிப்பும் மதிப்பும் சிரத்தையும் காட்டி மனைவியிடம் நடந்து கொள்ளுவான். தான் இட்டது சட்டம் என்று நினைக்க மாட்டான். தான் எஜமானன். அவள் ஊழியம் செய்பவள் என்று எண்ண மாட்டான்.

## தோழமைப் பயிற்சி

கேவலம், உடல் இன்பத்தையே லட்சியமாக எண்ணக் கூடாது. இதை அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள்; ஆனால் மறந்துவிடுகிறார்கள். பிரகிருதியில் அமைந்திருக்கும் இந்த உடல் மகிழ்ச்சியைத் தம்பதிகள் ஜாக்கிரதையாக ஆண்டு அது தமக்குள் நட்பை வளர்க்கக் கடவுளால் படைக்கப்பட்ட ஓர் அருமையான கருவி என்று நினைவில் வைத்து, நடந்து கொள்ள வேண்டும். உடல் இன்பத்தைத் தாழ்வென்றும் பாவமென்றும் கருத வேண்டாம். ஆனால் சேர்ந்து வாழ்வதன் பயனே அதுதான் என்று கருதுதல் கூடாது. அது நட்பை வளர்த்து ஒற்றுமையைப் பூரணமாக்குவதற்குரிய ஓர் அற்புதமான பிரகிருதி சக்தி. அறிவுடையாருக்கும் அல்லாதாருக்கும் உதவும் ஒரு மேன்மையான கருவி அது. சாதனம் என்பதை மறந்து, அதுவே இன்பம் என்று எண்ணிவிடக் கூடாது. அவ்வாறு ஏமாந்தால் வாழ்க்கை முழுதும் பயனற்றுப்போய்த் துன்பமாகவே முடியும்.

எவ்வளவோ காலத்துக்கு முன் நமது திருவள்ளுவர் மனைவிக்கு 'வாழ்க்கைத் துணை' என்று அருமையாகப் பெயரிட்டார். அப்பெயரின் முழுப்பொருள் தம்பதிகளின் வாழ்க்கையில் மலர்ந்து மணம் வீசச் செய்ய வேண்டும். புருஷனும் மனைவியும் தோழமை பயில வேண்டும். எவ்விஷயத்தையும் இருவரும் கலந்து பேசி முடிக்க வேண்டும். வீட்டு விஷயங்களில் மனைவியின் இஷ்டப்படி விட்டுவிடுதல், உலக விவகாரங்களில் புருஷன் இஷ்டப்படி நடத்தல் என்று பங்கு போட்டுக் கொண்டு வாழ்க்கை நடத்துதல் கூடாது. கலந்து பேசிச் செய்வதில் பயிலப் பயிலக் கஷ்டம் தோன்றாது. இருவருடைய அறிவும் உணர்ச்சியும் சக்தியும் விசாலமடைந்து அன்பும் சுகமும் உண்டாகும். பலவிதப் பள்ளிக்கூடப் படிப்புகளைக் காட்டிலும் இவ்வித வாழ்க்கைப் பயிற்சியில்தான் அதிகப் பயன்.

## காதல் ஒரு ஜுரமன்று; விவாகம் ஒரு மருந்தன்று

காதல் கொண்டு கூடிய தம்பதிகளானால் மிகவும் சிரேஷ்டம். அது போக, கடவுள் படைத்த இருவர், 'நாம் சேர்ந்து அன்புடன் இல்லற வாழ்க்கை நடத்துவோம்' என்று காதலின் வேகமின்றிச் சாதாரணமாய்க் கூடினவர்களானாலும் சரி. அவ்வாறு வாழ்ந்து உலகத்தில் அன்பென்னும் செல்வத்தைப் பெருக்கலாம். காதல் என்பது ஒரு ஜுரமாகவும், விவாகம் என்பது அதற்கு ஒரு மருந்தாகவும் எண்ணக் கூடாது. அவ்வாறு கொண்டால் விவாகம் முடிந்ததும் ஜுரம் தணிந்து போகும். மருந்தும் ஜுரமும் கணக்குத் தீர்ந்து போகும். காதல் என்பது ஒரு ஜுரமன்று. பூவின் மணம்போல் அது ஒரு இயற்கைச் சக்தி. அமுத சக்தி. சில சமயம் அது தானாகப் பொங்கும். இல்லாவிட்டால் மின்சார சக்தியைப் போல் நாம் உண்டாக்கி வளர்த்துக் கொள்ளலாம்.

காதல் என்பதும் மற்றப் பிரகிருதி சக்திகளைப்போல் ஆண்டவனுடைய சொரூபமேயாகும். அதை எந்தக் கோயிலிலும் ஆராதித்துத் தரிசிக்கலாம். ஆனால் பக்தி வேண்டும், சிரத்தை வேண்டும். பக்தி இருந்தால் எந்தக் கோயிலிலும் ஈசுவரன் இருக்கிறான். உன் மனைவி, உனக்கென்று கட்டப்பட்ட காதல் தெய்வத்தின் கோயிலாவாள். நோன்பிருந்து வந்தித்தாயானால் காதல் என்னும் பராசக்தியின் அவதாரத்தை அக்கோயிலில் தரிசிப்பாய். இல்லையானால் கல்லைத்தான் காண்பாய். அது கல்லின் குற்றமல்ல, உன் குற்றமே.

## காதலும் காத்தலும்

காதலை முதலிலே காண்பது பெரிதல்ல. கண்டோம் என்று நினைத்தவை யெல்லாம் உண்மைக் காதலல்ல. தேகத்திலுள்ள பூதத் தொகுதிகள் தங்கள் அன்னகோச வேகத்தை யெல்லாம் உயர்ந்த காதலாகக் காட்டிக் கொள்ளும். பகுத்தறிவுடன் பொய்யைத் தள்ளி உண்மைக் காதலை ஒருவன் கண்டறிந்தாலும் விரும்பினவளிடம் அதற்கொத்த காதல் உண்டாகாமல் இருப்பதையும் காண்கிறோம். இருபக்கமும் இயல்பாகவும் பலாத்காரமற்றதாகவும் காதல் உண்டானாலல்லவோ அது வாழ்வைத் தாங்கும் மேடையாகும்? இந்தப் பெரும் பேறு அனைவரும் பெறுதல் அரிது. ஆனால், தன் பாய்ச்சலில்லாத வயல்களை யெல்லாம் தண்ணீர் பாயவில்லை என்று விட்டுவிட முடியுமா? இறைத்து வெட்டியோ வானத்தை வேண்டியோ சாகுபடி

செய்கிறோம். இவ்வாறு பயிர் செய்து இனிய காய், கனி, கிழங்குகளும் மணமும் அழகும் கொண்ட பூக்களும் உண்டாக்கலாம். ஆனால் சோம்பலின்றி மனத்தைச் செலுத்திப் பக்தியுடன் பயிர் செய்ய வேண்டும். உண்மைக் காதல் ஏற்படுதல் அரிதுதான்; கண்டாலும் அதற்கு இணையாகப் பிரதி காதல் பெறுவது அதனினும் அரிது. இரண்டும் பெற்றாலும் அக் காதலைக் காப்பது எல்லாவற்றிலும் அரிது. ஏற்பட்ட காதலைக் காத்தலும் அது போகச் சர்வ வியாபகமாய் மறைந்து கிடக்கும் அவ்யக்த காதல் செல்வத்தை வெளிப்படுத்தி வளர்த்து வாழ்க்கைத் துணையாக மனைவியை ஆக்கிக் கொள்ளப் பயில்வதுமே இளைஞனுடைய தர்மம். இதற்குப் பகவானுடைய அருள் வேண்டும்; நாமும் பாடுபட வேண்டும்.

காதல் என்பது சாதல், நான் என்பது சாக வேண்டும். 'காதல் இன்றேல் சாதல்' என்று பாரதியாருடைய குயில் பாடிற்று. ஆனால் சாதல் இல்லையேல் காதல் இல்லை என்பது மந்திரம்.

## ஏற்றிய விளக்கைக் காக்க வேண்டும்

விவாகத்துடன் காரியம் முடிந்தது என்று எண்ணுவது அறியாமையாகும்.

காதல் மணமாயினும் சரி, சம்பிரதாய மணமாயினும் சரி, யுத்தம் பின்னால்தான். அதில் வென்றாலொழிய வெற்றியில்லை, சுகமில்லை.

மணம் செய்த பின்தான் குருக்ஷேத்திரம். வாழ்க்கை முழுதும் ஒரு யுத்தகளம். மனத் தாய்மைக்குப் பல சோதனைகள் நேரிடும். தெருவிலும், வண்டிகளிலும் பலர் கூடி விருந்து கொள்ளும்போதும் காத்தலுக்குத் தக்க உயர்ந்த பாத்திரங்கள் போல் முகங்களும் குணங்களும் பல தோன்றும். கொண்ட மனைவியைத் தாழ்த்தும் பல எண்ணங்களும் தோன்றும். அவைகளைக் கவசம் பூண்டு எதிர்த்து வெல்ல வேண்டும்.



உண்மையில், பூகத் தொகுதிகள் அனைத்தும் ஒன்று. ஆனால் அதில் ஆண் குலம் முழுதும் ஒன்று. பெண் குலம் முழுதும் ஒன்று. இரண்டும் அத்வைதமாக ஒன்றுகூட இடைவிடாமல் பொங்குகிறது. அதுவே காதல் சக்தி. ஆனால் இந்தச் சக்திக்கு வரம்புமீறி இடம் கொடுத்தோமானால் அனைத்தும் ஒன்றாக வெந்து சாம்பலாகிவிடும். அவ்வளவு நெருப்பைத் தாங்க முடியாத நமக்குத் தனி அடுப்பும் தனி விளக்கும்தான் வாழ்க்கை. ஆகையால் அடுப்பை மூட்டி விளக்கை ஏற்றி, அதைக் காத்து வாழ்வோமாக.

## தேனீயின் காதல்

காதலின் பூரண விளக்கத்தைத் தேனீக்களின் வாழ்க்கையில் காணலாம். தேனீக்களின் வாழ்க்கையில் பல அற்புதங்கள்; அவைகளில் பேராச்சரியத்தைத் தருவது, அவற்றின் காதல் முறைதான். தனி உயிர் என்ன பயனுக்கென்பதும் காதல் என்ற பிரகிருதி மகிழ்ச்சி என்ன பயனுக்கென்பதும், இந்தச் சிறு பிராணிகள் அறிந்திருப்பதாகவே தோன்றுகிறது. பருவமடைந்த உடன் பெண் ஈ கூண்டை விட்டு வெளியே பறக்கும். பின்னே ஆண் ஈக்கள் தொடர்ந்து செல்லும். பறந்து பறந்து சென்ற ஒன்றின் காதலைக் குமரி ஒப்புக் கொள்ளும். இந்தக் காதலுக்கு ஆண் ஈ கொடுக்கும் விலை என்னவென்று எண்ணுகிறீர்கள்? தன் உயிரையே காதலிக்குத் தத்தம் செய்து விடுகிறது. ஆணும் பெண்ணும் கலந்து மகிழ்ந்ததும் மணவாளனுடைய உயிரையே பெண் ஈ கவர்ந்து தன் வயிற்றுக்குள் அடக்கிக் கொண்டு போய் விடுகிறது. பெண் ஈ கூண்டுக்குத் திரும்பிப் போய்த் தன் ஆயுள் முழுதும் முட்டைகள் இடும். ஆயுளுக்கு ஒரே ஒரு தடவைதான் தேனீக்குக் காதலும் சேர்க்கையும்! அந்த ஒரு சேர்க்கையின் பயனாக ஆண் ஈ இறந்து போகிறது. பெண் ஈக்கு மறுபடியும் எந்த ஆணுடனும் சேர்க்கை கிடையாது. ஆயிரக்கணக்கான முட்டைகளிட்டு தன் குலத்தின் நலனுக்கு வேண்டியவாறு இஷ்டம் போல், ஆண்களையோ, பெண்களையோ அல்லது இரண்டுமில்லாத சுத்தக் கன்னித் தொண்டர் கூட்டத்தையோ உண்டாக்கிக் கொள்ளும்.

காதல், இறப்பு, பிறப்பு என்பவற்றின் பொருளும் பயனும் பரஸ்பர சம்பந்தமும் இந்தத் தேனீக்களின் வாழ்க்கைச் சரித்திரத்தினால் ஒருவாறு நாம் அறியக்கூடும். காதல் என்பது இன வளர்ச்சியைத் தூண்டும் பிரகிருதி சக்தியின் உருவம். அது உயிருள்ள உலகம் முழுவதும் பரந்து கிடக்கிறது. உயிரற்றதென்று நாம் எண்ணும் ஜட அணுக்களுங் கூடக் காதல் வேகத்துடன் மணந்து தான் பிரகிருதி நடைபெறுகிறது. இறப்பென்பது துக்கமோ நாசமோ துயரப்பட வேண்டிய விஷயமோ அன்று. இறப்பு என்பது பிறப்பே. ஒரு ஆண் ஈயின் உயிர் பல்லாயிரம் ஈ சமூகத்துக்கு உயிர் தந்து அவற்றிலேயே மறைந்து விடுகிறது. அதைத்தான் இறப்பென்கிறோம். பரிபூரணத் தியாகத்துக்குச் சித்தமாயில்லாதவர்கள் மண வாழ்க்கையில் பூரண இன்பம் காண மாட்டார்கள்.

## விவாகமும் விவேகமும்

இந்த ஆகாயச் சித்திரம் இருக்கட்டும், நடைமுறையில் பயனுள்ள விஷயம் ஏதும் இல்லையா? எவ்வளவோ சிக்கலான கேள்விகள் கிடக்க வெறும் மனச்சஞ்சாரம் பண்ணுகிறீரே என்று வாசகர்கள் நினைக்கலாம். பயனற்ற சித்திரப் பேச்சுகள் நான் பேசவில்லை. வாழ்க்கையில் எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் பல கேள்விகள் எழுகின்றன. அவற்றுக்கு அந்தந்தச் சந்தர்ப்பத்தை யொட்டித் தனித்தனி பதில் சொல்ல

வேண்டியதே தவிர, ஒரே பதிலாய்ச் சொல்லுவது பயனற்றது. உதாரணம்: எந்த வயதில் விவாகம் செய்ய வேண்டியது? இதற்கு விடையாக எந்த வயதைக் குறிப்பிட்டாலும் சில குடும்பங்களுக்குச் சில பேர்வழிகளுக்கு அது சரியானதாகாது. ஒரு விவாகத்துக்கு யார் சம்மதம் வேண்டும்? தாயார் தகப்பனார் பந்துக்களா? சமூகமா, அல்லது பெண்ணா? யார் சம்மதத்தால் முடிக்க வேண்டும்? இதுவும் ஒரு விடைக்குள் அடங்காத விஷயம். ஒரு நிலைமையைப்போல் மற்றோர் நிலைமை இராது. சாதிக்கலப்பு மணம் செய்யலாமா கூடாதா? சில சந்தர்ப்பங்களில் செய்ய வேண்டியது. வேறு சில சமயங்களில் கூடாது. அடிப்படையான தத்துவத்தை அறிந்து இல்லற வாழ்க்கையின் பொருளும் பயனும் சரியாக உணர்ந்தோமானால் எழும்பும் பல கேள்விகளுக்கு விடைகள் தாமாகவே வரும். இதுதான் சரியான முறை.



'இப்படிச் செய், அப்படிச் செய்' என்று பல புத்திமதிகள் சொல்லப் புகுந்தால் ஒவ்வொன்றுக்கும் பல ஆட்சேபணைகள் கிளம்பும். எதையும் எதிர்ப்பதே கல்வி கற்ற மனிதனது மூளையின் சுபாவம். தாமாக யோசித்துத் தனி விஷயங்களைத் தீர்த்துக் கொள்ள விட்டுவிடுவதுதான் நலம். ஆயினும் இவ்வளவுதூரம் சொல்லியபிறகு சில கேள்விகளுக்காவது என் அபிப்பிராயத்தை எழுத வேண்டுமென்று எண்ணுகிறேன்.

### கலப்பு மணம்

வயதுவந்த இருவர் தீவிர உணர்ச்சியுடன் புருஷன் மனைவியாக வாழ வேண்டுமென்று ஆசைப்பட்டால் பெற்றோர்களே, குலம், பணம், வழக்கம் முதலிய காரணங்களைக் கொண்டு தடை செய்யாதீர்கள். உண்மைக் காதலைத் தடுத்தால் மனநிலை தேகாரோக்கியம் இரண்டும் கெட்டு விடும். பெற்றோர்களாகிய நீங்கள் விரும்புவது உங்கள் மக்களின் சந்தோஷம். அதை உத்தேசித்தால் காதலைத் தடுக்கக் கூடாது. உங்கள் கடமை என்னவென்றால் கஷ்டங்களையும் தடைகளையும் சரியாய் எடுத்துக் காட்டுவதும், அவர்கள் உணர்ச்சியைச் சோதித்துப் பார்ப்பதும், அவர்கள் புத்தியை விசாலப் படுத்துவதுமேயாகும். இவ்வெல்லாப் பரீட்சையிலும் தேர்ந்தார்களானால், அதன் மேல் அவர்களுக்கே விட்டுவிடுங்கள். தெய்வம் உண்டு. மக்களின் க்ஷேமத்துக்கு நீங்களே சாசுவத காவல் என்று எண்ணாதீர்கள்.

தவிர, நன்றாய்ப் பழகித் தெரிந்து இரு பக்கத்திலும் சம்மதம் கண்டு, வெவ்வேறு சாதிப் பிரிவைச் சேர்ந்தவர்கள் மணம் புரிவது நாட்டுக்கு நன்மையே பயக்கும். ஏற்றத் தாழ்வு புகுத்தாத தொழில் வரம்புகளை நான் ஆட்சேபிக்கவில்லை. சிறு வயதிலேயே பழகிக் கற்க வேண்டிய தொழில் வரம்புகளுக்குச் சம்பந்தப்படாத சாதிப் பிரிவினைகளை ஒழிப்பது அத்தியாவசியம். சமய வேறுபாடுகளை உத்தேசித்தும் சில பிரிவுகள் உண்டாயின. அச் சமய வேறுபாடுகள் முற்றிலும் மறைந்து போய் வெறும் உடுப்புகள், ஆசாரங்கள், முகத்தில் இடும் குறிகள் முதலியன மட்டும் வேறுபட்டு வீண் பிரிவினைகளும் சமூகத் துவேஷங்களும் எஞ்சி நிற்கின்றன. இவற்றை யெல்லாம் ஒழிப்பதற்கு விவாகத் தடைகளை வர வர ஒழிக்க வேண்டும். சாதியை ஒட்டி நிற்கும் பிரத்தியேக உணர்ச்சி போக வேண்டும். 'தம்மவர், தம்மவர்' என்கிற மோகம் தீர வேண்டும். இல்லாவிடில் பாரத சாதிக்கு விடுதலையில்லை.

### நிதானித்து நடக்க

வாலிபர்களே! வழக்கம் சமூக வாழ்க்கை என்பன வெல்லாம் பொய்யல்ல, இலேசாகத் தள்ளி விடக்கூடிய விஷயங்களல்ல. தலைமுறை தலைமுறையாகத் தோன்றிய மனோபாவங்கள் பேசி வந்த மொழிகள், வழங்கி வந்த வழக்கங்கள், செய்து வந்த காரியங்கள், இவற்றின் திரண்ட உருவந்தான் நாம். காதல் வேகத்தினால் இதை நாம் மறந்து விடக் கூடாது. மறந்தோமானால் அபாயம். பம்பரம் சுழலும் வரையில் நின்று கொண்டிருக்கும்; சுழல்வது நின்றதும் பழையபடி தலைமோதி விழுந்து தரையில் உருளும். ஆகையால் குலத்தையும் மதத்தையும் பாஷையையும் பழக்க வழக்கங்களையும் விட்டு வெகு தூரம் ஓடி அலையாதீர்கள். அதனால் துயரங்கள் விளையும், உண்மைச் சுகம் கிடையாமற் போய்விடும்.

ஒவ்வொரு வேகத்தையும் உண்மையான காதல் வேகம் என்று மோகங் கொள்ளாதீர்கள். உண்மையான காதல் வேகம் திடீர் என்று தோன்றாது. அப்படித் தோன்றுவது கேவலம் உடல் வேகம்தான். உள்ளத்தில் உண்டாகும் உடல் உணர்ச்சி யெல்லாம் யாரோ எழுதிய கதைப் புத்தகங்களில் படித்த காதல் என்று எண்ணுகிறீர்கள். அடக்கிப் பார்த்து மறந்து பார்த்து, மாற்றிப் பார்த்து, பிறகுதான் தீர்மானிக்க வேண்டும்.

காதலுக்கு ஒத்த பிரதி காதல் பெறாத வேகத்தை உடனே அடக்கி மறந்துவிட வேண்டும். வழக்கத்துக்கு மாறான மணங்கள், வாழ்க்கையில் நற்பயன் பெற வேண்டுமானால் இரு பக்கத்திலும் ஒத்த காதல் வேகம் மிகவும் அவசியம். வெறும் 'சம்மதம்' போதாது. இரண்டு உயிர்களும் ஒன்றிக் கலந்தாலொழிய உண்மையான காதல் மணம் ஆகாது. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து சம்பவங்களில் உண்டாகும் வேகம் உண்மையான காதல் அல்ல. நிலையில்லாத பிரமைதான். அதன் தூண்டுதலை விட நிதான யோசனையும், பெரியோர் சொல்லும் விவேகமுமே மேலானவை.

### எச்சரிக்கை

சாதிக்குள் அடங்கிய மணமானாலும் கலப்பு மணமானாலும், நன்கு தெரிந்த குலம்,

குடும்பம் இவற்றில் இருவர் மனமொத்து மணம் செய்து கொண்டால்தான் சந்தோஷமாக இல்வாழ்க்கையை நடத்த முடியும். முன்பின் நன்றாக அறியாத இடங்களில் தோன்றும் உருவத்தின் அழகும், அறிவின் பிரகாசமும், உணர்ச்சி வேகங்களும் பித்தி மாறி விடும். இது பல பேருடைய அனுபவம்.



உலகத்தின் சீர்திருத்தத்துக் கென்றாவது பாரத ஜாதியின் முன்னேற்றத்துக் கென்றாவது மணம் செய்ய யோசிப்பதோ, அல்லது செய்யப் போவதை நிராகரிப்பதோ நன்மை தராது. விவாகம் என்பது தனியொருவனையும் ஒருத்தியையுமே அதிகமாகப் பொருத்தது. சமூகத்தின் நன்மைக்காக நாம் மணம் புரிவோமென்பது வீணான ஆகாயக்கோட்டை.

**வயதும் சம்மதமும்**

நம்முடைய நாட்டில் ஆணுக்கு இருபத்திரண்டு முதல் முப்பது வயதுக்குள்ளும், பெண்ணுக்குப் பதினெட்டு முதல் இருபத்தைந்துக்குள்ளும் இள வயதிலேயே விவாகம் முடித்தல் நலம் என்பது என் அபிப்பிராயம். இதில் பிறநாடுகளை நாம் பின்பற்ற வேண்டியதில்லை. மேற்குறித்த வயதில் இரு பாலாருக்கும் சுதந்திர புத்தியிருக்கும்; பதினெட்டு வயதுக்கு முந்திய பெண் குழந்தைகளுக்கு விவாகம் முடிப்பது அவர்களுடைய தேக ஆரோக்கியத்தை என்றென்றைக்கும் கெடுப்பதாகும். வழக்கம் என்று சொல்லிப் பெற்ற குழந்தைகளைப் பலி கொடுக்காதீர்கள்.

தாய் தகப்பன்மார் ஆலோசனை வெகு முக்கியமானது. ஆனால் இன்றியமையாதது. வதூவரர்களுடைய சம்மதம், காதல் உற்சாகம் வேறு, சம்மதம் வேறு. காதல் உற்சாகம் இல்லையாயின் தாய் தகப்பன்மார்களின் யோசனைதான் மிகவும் அவசியம். பெற்றோர்கள் எடுத்த ஓர் உத்தேசத்துக்குப் பெண்ணின் சம்மதமோ அல்லது மகனுடைய சம்மதமோ இல்லையாயின், அந்த உத்தேசத்தை விட்டு விடுவது நலம். பலாத்காரம் உபயோகித்தலும் கூடாது; அதற்கு உடன்படுதலும் கூடாது.

**சாஸ்திரம்**

நம்மைப் போல் பழைய வழக்கங்களையும் சாஸ்திரங்களையும் கௌரவிப்பவர்கள் உலகத்தில் வேறு யாருமில்லை. இது மிகவும் சரியே. ஆனால் உண்மையில் நம்முடைய சாஸ்திரங்கள் நமக்குக் கொடுக்கும் சுதந்திரத்தைப் போல் வேறு எந்த மதமும் கொடுக்கவில்லை. இதற்குப் பிரமாணம் மகாபாரதம் ஒன்று போதும். அதில் நடந்த திரௌபதி விவாகத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அக்காலத்தில் அனைவரும் அந்த விவாகத்தை மிகவும் தவறென்று கருதினார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் பெரியோர்கள் கூடி, சந்தர்ப்பத்தை உத்தேசித்துத் தீர்ப்பு சொன்னார்கள். ஆகாத காரியம் என்று முதலில் தோன்றியதைத் தருமத்துக்கு இசைந்தது என்று எவ்வளவு தைரியமாக முடிவு கூறினார்கள்! விவாகத்துக்குச் செய்யும் சடங்குகளையே மாற்றி ஒரு கன்னிகைக்கும் ஐந்து புருஷர்களுக்கும் அமைய முடித்து விட்டார்கள். புராணங்களில் இதைப் போல் பல சம்பவங்களைக் காணலாம். சந்தர்ப்பத்தை ஒட்டியும் காலத்தின் மாறுதல்களைக் கருதியும் விதிகளை மாற்றவும் வழக்கங்களைப் புறக்கணிக்கவும் பூரண சுதந்திரம் நம்முடைய சாஸ்திரங்களில் கொடுத்திருக்கிறது. அநேக துறைகளில் நாம் சர்வ சாதாரணமாய் இந்தச் சுதந்திரத்தை உபயோகித்து வருகிறோம். எல்லாத் தருமங்களுக்கும் மேலான சக்தி கொண்டது தூய்மையான காதல். அதைத் தடுத்தும், எதிர்த்தும் இல்லறம் நடத்துவது தருமமாகாது.

**செல்வ நிலை**

தரித்திரம், பணக் கஷ்டம் இவற்றை அதிகமாய்ப் பொருட்படுத்தல் கூடாது. வறுமைப் பிசாசைக் கண்டு பயப்பட வேண்டாம். தனித் தனியாகப் படும் கஷ்டத்தை, அன்புடன் கூடி வாழும் இருவர் ஒன்று சேர்ந்து சமாளித்தல் எளிதாகும். இருவரும் பங்கு போட்டுக் கொண்டு சிரித்து விட்டால் எல்லாக் கஷ்டங்களும் கரைந்து போகும். காதலின் அழகு வறுமையில் அதிகமாகவே பிரகாசிக்கும். தைரியமும் உண்மையான உள்ளக் கலப்பும் இருந்தால் வறுமையைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை.

**முடிவுரை**

நான் சொன்ன பேச்சுக்களை மேலெழுந்த வாரியாகப் படித்தால் சில இடங்களில் ஒன்றுக்கொன்று முரண்படுவதாகத் தோன்றும். உண்மையில் அவ்வாறில்லை. ஒரு முக்கியமான விஷயத்தின் எல்லா அம்சங்களையும் யோசித்துப் பல சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தும்படி முடிவு காண வேண்டுமானால் இப்படித்தான் சொல்லக் கூடும். யுவர்களும், யுவதிகளும், பெற்றோர்களும், வைதிகப் பற்றுள்ளவர்களும், சீர்திருத்தக்காரர்களும் நான் வெளியிட்டிருக்கும் கருத்துக்களை ஆழ்ந்து சிந்திக்க வேண்டுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

அன்று சொன்னேன் என் அதிகாரியிடம் நான் ஒன்றிற்கு 5½ கோடி கோப்பைகள் ப்ரூக் பாண்ட் தேநீர் அருந்தப் படுகிறது என்று!

நான் சொன்னேன்! ப்ரூக் பாண்ட் தேயிலை நித்தமும் புத்தம் புதியதாகத் திகழுவதின் காரணம், அவர்கள் கையாளும் அதிவேக விநியோக முறைதான்!

என் தலைமை அதிகாரி, "தெரிந்த விஷயம்தானே! மற்றெல்லாத் தேயிலையைவிட, மக்கள் யாவரும் விரும்பிப் பருகுவது ப்ரூக் பாண்ட் தேயிலையையே!" என்றார்.

**எப்பொழுதும்**
**இன்பம்**
**தப்பாது அளிப்பது**
**ப்ரூக் பாண்ட்**
**தேயிலையே**



ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

BB 271 K

# சமர்த்துக் கீதா

ராமப்பிரியா

**வா**சலில் போட்டிருந்த தாமரைப் பூக் கோலம் வாஸ்தவமாகவே பிரமாதமாக அமைந்திருந்தது. கீதாதான் அந்தக் கோலத்தைப் போட்டவள்.

"இன்று வெள்ளிக்கிழமையாயிற்றே! வாசலில் மாக்கோலம் போட்டுச் செம்மணிட்டு விட்டு வரக்கூடாதா? சதா படிப்பு மட்டும் இருந்தால் போதுமா? பெண்களுக்கு எல்லாம் தெரியத்தான் வேண்டும்!" என்று கோபித்துக் கொண்டேன்.

கீதாவின் முகம் சுண்டிப்போய் விட்டது. "காலையிலேயே ஏன் அம்மா கோபித்துக் கொள்கிறாய்? இதோ போடுகிறேன்!" என்று தாவணியை இழுத்துக் கட்டிக்கொண்டு மாவுப் பாத்திரத்தை எடுத்துச் சென்றாள்.

எனக்கு உள்ளே வேலை சரியாக இருந்ததனால் வாசற்பக்கம் போகவே முடியவில்லை. கீதா குளித்துச் சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கூடம் போய் விட்டாள். இந்த வருஷம் ஸ்கூல் பைனல் பரீக்ஷை எழுதுகிறாள். தினம் ஒரு பரீட்சை என்றுதான் பள்ளிக்கூடத்தில் பிராணனை எடுக்கிறார்களே! குமாரும் ரவியும் கூடப் பள்ளிக்கூடம் போயாயிற்று.

இவர் தம் தகப்பனாரைப் பார்க்க நேரு நகருக்குச் சென்றிருந்தார். அவர் வருகிறாரோ என்று பார்ப்பதற்கு வாசற் பக்கம் சென்றவள் யதேச்சையாக அழகான கோலத்தைப் பார்த்து விட்டேன்.

'நேற்றுக் குழந்தை கீதாவா இவ்வளவு அழகாகக் கோலம் போடுகிறாள்? அவள் பள்ளிக்கூடம் போவதற்கு முன்னமேயே கோலத்தைப் பார்த்து நன்றாக இருக்கிறது என்று சொல்லி இருந்தால் ரொம்ப சந்தோஷப் பட்டிருப்பாளே குழந்தை?' என்று எண்ணினேன்.

வாசல் கதவு இறக்கும் சத்தம் கேட்டது. அவர்தான் வாசலில் காரை நிறுத்திவிட்டு வந்து கொண்டிருந்தார்.

"கோலத்தைப் பார்த்தீர்களா? கீதா போட்டிருக்கிறாள்!" என்றேன் பெருமையாக.

அவரும் அதைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றார். இதழ் இதழாக எட்டு இதழ்கள் மலரும் தறுவாயில் இருக்கின்றன. இதழ்களைச் சுற்றி மெல்லியதாகச் செம்மண்ணைத் தீட்டிக் கோலத்தை மிகவும் சோபிக்கச் செய்திருந்தாள் குழந்தை.

" காலையில் நான் வெளியில் போகும் பொழுது அவள் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். செம்மண்ணை உன்னைப்போல் துணியினால் பட்டை போடாமல் சிறிய பிரஷினால் போடுவதைப் பார்த்தேன். 'பிரஷ் எதற்கு அம்மா?' என்று கேட்டேன்.

" 'அது வெறும் மண்தானே. இலேசாகத் தீட்டினால்தான் கோலமும் சோபிக்கும். செம்மண்ணுக்குப் பிரதானம் கொடுத்தால் கோலத்தின் அழகு எடுபடாது. கோலத்தைப் பிரமாதமாகப் போட்டுச் செம்மண்ணை இலேசாகப் போடுகிறேன்!' என்றாள். இவ்வளவு அழகாக அவளுக்கு எப்படிப் பேசத் தெரிந்தது என்று அதிசயித்துக் கொண்டே வெளியே போனேன். கோலம் இவ்வளவு தரமாக அமைந்ததையும் பார்த்தால் அவள் மகா கெட்டிக்காரிதான்!" என்று பெருமை பொங்கக் கூறினார். என் மனமும் பூரித்துத்தான் இருந்தது.

அவருக்கு இலை போட்டுப் பரிமாறினேன். "அந்த வீட்டில் எல்லாரும் சுகம் தானே!" என்று கேட்டேன்.

"உம்! நீ ஏன் வருவதே இல்லை என்று சித்தி கேட்டாள். உனக்கு ஒழிவில்லை என்றேன். கீதாவின் ஜாதகம் அப்பாவிடம் இருக்குமே என்று கேட்கத்தானே போனேன். எங்கேயாவது இடம் பார்க்கிறாயா என்று சித்தி கேட்டாள். 'உங்களுக்கெல்லாம் தெரியாமலா?' என்று சிரித்து மழுப்பினேன். அதற்கு அப்பா ஒரு வார்த்தை சொன்னார், ஜானு!" என்று முடிக்காமல் என் முகத்தையே பார்த்தார்.

"என்ன சொன்னார்?"

"கீதாவுக்கு வெளியில் எதற்கு வரன் பார்க்கிறாய்? ரமணியின் ஜாதகத்தோடு சரியாக இருக்கிறதா என்று பார்க்கக் கேட்கிறேன் போலிருக்கிறது!' என்றார் அப்பா. நான் ஒன்றும் சொல்லவில்லை. பேசாது வந்து விட்டேன்!" என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ரமணி வேறு யாருமில்லை; என்னுடைய நாத்தனாரின் பிள்ளைதான்.

" போதும், போதும்! என்னைப் போலவே கீதாவும் அந்த வீட்டுக்குள் நுழைந்து நான் பட்ட சிரமங்களைப் பட வேண்டாம். அதே மனுஷர்களிடம் வாழ்க்கை நடத்தவும் வேண்டாம்!" என்றேன் வெறுப்பாக.

என் கணவர் என்னையே ஒரு கணம் வெறித்துப் பார்த்தார். நான் என் கண்களில் பொங்கி வந்த கண்ணீரை அடக்கியவாறு அடுப்பங்கரைக்குச் சென்று விட்டேன்.

" அவளுடைய நலனில் எனக்கும் அக்கறையுண்டு. அவளும் சின்னக் குழந்தை இல்லை. இன்று காலையில் வெறும் செம்மண் இடுவதற்கு அவள் கொடுத்த விளக்கம் என்னையே திகைக்கச் செய்து விட்டது. அவள் மனத்தில் ரமணியின் மீது அன்பும் ஆசையும் இருக்குமேயானால் நாம் இருவரும் குறுக்கே நிற்க முடியாது. நீ நின்றாலும் நான் சம்மதிக்க மாட்டேன். அசடு மாதிரி இராமல், சமர்த்தாக மத்தியானம் வரையில் யோசனை செய். மாலையில் பள்ளிக்கூடம் விட்டு வந்தவுடன் கீதாவின் மனத்தை மெதுவாகக் கேட்டுப் பார்ப்போம். நான் வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே அவர் காரில் ஏறிக் கொண்டார்.

மஞ்சக்கிடம்பு கட்டிலில் உடம்பைக் கிடத்தினேன். பாழும் மனசு எங்கெங்கேயோ

சஞ்சரிக்கப் போய்விட்டது. என் கட்டுக்குள் அது அடங்கினால் தானே?

கீதாவுக்குப் பதினொரு வயது முடிந்து பதினைந்து வயதாகிறது. எனக்குக் கலியாணம் ஆகும் பொழுது பன்னிரண்டு வயது முடிந்திருந்தது. ஹைகோர்ட் நீதிபதியின் பிள்ளை தான் என் கணவர்.

"என்ன இருந்தாலும் இந்தப் பிள்ளை மூத்தாள் பிள்ளைதானே! இளையாள், அவள் தாயார் எல்லாரும் வீட்டில் இருக்கிறார்கள். அவர்களால் நம் குழந்தைக்கு ஏதேனும் கஷ்டம் ஏற்பட்டால்?" என்றாள் என் தாயார்.

"போடி, பைத்தியம்! அவர்கள் வீட்டில் அந்த மாதிரி சிறுமைகளுக்கெல்லாம் இடமே கிடையாது. சொந்தத் தாயாருக்கு மேல் அந்த அம்மாள் சிரித்துச் சிரித்துப் பேசித் தனக்கு மருமகள் வரப் போகிறாள் என்று ஒரே குஷியாக இருக்கிறாள். அந்த அம்மாளின் தாயாரும் ரொம்ப நல்லவளாகத்தான் இருக்கிறாள். அவர் நீதிபதியாக்கும்!" என்று அப்பா பெருமையாகச் சொன்னார்.

கலியாணமெல்லாம் முடிந்தது. நான் சாதாரணமாகக் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவள். பட்டணத்து நாகரிகமெல்லாம் தெரியாது. என் மாமியார் (இளையாள்) அவர் தாயார் எல்லோரும் ஒரே நாகரிகத்தில் திளைத்திருந்தனர். அவர்கள் பழக்க வழக்கமெல்லாம் பிடிபடுவதற்கே எனக்கு ரொம்ப நாட்கள் ஆயின. அதுவரையில் நான் அவர்களிடம் பட்ட பாடு! ஈசுவரனுக்குத் தான் வெளிச்சம்!

வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் என்னிடம் சிரிக்கச் சிரிக்கப் பேசியே என்னை மட்டம் தட்டுவார்கள். என்னைத் தாக்கி வைத்துப் பேசுவது போலவே பேசித் தாயாரும் பெண்ணுமாக ஒரேயடியாகக் கீழே தள்ளி விடுவார்கள்.

சித்தி சமையல் என்றால் பிரசித்தி. வீட்டில் சமையலுக்கு ஆள் இருந்தபோதிலும் ஒரு நாளைக்கு ஒன்றாகத் தன் கையால் விசேஷமாக ஏதாவது தயார் செய்வார் சித்தி. அதை என் மாமனாரிலிருந்து என் கணவர், சமையற்காரி வரையில் புகழ்ந்துகொண்டு சாப்பிடுவார்கள்.

"மருமகளுக்கு இதையெல்லாம் கற்றுக் கொடுத்திருக்கிறாயா செல்லம்!" என்று மாமனார் தம் மனைவியைக் கேட்பார்.

"குழந்தை அவள்! கொஞ்ச நாட்களுக்குக் காரியம் செய்யாமல் அலைய வரட்டுமே! சாரதா புக்ககம் போன பிறகு வீட்டில் பெண் குழந்தை இல்லாமல் தவித்தேன். ஜானுவுக்கு அலங்காரம் செய்து பார்ப்பதில்தான் எனக்கு இப்போது சந்தோஷம்" என்று தேனொழுகச் சொல்லி வாஞ்சையுடன் என்னைப் பார்ப்பாள் எனக்கே உச்சி குளிர்ந்து விடும். மாமனாருக்குத் தன் மனைவியின் மீது அன்பும் நம்பிக்கையும் அதிகமாகும்.

சாரதா என்பது என் நாத்தனார். மூத்தாள் பெண்ணிடமும் அத்தனை பிரியம் இருப்பதாகக் காட்டிக் கொள்வாள். அவள் பிறந்தகம் வரும் பொழுது, "ஜானு நன்றாகக் காரியம் செய்கிறாளா சித்தி!" என்று கேட்பாள்.

"அவள் ஒன்றும் ஆசையாகச் செய்கிறேனென்று வர மாட்டேனென்கிறாளே!

வயசானலும் தானகப் பொறுப்பு வராதா?'' என்று பெண்ணிடம் என்னைப் பற்றிக் குறை சொல்லுவாள் மெதுவாக.

சித்திக்குமேல் கெட்டிக்காரியாகி விடக் கூடாது என்றே என்னை மட்டம் தட்டினர்கள் சித்தியும் அவள் அம்மாவும்.

இரண்டு வருஷங்களுக் கெல்லாம் கீதா பிறந்தாள். நாத்தனர் சாரதாவின் கணவர் திடீரென்று இறந்து போகவே, அவள் ஐந்து வயதுப் பையன் ரமணியுடன் வீட்டுக்கு வந்து விட்டாள்.

மாமனருக்கு இது மாபெரும் அதிர்ச்சி. கீதாவை எனக்குச் சரியாக வளர்க்கத் தெரிய வில்லை என்ற குற்றச்சாட்டுகள் கிளம்பின. குழந்தை யென்றல் ஜுரம் வராதா! 'என் கவனக்குறைவுதான் அவளுக்கு ஜுரம் வந்து விட்டது' என்று சித்தி சொல்வாள்.

சாரதா வீட்டோடு வந்தபிறகு வீட்டின் நிலைமையை ஒருவாறு புரிந்து கொண்டாள். ''ஜானு! நீ ரொம்பச் சாது; வெகுளி!'' என்றள் தனியாக என்னிடம்.

நான் சிரித்தேன். ''நீங்கள் சொல்வதற்குப் பொருள் அசடு. கவனமில்லாதவள் என்று இங்கு எல்லாரும் சொல்கிருர்கள்'' என்றேன்.

சாரதா என்னை வியப்புடன் பார்த்தாள். 'இவ்வளவு பேசத் தெரிகிறதா உனக்கு!' என்று அர்த்தம் அந்தப் பார்வைக்கு.

அடுத்தடுத்துக் குமாரும், ரவியும் பிறந் தார்கள். எனக்குப் பயமெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகப் போய்த் தைரியம் வந்து கொண்டிருந்தது. நானே தனியாக எல்லாம் செய்யக் கற்றுக் கொண்டேன்.

''பேஷ்! ஜானு செய்ததா! ரொம்ப ஜோர்!'' என்று மாமனர் நான் செய்த தின் பண்டங்களை அனுபவித்துச் சாப்பிடுவார்.

''போதுமே! மூன்று பிள்ளைகள் பெற்ற பிறகு காரியம் செய்கிருளே! அதற்கா இந்த சபாஷ் பட்டம்? ஒவ்வொன்றையும் சொல் லித் தருவதற்குள் என் தாவு தீர்ந்தது எனக் கல்லவா தெரியும்!'' என்று கொடூரமாகச் சொல்வாள் சித்தி.

''பதினென்று வயதில் இந்த வீட்டுக்குள் நுழைந்து இரண்டு குழந்தைகளுக்குத் தாயார் ஸ்தானம் வகித்தாயே! உன்னை ஒருவரும் புகழக் காணேமே!'' என்று பெண்ணுக்கு ஒத்துப் பாடுவாள் சித்தியின் தாயார் உள்ளே இருந்தபடியே. என் மாமனர் எழுந்துபோன பிறகுதான் இந்த வார்த்தை சொல்வாள்.

நான் பெருமூச்சுடன் சாரதாவைப் பார்ப் பேன். அவள் சித்தியின் ஆதரவின் கீழ் இருக் கும்படி விதி சதி செய்து விட்டது. அவளும் வாயைத் திறக்காமல் என்னைப் பார்ப்பாள்.

மாமனர் தினமும் எத்தனையோ குற்றவாளி களைப் பார்க்கிருர். கொலை செய்தவருக்குத் தண்டனை கொடுக்கும் அளவுக்கும் அவருக்குச் சக்தி, அதிகாரம், புத்தி எல்லாம் இருக் கின்றன. வீட்டில் ஒரு இளம் பெண்ணை வார்த்தைகளால் ஒரு ஆத்மாவைக் கொலை செய்வதைத் தடுக்க அவரால் முடியவில் லையே என்று வருத்தப்படுவேன்.

என் கணவருக்கு இந்தச் சமயத்தில் வக்கீல் வேலையில் பணம் வர ஆரம்பித்தது. மாம னரும் வேலையிலிருந்து ஓய்வு பெற்ருர்.

நகரத்தின் மறுகோடியில் உருவான நேரு நகரில் பிரமாதமாக வீடு கட்டிக் கொண்டு மாமனார் அங்கே போக யத்தனம் செய்தார்.

''நாமும் அப்பா கூடத்தான் போக வேண்டும் போலிருக்கிறது'' என்றார் என் கணவர்.

''தேள்கடியைக்கூடப் பொறுத்துக் கொள்ளலாம். இருபத்துநாலுமணி நேரத்துக்கு மேல் அந்த வலி இருக்காது. 'நசுக், நசுக்'கென்று சதா கடித்துக் கொண்டிருக்கும் மூட்டைப் பூச்சிக் கடியைப் பொறுக்கவே முடியாது!'' என்றேன். அவர் சிரித்துக் கொண்டார்.

''ஏது ஜானு! நீகூடக் கெட்டிக்காரியாகிக் கொண்டு வருகிறாய்?'' என்றார். எனக்கு ஆத்திரம் வந்தது.

''என்றைக்கு நான் அசடாக இருந்தேன்? நீங்கள் எல்லாருமாக உங்களுக்கு மேலாக நான் போய்விடக் கூடாது என்று என்னை அசட்டுப் பட்டம் கட்டி வைத்திருக்கிறீர்கள்!'' என்றேன் படபடப்போடு. புக்ககத்திடம் சலாம் போட்டுக் கொண்டு பயந்து செத்துக் கொண்டிருக்கும் நான் என் கணவரைக் கண்டால் சீறுவேன். அவரும் என் மனநிலையைப் புரிந்துகொண்டு பேசாமல் இருந்து விடுவார்.

கணவருக்குக் கோர்ட்டு ரொம்ப தூரம். கீதாவுக்குப் பள்ளிக்கூடம் வசதியில்லை என்று சொல்லித் தனியாக இருந்து விட்டோம். இதில் மாமனாருக்குக்கூட வருத்தம். அவர்கள் எல்லோரும் நேரு நகருக்குப் போய் விட்டனர். என் கணவருக்குச் சம்பாத்தியம் பெருக ஆரம்பித்தது. அவர் சம்பாதித்த பணத்தைக் கொண்டே அழகாகச் சிறிய பங்களாவை விலைக்கு வாங்கிக் கொண்டோம்.

தனியாகப் போன பிறகு நான்கிழமைகளில் மாமனார் வீட்டுக்குப் போய் வருவதும், சேர்ந்து இருக்கவும் ஆரம்பித்தோம்.

சித்தியும் அவள் அம்மாவும் என்னைத் தலைமேல் தாங்க ஆரம்பித்தார்கள். ''ஜானு கெட்டிக்காரி! அவள் என்றைக்குமே சமர்த்துத்தான்! என்னிடம் டிரெயினிங் கத்துக் கொண்டவள்'' என்று தனக்கும் சேர்த்துப் புகழ்மாலை சூட்டிக்கொள்வாள் சித்தி.

டீணி நாலு அடித்தது. திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். பழைய சம்பவங்களில் மனத்தை லயிக்க விட்டிருந்த எனக்கு நேரம் போனதே தெரியவில்லை. குழந்தைகளும் இவரும் வந்து விடுவார்களே என்று பரக்கப் பரக்க அடுப்பை மூட்டப் போனேன்.

குழந்தைகளுக்கும் கணவருக்கும் காப்பி டிபன் கொடுத்தாகி விட்டது.

வாசலில் போட்டிருந்த சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். அவர் காலையில் நேரு நகருக்குப் போனதையெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார்.

''ரமணிக்குக் கீதாவைக் கொடுத்துவிடு என்கிறார் அப்பா!'' என்றார் என் கணவர். கீதாவுக்காக மறுமுறை சொல்கிறார் என்று ஜனித்துக் கொண்டேன். கீதாவின் முகம் செம்மை படர்ந்து மலர்ந்தது. ''எனக்கு இப்போ கலியாணத்துக்கு என்ன அவசரம்?'' என்றாள் கீதா நாணத்தோடு.

''என்னை அசடு அசடு என்றார்கள்! கீதாவை அசட்டின் பெண் என்று சொல்வார்கள்!'' என்றேன் ஆத்திரமாக.

கீதா என்னிடம் வந்து உராய்ந்தவாறு உட்கார்ந்தாள். தன் கைகளினால் என் கழுத்தைக் கட்டிக் கொண்டாள். அந்த நிமிஷத்தில் என்னையே மறந்தேன். நானும் அவளை அணைத்துக் கொண்டேன்.

''அம்மா! நான் போட்ட கோலம் பார்த்தாயா?'' என்று கொஞ்சியபடி கேட்டாள் நான் பெற்ற செல்வம்.

''பார்த்தேன் கண்ணே! ரொம்ப அழகாக இருந்தது, தங்கம்!'' என்றேன் மகிழ்ச்சியுடன்.

''அம்மா! செம்மண் இட்டியதால்தானே அம்மா கோலத்தின் அழகு நன்றாகத் தெரிந்தது! வெறும் கோலம் போட்டாலும் நன்றாக இருக்காது. வெறும் செம்மண் மட்டும் கொட்டினாலும் சகிக்காது. அந்த மாதிரி எங்க அம்மா மட்டும் இருந்தால் அம்மா சமர்த்து தெரியாது. அம்மாவை அசடு, அசடு என்று செம்மண் இட்டமாதிரி சொன்னதால்தான் அம்மாவின் சமர்த்து 'பளிச்'



என்று மாக்கோலம் மாதிரி தெரிய ஆரம்பித்தது. என் அம்மா நல்ல அம்மா! சமர்த்து அம்மா!'' என்று என்னைக் கொஞ்சி விட்டு உள்ளே ஓடியே போய் விட்டாள். அவள் மான்போல் துள்ளிக் குதித்துக் கொண்டு போவதையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

''கேட்டாயா ஜானு இதோ சொல்வதை! எவ்வளவு அழகாக அவள் எண்ணத்தைச் சொல்லி விட்டாள். கோலத்துக்குச் செம்மண் எத்தனை அவசியமோ, அத்தனை அவசியம் வாழ்க்கைக்கு எதிர்ப்பு என்று! ரமணிமேல் அவளுக்கு ரொம்ப ஆசை. அவனும் இதோ வென்றால் உயிராக இருக்கிறான். இந்த இரு இளம் உள்ளங்களைப் பிரித்து விடாதே!'' என்றார். அவர் குரலில் ஒலித்த கனிவு என்னை நெக்குருகச் செய்தது.

வாசலில் போட்ட தாமரைக் கோலம் செம்மண் தீட்டிய பூதழ்களோடு மலர்ந்து சிரித்தது. இதோவின் சமர்த்தை எண்ணி மகிழ்ந்து வியப்படைந்தேன்.

# படித்துப் பாருங்கள்

## சுதந்திரப் பாலம்

ருஷ்ய நாட்டு ஆட்சிமுறைகளைப் பற்றியும், மக்களின் வாழ்க்கையைப் பற்றியும் அநேகமாக எல்லாரும் படித்திருப்பார்கள். இந்நூலில் அந்நாட்டு ஆட்சி முறைகளின் விபரீதங்களையும், ஆதிக்க வெறியையும் சாங்கோபாங்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. ருஷ்ய ஆதிக்கத்துக்கு உட்பட்டு, பயங்கர முறைகளை அநுபவித்து மனம் நொந்துபோன பல்லாயிரக்கணக்கான ஹங்கேரியர்கள் தாய் நாட்டை விட்டு வெளியேறி எவ்விதம் பிற நாடுகளில் புகலிடம் தேடினர் என்பது இந்நூலில் விவரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

இந்நூலை எழுதிய ஜேம்ஸ் ஏ. மிச்னெர் என்னும் அமெரிக்க ஆசிரியர் ஆஸ்திரியா-ஹங்கேரி எல்லையில் பல ஊர்களில் தங்கி, பல ஹங்கேரியர்களுடன் பேசி, புரட்சியில் பங்கு கொண்டவர்களிடமிருந்து நேரிடையாக அதன் காரணத்தையும், அப்போது நிகழ்ந்தவைகளையும் அறிந்துகொண்டு இந்த நூலை எழுதி யிருக்கிறார். மெய்சிலிர்க்கச் செய்யும் சம்பவங்கள் நிறைந்த இந்நூலைப் படித்துப் பார்க்க வேண்டியதுதான்.

மொழிபெயர்ப்பு: ரா. நாராயணன் பி. ஏ., பி. எல்.; பிரசுரம்: பேர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1; விலை: 75 ந. பை.

## கே. ஈச்வரதத் ஜெயந்தி மலர்

தம்முடைய நல்ல பெயருக்கு மாசு ஏற்படுத்திக் கொள்ளாமலும், மற்றவர்களுடைய வெறுப்புக்கோ, துவேஷத்துக்கோ ஆளாகாமலும், சிரமங்களை மிகுந்த பத்திரிகைத் தொழிலில் உண்மையுடனும் சாமர்த்தியத்துடனும் உழைத்து நாட்டின் முதன்மை ஸ்தானத்திலுள்ள அறிஞர்களது பாராட்டுதலையும் பெற்ற ஒருவர். உண்மையிலேயே சிறப்பு வாய்ந்த உன்னத மனிதர் என்பதில் ஐயமில்லை. அப்படிப்பட்ட ஒருவர் கே. ஈச்வரதத். பத்திரிகை உலகத்தில் அவரைத் தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள்.

முப்பதாண்டுகளுக்குமுன் காலஞ்சென்ற பிரகாசம் நடத்திவந்த 'ஸ்வராஜ்யா'வில் பணியாற்றி, அலஹாபாத்தில் மோதிலால் நேருவின் ''இண்டிபெண்டென்ட்'' பத்திரிகையில் ஊறி, சிந்தாமணியின் ''லீடரில்'' இணைந்து ஸப்ரூவின் சகவாசத்தில் பண்பட்டுத் தமது ''இருபதாம் நூற்றாண்டு'' பத்திரிகையில் நறுமணம் கமழப் பிரகாசித்தார். இந்தப் பத்திரிகை சில காலம்தான் நடந்தது. ஆனால் அதன் மூலம் திரு ஈச்வரதத்தின் பெருமை பலருக்குத் தெரிந்தது. அவர் எழுதிய ''Street of Ink'' (பத்திரிகையாளர் வீதி) குணச் சித்திரத்துக்கு இணையற்றது. அன்னாரின் அறுபதாவது ஆண்டு விழா சமீபத்தில் புதுதில்லியில் மத்திய சர்க்கார் உள்நாட்டு மந்திரி பண்டிட் பந்த் தலைமையில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அது சமயம் அவருடைய அபிமானிகள் அவருக்கு அன்பளிப்பாக அளித்த நினைவு மலர் அவருடைய நட்பு எவ்வளவு உயர்வானது, விரிவானது என்பதைக் காட்டுகிறது. தலைவர் ராஜாஜி, பிரதமர் நேரு, டாக்டர் ராதாகிருஷ்ணன், மீர்ஸா இஸ்மெயில், டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர், வி. டி. கிருஷ்ணமாச்சாரி முதலிய பல பிரமுகர்களின் வாழ்த்துரையும் ஆசியும் அனுப்பியுள்ளார்கள். அவரைப் பற்றிய பல சிறப்புரைகளைக் கொண்டது இந்த ஜெயந்தி மலர்.

கே. ஈச்வரதத் ஜெயந்தி மலர்—பதிப்பாசிரியர் எ. வி. ராஜேச்வரராவும், எம். வி. ரமணராவும்: புது தில்லி.

## இருட்டு

அவள் பெயர் வெண்ணிலா. உருவமும் வெண்ணிலவுதான். ஆனால் குணம்—ஆம். பைசாசத்தின் குணம். அவள் இருட்டையே விரும்பினாள். வெளிச்சத்தில் இருப்பதையே அவள் விரும்புவதில்லை. அவள் பெயருக்குப் பொருத்தம் இல்லாமல், அமாவாசை வந்து விட்டதென்றால் கைகொட்டி உற்சாகப்படுவாள். அது அவளைப் பற்றியிருந்த பயங்கரமான நோய். கடைசியில் அது அவளைத் தீர்த்து விடுகிறது. அந்நோய் பேயாக மாறி விடுகிறது. அதன் காரணமாகப் பயங்கரத் தோற்றங்கள்.

இச் சிறு நாவலில் ஆசிரியர் நீச சக்தி வாய்ந்த பேயையும், உத்தம சக்திவாய்ந்த ஸ்ரீ ராமநாமத்தின் சக்தியையும் கதையோடு சேர்த்து மிகவும் அழகாகப் புனைந்திருக்கிறார்.

எழுதியவர்: எம். வி. வெங்கட்ராம்; பிரசுரம்: வானதி பதிப்பகம் தி. நகர், சென்னை-17: விலை: 1.25 ந. பை.


ராம்தீர்த் யோகாஸ்ரமத்தின் சில செயல்கள்
At the time of lecture
டைரக்டர் : ஸ்ரீ யோகிராஜ் உமேஷ்சந்த்ரஜீ
ராம்தீர்த் பிராமி ஆயில் - ஸ்பெஷல் நெ. 1
கூந்தல் தைலம், மூளைக்கு ஔஷதம், கண்களுக்கும் ஞாபக சக்திக்கும், ஆழ்ந்த நித்திரைக்கும்; உடல் வலியைப் போக்குவதிலும், ராம்தீர்த் பிராமி ஆயில் யாவருக்கும், எக்காலத்தும் உகந்தது. கிடைத்தற்கரிய பலவித மூலிகைகளினால் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ராம்தீர்த் பிராமி ஆயில் இப்பொழுது எல்லா இடங்களிலும் புதிய பாட்டிலில் கிடைக்கிறது.
பெரிய பாட்டில் விலை ரூ. 4/-; சிறியது ரூ. 2/-
எங்கும் கிடைக்கும்
SHRI RAMTIRTH YOGASHRAM, DADAR, BOMBAY-14.

# ராஜாஜியின் மணிமொழிகள்

கடவுளிடம் நிலையான நம்பிக்கை கொள்ள வேண்டும். நம்பிக்கையற்றவர்களைப் பற்றி நாம் அதிகமாகக் கவலைப்பட வேண்டாம். நாம் இவர்களைப் பற்றி அதிகமாகச் சிரத்தை காட்டிக் கவலைப்பட்டோமானால் கொஞ்சம் கொஞ்சமாக நாமே கடவுளிடம் நம்பிக்கை இழந்து விடுவோம்.

★

நாம் கோருவது சுகம். இதை மறந்து விட்டு, காகிதத்தில் எழுதிய பணத்தின் கணக்கே சுகம் என்று கற்பனை செய்து அதற்கு அடிமையாகப் போகிறோம். முன்காலத்திலாவது பணம் என்பது தங்கம் வெள்ளியாக இருந்தது. கைநிறைய எடுத்து அள்ளும் பான்மை கொண்டதாக இருந்தது. அள்ளியும் எண்ணியும் மடையர்கள் இன்பம் அடையக்கூடியதாக இருந்தது. இந்தக்காலத்தில் அதுவும் இல்லை.

★

வேறுபாடுகளெல்லாம் வேறுபாடுகளே யன்றி உயர்வு தாழ்வு குறிப்பன அல்ல என்பதை நாம் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். உயர்வு தாழ்வு கற்பியாமல் இருந்தால் எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

★

இலைகளின்றி மரம் வளராது. அதுபோலவே குழந்தைகளின்றி மனிதன் வளர முடியாது. சிசுக்களிடம் அன்பு காட்டாத மனிதன், மனிதன் அல்ல.

★

இப்போது சில சிறுகதைகளைப் பார்த்தால் நண்பர்கள் தங்கள் மனைவிமார்களைக் கோஷாவில்தான் வைத்துக் காப்பாற்ற வேண்டும் போலிருக்கிறது. ஆணும் பெண்ணும் சேர்ந்து பேசுவதே அபாயம் என்று இப்பொழுது வெளியாகிவரும் கதைகளினால் ஏற்படும் போலிருக்கிறது. கதையில் ஒருத்தியை ஒருவன் சந்தித்ததுமே தருமத்துக்கு அபாயம் நேரிட்டு விடுகிறது. இத்தகைய இலக்கியத்தை உண்டாக்குவது எளிது: விற்பதும் எளிது. கள்ளிப் பலகையில் தச்சவேலை செய்வது எளிது. ஆனால் அப்படிச் செய்த சாமானில் உறுதியில்லை; பயனும் இல்லை. வழிபுரண்ட காதலைக் கொண்ட அவசரமாகத் தோற்றுவிக்கும் சிறுகதைகளும் இவ்வாறே பயனற்றவை என்பதோடு நிற்பதில்லை. இலக்கியம் என்று ஏமாற்றிச் சமூகத்துக்கு விஷம் ஊட்டுவது போலாகும்.

★

சிற்பம் எவ்வளவு அழகு வாய்ந்ததாயிருந்தாலும், உடல் எவ்வளவு ஆரோக்கியம் கொண்டதாயிருந்தாலும் சரிவரக் கவனித்துப் போற்றாமல் விட்டுவிட்டால் கெட்டுப் போகும். பெரிய மாளிகையானாலும் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்துக் கொள்ளாமற் போனால் குடியிருக்க இடமும் வசதியும் போதாமல் போகும். பாஷையும் இவ்வாறே போற்றப் படாமற் போனால் நாளா வட்டத்தில் எந்தப் பாஷையும் அழகு குன்றி, சொல் வளம் குன்றி, லாகவமும் குன்றியதாகத் தோன்றும். உண்மையில் குன்றியும் போகும்.

★

விஞ்ஞானம், க்ணிதம், அல்லது மனித ஒழுக்கம் சம்பந்தமாகப் புதிய விஷயங்களைக் கண்டுபிடிப்போருக்கு ஒரு கஷ்டம் உண்டு. தாங்கள் கண்டுபிடித்ததை அஞ்ஞானம் நிறைந்த இவ்வுலகில் எவ்விதம் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருவது என்பதுதான் அந்தக் கஷ்டமாகும்.

★

சாஸ்திரங்களால் என்ன பயன் என்று சிலர் கேட்கிறார்கள். உண்மையில் அவை அறிவுப் பொக்கிஷங்கள். நம் நன்மைக்காகவே அவை ஏற்பட்டுள்ளன. இந்த விலைமதிக்க முடியாத பெரும் சொத்துக்களான சாஸ்திரங்கள் இல்லாவிட்டால் நாம் இன்றுள்ள நிலையில் இருந்திருக்க மாட்டோம். அவற்றில் உள்ள உபதேசங்களை நாம் கடைப்பிடிக்கும் போதுதான் உண்மையான தார்மீக வாழ்க்கை நடத்த முடியும்.

★

மரங்களுக்குச் சூரிய கிரணங்களைப் போல் சிறுவர்களுக்குச் சந்தோஷம் அவசியம். களிப்பின்றிக் குழந்தை வளர முடியாது. வெறும் எண்ணும் எழுத்தும் படிப்பும் போதிப்பது, சூரிய வெளிச்சமில்லாத மரத்துக்கு எரு போடுவது போலாகும்.

வண்டி புறப்பட்டது. அப்புறம்தான் சந்திரநாதனுக்கு நிம்மதி உண்டாயிற்று.

இன்னும் மூன்று நான்கு மணிநேரம் பிரயாணம். அப்புறம் உதகமண்டலத்துக் குன்றுகளும் குளிர் காற்றும் கோடையின் வெப்பத்தில் எத்தகைய குளுமையை அள்ளி வீசும்!

தலையைத் திருப்பிப் 'பர்த்'தில் படுத்திருந்த தன் மனைவி நீலம்மாளைப் பார்த்தான் சந்திரநாதன். அழகியமென்மையே உருவான அவள் முகத்தில் குழந்தையின் கள்ளங்கபடமின்மை தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

சந்திரநாதன் சென்னைக் கல்லூரி ஒன்றில் தத்துவப் பேராசிரியராக வேலை பார்த்து வந்தான். மதிப்பு, மரியாதை, பணங்காசு, சுக-சௌக்கியம் எதற்கும் குறைவில்லை. இரண்டு ஆண்டுகளுக்கு முன்புதான் அவனுக்குத் திருமணம் நடந்தது. அவனுக்கு வாய்த்த மனைவி அழகியாகவும் நற்குண நற்செய்கை படைத்தவளாகவும் இருந்தாள்.

சென்னையின் கடும் கோடையைத் தாங்க முடியாமல் அவன் தன் மனைவியுடன் விடுமுறையைக் கழிப்பதற்காக மலைப் பிரதேசத்துக்குப் போய்க் கொண்டிருந்தான்.

அடுத்த ஸ்டேஷன் வந்தது. அது பெரிய ஜங்ஷன். வண்டி அங்கே அரை மணி நேரம் தங்கும். சற்று நேரம் பிளாட்பாரத்தில் இறங்கி நடந்தால் என்ன என்று எண்ணிய சந்திரநாதன் கீழே இறங்கினான். அதற்குள் யாரோ அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுவது காதில் விழுந்தது. "வணக்கம், மிஸ்டர் சந்திரநாதன்! உங்களை இங்கே பார்த்தது..."

திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான் சந்திரநாதன். எதிரே ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான்: அவன் அணிந்திருந்த ஆடை, அவன் ஒரு செல்வச் சீமானது குடும்பத்தைச் சேர்ந்தவனாயிருக்க வேண்டும் என்று பறை சாற்றிக் கொண்டிருந்தது. சிவந்த மேனி. உயரமான கம்பீரத் தோற்றம். கட்டுமஸ்தான தேகம். யோசிக்க யோசிக்கச் சந்திரநாதனுக்கு அவனை முன்பு எங்கே பார்த்திருக்கிறோம் என்பது நினைவுக்கு வரவில்லை. அவன் பேச வாய் திறப்பதற்கு முன்பாகவே வாலிபன் தொடர்ந்தான்:

"மன்னிக்க வேண்டும். நான் தங்களது விலைமதிக்க இயலாத நேரத்தை வீணாக்கிக்




கொண்டிருக்கிறேன். வெகு நாட்களாகவே தங்களைநேரில்காணவேண்டும் என்று ஆசை."

சந்திரநாதன் கம்பீரமாக நகைத்தவாறு, "அது சரி! தாங்கள் யார் என்று நான் தெரிந்து கொள்ளலாமோ?" என்றான்.

வாலிபனும் சிரித்தான்.

"என்னைப் பற்றித் தெரிந்து கொள்வதினால் தங்களுக்கு எவ்விதப் பிரயோசனமும் இல்லை.



லட்சக் கணக்காக இருக்கும் தங்கள் விசிறிகளிலே நானும் ஒருவன். அது சரி! இப்பொழுது என்ன என்ன படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?''

இடியென்று சந்திரநாதனது முகத்திலே எள்ளும் கொள்ளும் வெடித்தன. வெறி பிடித்தவன் போல் உரக்கக் கத்தினான்: ''போய்விடுங்கள், உடனே போய்விடுங்கள்! என் முன் நில்லாதீர்கள்!'' என்று.

வாலிபனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. பிரமித்துத் திக்பிரமை பிடித்தவன்போல் நின்றான். சந்திரநாதனும் அவனுக்கு அதிக அவகாசம் அளிக்காமல் பட்டென்று பெட்டியின் ஜன்னல் கதவைச் சாத்திவிட்டான்.

வண்டி ஸ்டேஷனிலிருந்து புறப்பட்டு, ஸ்டேஷனைத் தாண்டியும் விட்டது. சந்திரநாதன் சாத்தியிருந்த ஜன்னல் கதவைத் திறந்து வெளியுலகைப் பார்க்கலானான். அவன் முகத்திலே பற்பலவிதமான பாவங்கள் எழுந்து அழிந்து கொண்டிருந்தன.

ஜிலுஜிலுவென்ற காற்று வீசவே, கொதித்துப் போய்விட்ட அவன் மூளை கொஞ்சம் குளிர்ந்து ஒரு நிலைபெற்றது. அப்புறம்தான் அவனுக்கு முன்பின் அறிமுகமில்லாத அந்த வாலிபன்மீது தான் கோபித்துக் கொண்டது தவறு என்று தோன்றியது.

'ஆயினும் நான் என்ன செய்வது?'

சந்திரநாதன் தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்.

'ஒரு தடவை இரண்டு தடவை நடக்கும் விஷயமாயிருந்தால் சிரித்து மறந்து விடலாம்!'—எழுந்த கேள்விக்குத் தனக்குத் தானே பதிலும் கூறிக்கொண்டான் சந்திரநாதன்.

கல்யாணமான கொஞ்ச காலத்துக்குப் பிறகு நடந்த சம்பவம் அவன் நினைவுக்கு வந்தது. ஒரு நாள் இரவு நீலம்மா அவனைப் பார்த்துக் கேட்டாள்:

''என்ன ஒற்றுமை! உங்கள் முகத்துக்கும் சினிமா நடிகர் சந்திரநாதன் முகத்துக்கும்! உருவ ஒற்றுமையோடு பெயர் ஒற்றுமையும் கூடச் சேர்ந்து கொள்ள வேண்டுமா?''

சந்திரநாதன் ஒரு இளநகையை உதிர்த்து விட்டு மௌனம் சாதித்து விட்டான். இதே போல் ஒரு தடவை அவன் ஒரு பெரிய ஹோட்டலுக்குக் காப்பி சாப்பிடச் சென்றிருந்த பொழுது ஹோட்டல் முதலாளி முதற்கொண்டு சாதாரணச் சிப்பந்தி வரையில் அவனை நடிகன் சந்திரநாதன் என்றே எண்ணி ஏமாந்து பலத்த உபசாரங்களெல்லாம் செய்தனர். அந்தத் தடவையும் அவன் சிரித்து மழுப்பி விட்டான்.

சந்திரநாதன் தத்துவத்திலே புகழ் பெற்ற பேராசிரியன். அவனுடைய எத்தனையோ நூல்கள் அயல்நாடுகளிலே கூடப் புகழ் பெற்று விளங்கின. ஆனால்...ஆனால்...இன்று வரையில் யாரும் அவனைப் பேராசிரியர் சந்திரநாதனாகப் புரிந்து கொள்ளும் புத்திசாலித்தனத்தை ஒரு நாளாவது காட்டவில்லை. எல்லோரும் அவனைச் சினிமா நடிகன் சந்திரநாதனாகவேதான் கருதி வந்தனர்.

அவனைச் சந்தித்தவர்கள் எல்லாரும், நடிகர் சந்திரநாதனாகவே கருதி அபாரமாகப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஆகா! அந்தச் சினிமா நடிகன்தான் எத்தனை பாக்கியசாலி! சென்னையிலிருந்து இத்தனை தூரம் வந்த பின்னரும், எல்லோரும் அவனை அறிந்து கொள்கிறார்கள்!

இன்றுதான் முதல் தடவையாகப் பேராசிரியர் சந்திரநாதனின் மனத்திலே பொறாமைக் கனல் எழுந்தது.

''பெயரும் உருவமும் ஒன்றாக இருந்த பொழுதிலும் இருவரது பாக்கியத்திலும்தான் எத்தனை பெரும் வித்தியாசம் இருக்கிறது!''

சில மணி நேரத்துக்கு முன்பு தன் பாக்கியத்தை எண்ணிப் பூரித்திருந்த சந்திரநாதன் இப்பொழுது அதை ஒரே அடியாக மறந்து விட்டான்; உள்ளம் புண்பட்டான்.

உதகமண்டலம் ஸ்டேஷனை வண்டி அடைந்தபோது, பொழுது சாய்ந்து விட்டது. பெட்டியிலிருந்து இறங்கியதும், ஒரு நடுத்தர வயதுள்ள மனிதர் சந்திரநாதனை முக மலர்ச்சியுடன் வரவேற்றார்.

''தங்களது தந்தி எங்களுக்கு இன்று காலை கிடைத்தது. தங்கள் சௌக்கியத்துக்கான சகல வசதிகளையும் எங்களால் இயன்ற அளவு செய்து வைத்திருக்கிறோம். நான்தான் அந்த விடுதியின் மானேஜர். அனுமதி அளித்தால், பெட்டி படுக்கைகளை எடுத்துச் செல்ல உத்தரவிடுகிறேன்!'' என்றார்.

நீலம்மா வண்டியிலிருந்து இறங்குவதற்குத் தன் உதவிக் கரத்தை நீட்டியவாறே சந்திரநாதன் தலையசைத்து மௌனமாக அனுமதி அளித்தான். பகட்டான உடை அணிந்த ஹோட்டல் சிப்பந்திகள் வந்து வண்டியிலிருந்து பெட்டி படுக்கைகளை இறக்கினார்கள்.

ஹோட்டலுக்குச் சென்று சந்திரநாதன் தனக்காகத் தரப்பட்ட அறைக்குள் சென்றான். அவனுக்குப் பிரயாண அலுப்பெல்லாம் அந்தக்கணமே நீங்கிவிட்டது போன்ற புத்துணர்ச்சி உண்டாயிற்று.

சந்திரநாதன் அப்பொழுதுதான் முதல் தடவையாக உதகமண்டலத்துக்கு வந்திருந்



தான். அதனும் சென்னையிலிருந்து புறப்படுவதற்கு முன்பாகவே, தந்தி மூலம் தனக்கென்று அறை ரிஸர்வ் செய்து கொண்டான். வண்டி ஏறியதும் வழியிலேயே. தான் புறப்பட்டு விட்டதாகத் தந்தி மூலம் தகவலும் அனுப்பியிருந்தான்.

கோட்டைக் கழற்றிக் கட்டிலில் வீசி எறிந்த சந்திரநாதன் சாய்வு நாற்காலியில் சாய்ந்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் திடீரென்று துணுக்குற்றுக் கால்களை மேஜையிலிருந்து எடுத்துக் கீழே போட்டுக் கொண்டான். பிறகு சோபாவில் நிமிர்ந்து உட்கார்ந்தான். அடுத்தகணமே அவன் கைவிரல் ஹோட்டல் சிப்பந்தியைக் கூப்பிடுவதற்காக மின்சாரப் பொத்தானை அழுத்தியது.

சிப்பந்தி வந்ததும் மானேஜரைக் கூப்பிடுமாறு கூறிவிட்டு அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடை பயிலலானான். அவன் மூளையிலே ஒரு கேள்வி முளைத்து விட்டது.

“ஆமாம். நாம் முதல் தடவையாக உதகமண்டலத்துக்கு வந்திருக்கிறோம். ஹோட்டல் மானேஜர் நம்மை எப்படி அடையாளம் புரிந்து கொண்டார்?” என்ற கேள்வி விசுவரூபமெடுத்தது.

மானேஜர் வந்ததும் அவன் இந்தக் கேள்வியை அவரிடம் கேட்டும் விட்டான். மானேஜர் வினயமாகச் சிரித்துக் கொண்டார். “என்ன கேள்வி கேட்டு விட்டீர்கள், மிஸ்டர் சந்திரநாதன்? ஸ்டார்ஆப் உதகமண்டலம் ஹோட்டலின் மானேஜர் தங்களைப் போன்ற புகழ் வாய்ந்த பிரமுகர்களைப் புரிந்துகொள்ளவில்லை என்றால் என்ன பிரயோசனம்?”

“ஸ்டார் ஆப் உதகமண்டலமா?”

சந்திரநாதன் அவநம்பிக்கையோடு மானேஜரைப் பார்த்தான். அவன் ‘ரிஸர்வ்’ செய்திருந்த ஹோட்டலின் பெயர் அவனுக்கு நன்றாக நினைவிருந்தது. அவன் நெற்றிப் பொட்டிலே கையை வைத்து யோசித்தான். அவன் தங்கப் போவதாக இருந்த ஹோட்டலின் பெயர் ‘உதகமண்டல் பிளூடி.’

மானேஜர் சந்திரநாதனின் முகத்தில் அவநம்பிக்கை இழையோடுவதைக் கண்டாரோ, இல்லையோ, தம் சொற்களில் ஒரு அழுத்தம் கொடுத்துச் சொன்னார். “உண்மையாகச் சொல்கிறேன், மிஸ்டர் சந்திரநாதன்! நான் மனிதர்களைப் புரிந்து கொள்வதில் தவறே இழைப்பதில்லை. அதுவும் உங்களைத் தெரியாதவர் இருக்க முடியுமா? சில நாட்களுக்கு முன் நீங்கள் நடித்த புதுப்படம் ஒன்று இந்த ஊருக்கு வந்திருந்தது. ஆகா! அதற்கு என்ன நல்ல பெயர் தெரியுமா?” என்றார்.

உடனே போய்விடுமாறு வெறுப்புடன் ஜாடை காட்டினான் சந்திரநாதன்.

இங்கும் ஜனங்கள் என்னை நடிகன் சந்திரநாதன் என்றுதான் எண்ணுகிறார்கள். இத்தனை மதிப்பும், மரியாதையும், சினிமா நடிகன் சந்திரநாதனுக்காக நடந்து கொண்டிருக்கின்றன. இவர்களுக்கு நான் ஒரு தத்துவப் பேராசிரியன் என்று தெரிந்து விட்டால்...?'

...ஒரு அலட்சியப் பாவமே அவர்கள் உள்ளத்தில் உண்டாகும்!'

‘என்ன விசித்திரமான சேர்க்கை! என்ன அற்புதமான ஒற்றுமை! நடிகன் சந்திரநாதனும் அந்தச் சமயம் பார்த்துத்தானா உதகமண்டலத்துக்கு வர வேண்டும்? ஆனால்...’

ஒரு புதுக் கேள்வி பேராசிரியரின் மூளையிலே பளிச்சிட்டது.

‘சினிமா நடிகன் சந்திரநாதன் எங்கே? உதகமண்டலத்துக்கு வந்தும் கூட அவன் ஏன் இந்த ஹோட்டலுக்கு இன்னும் வரவில்லை?’

மாலை சரியாக ஏழரை மணிக்கு அவனுடைய இந்தக் கேள்விக்குப் பதில் கிடைத்து விட்டது. பிரயாணக் களைப்பு தீர்ந்ததும் சந்திரநாதன் வெளியே உலாவப் போவதற்காகப் படியிறங்கிக் கீழே வந்தான். ஆனால் முதலில் ‘உதகமண்டல் பிளூடி’ ஹோட்டலின் கௌண்டருக்குச் சென்று, தனக்காக ‘ரிஸர்வ்’ செய்யப்பட்ட அறை என்ன ஆயிற்று என்று கேட்க விரும்பினான். அதனும் நீலம்மாலை ஹோட்டலின் அறையிலேயே விட்டு விட்டு, தான் மட்டும் இறங்கி வந்தான்.

ஹோட்டல் ‘கௌண்டர் கிளார்க்’குக்கு எதிரே நின்று கொண்டு ஒருவன் ஏதோ விசாரித்துக் கொண்டிருந்தான். குமாஸ்தா

# யந்திரங்களின் வெற்றி ஒலி...

1957ல் ப்ஹ்ரீனிலிருந்து ஸ்ரீ பல்பீர்சிங் ஜம்ஷெட்பூர் வந்த போதுதான் ரூ 100 மில்லியன் செலவில் புதிய ப்ளூமிங் மில் நிறுவுவதற்கான இடம், சிறுமலையை வெட்டி, காடுகளை அழித்துச் சமதளமாக்கப்பட்டிருந்தது. இது, டாடா ஸ்டீலின் 2 மில்லியன் டன் விரிவான திட்டத்தின் ஓர் முக்கிய அமிசமாகும்.

இன்று இப்புதிய 46" ப்ளூமிங் மில் இந்தியாவிலே மிகப் பெரியது. இது, 2 மில்லியன் டன் உற்பத்தி செய்யும் சக்தி வாய்ந்தது; ப்ளூம்கள், ஸ்லாப்கள் மூலம் தண்டவாளங்கள், ப்ளேட்டுகள், தகடுகள், கட்டிட நிர்மாண எஃகுப் பொருள்கள் ஆகியவற்றையும் இன்னும் பிற பல பொருள்களையும் உற்பத்தி செய்வதற்குத் தயாராக விருக்கிறது.

சூயஸ் தகராறு காரணமாக. வெளியிலிருந்து முக்கிய சப்ளை வருவதில் தாமதம், பிற கஷ்டங்கள் ஆகியவை ஏற்பட்டிருந்தும், சிரத்தை மிகுந்த ஸ்ரீ பல்பீர்சிங் போன்ற பலரின் பெரு முயற்சியால் இப் ப்ளூமிங் மில் துரிதமாகப் பூர்த்தி பெற முடிந்தது. இந்த வகையில் அவரும் நூற்றுக் கணக்கான இந்தியர்களும், அமெரிக்க, ஜெர்மானிய தொழில் நிபுணர்களின் உதவியோடு இம்மகத்தான ப்ராஜெக்ட் மூலம் எஃகுப் பொருள்கள் உற்பத்திக்கும், இந்தியப் பொருளாதாரத்தைப் பலப்படுத்துவதற்கும் இரவு பகலாக உழைத்தார்கள்.

## டாடா ஸ்டீல்

**இரு மில்லியன் டன் உற்பத்திக்கு**

TN 3132



The Tata Iron and Steel Company Limited

வின் முகத்திலே திகைப்பும் கலவரமும் தாண்டவமாடிக் கொண்டிருந்தன. தற்செயலாகப் பேராசிரியர் சந்திரநாதனின் மீது பார்வை விழவே, அவள் தன்னையு மறியாமல் வீறிட்டுக் கதறிவிட்டாள். கூக்குரலைக் கேட்ட சந்திரநாதன் என்னவோ ஏதோ என்று விழுந்தடித்துக் கொண்டு அவள் அருகே ஓடினான்.

சமீபத்தில் வந்ததும், குமாஸ்தாவுக்கு அருகில் நின்று கொண்டிருந்தவனது பார்வையும் சந்திரநாதனது பார்வையும் ஒன்றை ஒன்று நோக்கின. சந்திரநாதனது கால்கள் நின்ற இடத்திலேயே வேரூன்றி நிலைத்து நின்றுவிட்டன. அந்தப் புதிய மனிதனது முகத்திலும் வியப்புக் குறி தாண்டவமாடியது. ஆனால் முதன் முதலில் அவன்தான் மௌனத்தைக் கலைத்தான். முன்னேறி வந்து சந்திரநாதனது கைகளைக் குலுக்கி, '' தங்களைக் காணும் பாக்கியம் கிடைத்தது குறித்து மிக்க மகிழ்ச்சியுறுகிறேன், புரொபஸர்! வெகு நாளைய ஆசை இன்றுதான் நிறைவேறியுள்ளது. அதுவும் எவ்வளவு விசித்திரமான முறையில், 'தெரியுமா ?'' என்றான்.

'' தாங்கள் என்று எண்ணி ஏமாந்து இவர்கள் என்னை இங்கே கொண்டு வந்து விட்டார்கள். என்னால் ஏற்பட்டிருக்கும் சிரமத்துக்கு வருந்துகிறேன்!'' என்றார் புரொபசர்.

நடிகன் சந்திரநாதன் குறுக்கிட்டு, ''எனக்கு ஒரு சிரமமும் ஏற்படவில்லை, புரொபஸர்! முதல் வண்டி தவறிவிட்டதனால், நான் இப்பொழுது தான் மாலை வண்டியில் இங்கு வந்து சேர்ந்தேன். அப்படி ஒரு சிரமம் ஏற்பட்டிருந்தாலும், உங்களைப் பார்த்த மகிழ்ச்சியில் இதெல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது!'' என்றான்.

பேராசிரியர் சந்திரநாதனுக்கு மேலே பேச இடம் கொடுக்காமலே, அவனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு நடிகன் சந்திரநாதன் படியேறி நடக்கலானான்.

'' என் காரியதரிசி எனது பொருள்களை எடுத்துக் கொண்டு இன்னும் சிறிது நேரத்துக்குள் வந்துவிடுவான். அதுவரை தங்களுக்குத் தடை ஒன்றும் இல்லையென்றால், தங்கள் அறைக்கு வந்து சற்று இளைப்பாறுகிறேன்!'' என்று கூறினான் நடிகன் சந்திரநாதன்.

''என் அறையிலா?'' படியேறிய பேராசிரியர் சந்திரநாதன் விசித்திரமான குரலில் கேட்டான். '' அறை உண்மையில் தங்களுடையதுதான். கேட்கப்போனால் அதற்காகவும் நான் தங்களிடம் மன்னிப்புக் கோர வேண்டும்! ஆரம்பத்திலேயே எல்லாம் ஆள் மாறாட்டத்துடன் ஆரம்பமாகியிருக்கிறது. என்னை வேறு ஒருவராக நினைத்து இங்கே கொண்டு வந்திருக்கிறார்கள் என்பது எனக்கு விளங்காமலே போய்விட்டது!'' என்றான்.

நடிகன் பேசாமல் முறுவலித்தவாறே மேலே நடந்தான்.

கதவு தட்டும் சத்தம் கேட்டு நீலம்மா கதவைத் திறந்தாள். அவள் ஒரு கணம் திகைப்பூண்டை மிதித்து விட்டவள் போல் பிரமித்துப் போய் நின்றாள். பேராசிரியர் சந்திரநாதன் முன்னே வந்து நிலைமையைச் சமாளித்தான். '' நீலம்மா! இவர் யார், தெரியுமா? இவர்தான் புகழ் பெற்ற நடிகர் சந்திரநாதன்: மிஸ்டர் சந்திரநாதன்! இவள் என் மனைவி!'' என்று அறிமுகப்படுத்தி வைத்தான். சந்திரநாதன் கை தூக்கி வணக்கம் தெரிவித்தான். நீலம்மாவும் மறு வணக்கம் தெரிவித்தாள். சிறிது நேரம் நின்று விட்டு அவள் அடுத்த அறைக்குச் சென்று விட்டாள்.

நீலம்மா அடுத்த அறைக்குச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் பேராசிரியர் சந்திரநாதனும் நடிகன் சந்திரநாதனும் பால்கனிக்குச் சென்று அமர்ந்து பேசலாயினர். சூடான காப்பியை அருந்தியவாறே நடிகன் சந்திரநாதன் கூறினான்:

'' புரொபஸர்! பல வருஷங்களாகத் தங்களைக் காணவேண்டும் என்ற அவா. தாங்கள் எழுதிய நூல்களைப் படித்து நான் தங்கள் விசிறிகளில் ஒருவனாகி விட்டேன். நான் சென்ற ஆண்டு இங்கிலாந்துக்குச் சென்றிருந்தேன். அங்கே எத்தனை வேடிக்கையான சம்பவம் நிகழ்ந்தது தெரியுமா, புரொபஸர்? நூற்றுக் கணக்கானவர் தத்துவ சாஸ்திரத்தில் இவ்வளவு உயர்ந்த நூல்கள் எழுதியதற்காக வாழ்த்துக்கள் தெரிவித்தார்கள். 'லண்டன் டைம்ஸி'ல் தங்கள் புகைப்படம் பிரசுரமாகி யிருந்திருக்கிறது. அதைப் பார்த்து விட்டு அனைவரும் என்னைத் தாங்கள் என்று எண்ணி அபார மரியாதை காட்டினார்கள்!

''அன்றுதான் எனக்கு நமது இருவருடைய பெயரோடு உருவமும் ஒற்றுமையாயிருக்கிறது என்பது தெரிய வந்தது. தங்களைக் காணவேண்டும் என்ற அவா அன்று முதல் இன்னும் அதிகமாகிவிட்டது புரொபஸர்... உங்களிடம் பொய் எதற்கு? அன்று எனக்கு உங்களிடம் முதன் முதலாக ஒரு பொறாமை உணர்ச்சியே உண்டாகிவிட்டது.''

நிறம் மாறும் பேராசிரியரின் முகத்தைப் பாராமலே சந்திரநாதன் சொல்லிக்கொண்டு போனான்: ''உங்களோடு எனக்கு அதிக அறிமுகமும் ஆகவில்லை. ஆயினும், கண நேரத்துக்குள் நான் தங்களிடையே கண்டது இந்த ஆயுள் உள்ள அளவும் மறக்க முடியாதது. தங்கள் மனைவியின் விழிகளிலே, தங்களிடம் அவர்கள் கொண்டிருக்கும் அபரிமிதமான அன்பும் அபார சிரத்தையும் மிளிர்வதை நான் இந்தக் கண்களாலேயே கண்டேன்.

'' நம் இருவரது பெயரும் ஒன்று. உருவ ஒற்றுமையும் கூட ஒன்றாக இருக்கிறது. ஆனால் இருவருடைய வாழ்க்கையிலும்தான் எத்தனை வேறுபாடு! தங்களுடைய வாழ்க்கையிலோ அன்பும் சிரத்தையும் ஆட்சி புரிகின்றன. என் வாழ்க்கையில்......?''

இதைக் கூறும்பொழுது சந்திரநாதனின் உதடுகளிலிருந்து ஒரு கசந்த சிரிப்பு தன்னைத் தானே எள்ளி நகையாடிக் கொள்வதுபோல் எழுந்தது. '' இரவு பகல் எந்நேரமும் நடிப்பிலேயே ஈடுபட்டு ஈடுபட்டு நடிப்புக்கும் அப்பால் வாழ்க்கை என்று ஒன்று இருக்கிறது என்னும் அறிவே எனக்கு மழுங்கிவிட்டது. உண்மையாகக் கூறுகிறேன், புரொபஸர்! தாங்கள் பெரும் பாக்கியசாலி. தங்களைப் போன்ற பாக்கியசாலியை நான் இன்றுவரை கண்டதே இல்லை!'' என்று நடிகன் சந்திரநாதன் தன் பேச்சை முடித்தான்.

பேராசிரியர் சந்திரநாதன் இமைக்காமல் வியப்பே உருவாகி நடிகன் சந்திரநாதனையே நோக்கினான். (தெலுங்குக் கதை)

**Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.**

# ப்ரீஸ் சோப்புக்கு ஒரு 'புதுமைத் தோற்றம்'!

Breeze

## புதிய மேலுறை

ரோஜா நிறமுள்ளது, லேஸ் போன்ற
சித்திர வேலைப்பாடு அமைந்தது




## புதிய வடிவம்

மழமழப்பு மிகுந்தது . . .
கண்கவரும் அழகுள்ளது

## அதிக நறுமணம்

உங்கள் மேனிமீது அதிக
நேரம் கமழ்ந்திருக்கும்

சரும ஆரோக்கியத்திற்கான ஆக்டமர் கலந்த சோப் — **ப்ரீஸ்**

BZ. 10-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon